மட

சிவமயம்.

கவிசக்கரவர்த்தி

சயங்கொண்டார்

பாடிய

# கலிங்கத்துப்பரணி

## மூலமும்

அரும்பொருள்விளக்கமுதலியனவும்.

---

இவை

மதுரைத்தமிழ்ச்சங்கத்துப்பிரதமவித்துவான்

ஸ்ரீ. உ - வே.

**திரு. நாராயணையங்காரவர்கள்**

மாணாக்கருளொருவனாகிய

இராதாமங்கலம் - ஆலங்குடி

**அ. கோபாலையனால்**

திருப்பனந்தாள் ஆதீனகர்த்தரும்

அருங்கலை விநோதருமாகிய

ஸ்ரீலஸ்ரீ - காசிவாசி

**சொக்கலிங்கத்தம்பிரான்சுவாமி**

அவர்களின்

பொருளுதவிகொண்டு

பதிப்பிக்கப்பெற்றன.

கமர்ஷியல் அச்சுக்கூடம்,

சென்னை.

உருத்திரோத்காரி ௵ வைகாசி ௴.

 [விலை ரூ. 1—12—0.

உ

# உரிமையாக்கல்.



பாங்குடன் சயங்கொண் டான்செய்
பரணியிற் பின்சேர் குற்றந்
தாங்கெட வினிதச் சேற்றுந்
தகைபெற வெணேப்பா லித்த
வேங்கட ரமணையற் கிவ்
வியன் பதிப் புரிமை யாக்கல்
ஆங்கட னெனக்கென் ருக்கி
யவன்குலம் வாழ்த்து வேனே.

[எனக்கு நெருங்கிய பந்துவும், ஆப்தரும், மகோபகாரியுமாயிருந்த நாகபட்டினந்தாலூகா **ராதாமங்கலம் ஸ்ரீமான் ரா. வேங்கடரமண ஐயரவர்களுக்கு**, அவர்கள் எனக்குச் செய்த நன்றியை யெண்ணி, இப்பதிப்பை யுரிமையாக்குகின்றேன்.]



# பொருளடக்கம்.



# இந்நூலின்

# அரும்பொருள் விளக்கத்தில் எடுத்தாண்ட நூல்கள்.

அகநானூறு.
இரங்கேசவெண்பா.
இராசராசசோழனுலா.
இலக்கணவிளக்கம்.
கணக்கதிகாரம்.
கம்பராமாயணம்.
குலோத்துங்கசோழனுலா.
சளுக்கியவிக்கிரமாதித்தன் சரித்திரம்.
சிலப்பதிகாரம்.
சிறுபாணாற்றுப்படை.
சீவகசிந்தாமணி.
சோழவமிசசரித்திரம்.
தாலவனமாகாத்மியம்.
திருக்கழுக்குன்றப்புராணம்.
திருக்குறள்.
திருநாகைக்காரோணப்புராணம்.
திருவாசகம்.
தேவாரம்.
தொல்காப்பியம்.
நன்னூல் - மயிலைநாதருரை.
பட்டினப்பாலை.
பழமொழி.
புறநானூறு.
பெரியபுராணம்.
பெருந்தேவபாணி.
பெரும்பாணாற்றுப்படை.
பொருநராற்றுப்படை.
மகாபாரதம்.
மணிமேகலை.
மதுரைக்காஞ்சி.
விக்கிரமசோழனுலா.
வில்லிபாரதம்.
விஷ்ணுபுராணம்.
வீரசோழியம்.

தொண்டைமான் கதை, சிலாசாசனங்கள், பட்டயங்கள்.

---

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உரு | உரு | ‘ அரசியாணை ’ | 2 ‘ அரசியாணை ’ |
| உசு | ஙஉ | நேறிபுதுக்கி | நெறிபுதுக்கி |
| ஙச | கஎ | றபிதாயிட் | றவிதாயிட் |
| எங | கரு | றண்ணினி | றண்ணளி |
| அச | ஙசு | அசுர | அசுரர் |
| கூரு | சு | கூறிகின் றது | கூறுகின் றது |
| கூஎ | ஙரு | பாந்தகன் | பராந்தகன் |
| ககக | ரு-சு | றுழை - இய | றுழைஇ - ய |
| ககஉ | உ0 | நாடகங்கள் | நடகங்கள் |
| ,, | ,, | நாட | நட |

# முகவுரை.

அம்பிகை சிவபிரா னுழை மாமுகன்
கலைமக ளேனுமிவர் கழல்கள்
நிலைபெற மலருமென் னேயமார் மனத்தே.

"பரணிக்கோர் சயங்கொண்டான்" என ஆன்றோராற் புகழ்ப் பெற்றவரும் கவிசக்கரவர்த்தியும் ஆகிய சயங்கொண்டார் பாடிய இக் கலிங்கத்துப்பரணி, சொல்வளமும்பொருள்வளமும் நிரம்பப்பெற்றுப் பரணிகளுக்குட் சிறந்துவிளங்குவது. *'**தெய்வப்பரணி**' என ஒட்டக்கூத்தப்புலவராற் பாராட்டப்பெற்றது. இப்பரணிக்குத் தலைவன் விசயதரன் என்னும் சோழசக்கரவர்த்தி. இவனுக்குக் குலோத்துங்கன், சயங்கொண்டான் என்பனபோன்ற வேறு பலபெயர்களும் உண்டு. இவனிடத்து முதன்மந்திரியாயிருந்த வண்டைநகர்க் கருணாகரத் தொண்டைமான் இவனுக்குப்பிரதிநிதியாகக் கலிங்கப்போர்க்குச் சென்று கொண்ட வெற்றியை இவன்மேலேற்றிப் 'புவிசக்கரவர்த்தி சயங்கொண்டானைக் கவிசக்கரவர்த்தி சயங்கொண்டான் பாடுதல் கடன்' என்று சயங்கொண்டார் இப் பரணியைப் பாடி இவனது அவைக்களத்தே அரங்கேற்றினார் என்பர்.

இந்நூல் மகளிர் முன்னிலையிற் பாடுவதாகப் பாடப்பெற்றிருக்கிறது. இதனுள்ளே, பாட்டுடைத்தலைவனாகிய விசயதரனது விருத்தாந்தத்திற் பிறப்பு வளர்ப்பு முதலிய முற்பாதி, காளி கூளிகளுக்குக் கூறியதாகவும், கலிங்கப்போர்க்குக் காரணம், போர், வெற்றி முதலிய பிற்பாதி, கூளி காளிக்குக் கூறியதாகவும் அமைக்கப்பெற்றிருத்தலின், அவற்றிற்கேற்ப முதலிற் காளியின் பிரஸ்தாபம் - காடுபாடியது, கோயில்பாடியது, தேவியைப்பாடியது என்னும் மூன்று பிரிவுகளினாலும், அதன்மேல் பேய்களின் பிரஸ்தாபம் - பேய்களைப்பாடியது என்னும் ஒரு பிரிவினாலும் கூறப்படுகின்றன. இவற்றிலிருந்து, பாலைவனத்

* "செருத்தந் திரிந்து கலிங்கரோடத் தென்றமிழ்த் தெய்வப்பரணி கொண்டு, வருத்தந் தணிந்துல காண்ட பிரானன் மைந்தற்கு மைந்தனை வாழ்த்தினவே"—தக்கயாகப்பரணி.

தின் நடுவில் அமைக்கப்பட்ட கோயிலிலே பேய்கள் சூழக் காளி தேவி கொலுவீற்றிருந்தமை பெறப்படும். அப்பால் (தா.143 முதல்) கதைத்தொடர்ச்சி. அது வருமாறு:—

முன்னொருகாலத்திலே தேவியின் கோபத்திற்கு அஞ்சி ஓடி இமயமலையில் ஒளித்திருந்து, அங்கே யிந்திரசாலவித்தையும் கரிகால்வளவன் எழுதிவைத்த சோழராசபாரம்பரியமும் கற்றுக் கொண்டு திரும்பிவந்த முதுபேய் ஒன்று, கொலுவீற்றிருந்த தேவியைத்தரிசித்து அவளுத்தரவு பெற்றுத் தான் கற்றுவந்த இந்திர சாலவித்தையைக் காட்டியும் சோழராசபாரம்பரியத்தைக் கூறியும் அவளை மகிழ்வித்தது. அங்ஙனம் மகிழ்ந்த தேவி சோழராசபாரம்பரியத்தின் ஈற்றிற் கூறப்பட்ட விசயதரனைப் புகழ்ந்தாள். அதனைக் கேட்டபேய்கள், நாங்கள் விசயதரனது ஆட்சிக்குட்பட்ட வுயிராய்ப் பிறவாமல் பேய்களாய்ப்பிறந்து கெட்டேம்; "அகளங்கன் நமர்க்கிரங்கான் அரசரிடுந் திறைக்கருள்வான் அவன்றன் யானை, நிகளம் பூண்டனவடியேம் நெடும்பசியான் அறவுலர்ந்து நெற்றாய்அற்றேம்." (தா. 205) "மூக்கருகே வழுநாறி முடைநாறி உதடுகளுந் துடிப்ப வாயை, யீக்கதுவுங் குறியாலுய்ந் திருக்கின்றேம் அன்றாகில் இன்றே சாதும்." (தா. 206) என்று முறையிட அவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த இந்திரசாலப்பேய் காளியை வணங்கி, 'தாயே! இமயமலையிலிருந்து நான் வரும் வழியிற் கலிங்கதேசத்திலே சில தீநிமித்தங்களைக் கண்டேன்' என்று, தான் கண்டவற்றை விரித்துக்கூறிற்று. உடனே பேய்கள் காளியைப்பார்த்து 'அன்னே! என்கொல்விளைவு' (தா. 212) எனக்கேட்க, காளி, எல்லாம் உங்களுக்கு நன்மைதான்; நமது கணிதப்பேய் ஒரு நற்கனவு கண்டதாகவும் அதற்குப் பலனாக ஒரு பரணிப்போர் ஏற்படும் என்றும் முன்னமே உரைத்திருக்கின்றது; அவ்வுரைப்படி உங்களுக்கு விரைவிற் பரணிக்கூழ் கிடைக்கும் என்றனள். அவ்வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில் பேய்கள் மகிழ்ந்து, தாயே! அப்பரணிக்கூழ் எங்கள் வயிற்றுக்குப் போதுமோ? என்று கேட்க, காளி அவற்றைப் பார்த்து நீங்கள் கவலைப்பட வேண்டாம்; இலங்கைப் போரினும் மேம்பட்டது கலிங்கப்போர்; அதற்குக் காரணம் என்னவென்றால், அந்தத்திருமாலே விசயதரனாக வுதித்திருக்கின்றான்; அவன்அவதார மகிமையைச் சொல்லுகிறேன் கேளுங்கள் என்றுதொடங்கி, விசயதரன் கங்கைகொண்டசோழபுரத்திற் பிறந்து வளர்ந்ததையும், கல்விகற்றுத் தேறிச் சக்கரவர்த்தி

யாகிச் சிலகாலஞ் சென்றபிறகு "பாலாற்றங் கரைமருங்கிற் பரிவேட்டையாடுதற்குப் பயணம்" (தா. 265) என்று ஆடம்பரத்துடன் புறப்பட்டு வழியிலே சிதம்பரத்தையும் திருவதிகையையும் தரிசித்துக்கொண்டு காஞ்சீபுரம் வுடைந்ததையும் விஸ்தாரமாகச் சொல்லிக்கொண்டிருக்கையில், கலிங்கப்போர்க்களத்திலிருந்து ஒருபேய் ஓடிவந்து பேய்களைப்பார்த்து "என்செயப் பாவிகாளிங் கிருப்பதங் கிதற்கு முன்னே, வன்சிறைக் கழுகும் பாறும் வயிறுகள் பீறிப்போன." (தா. 291) என்றது. அதனைக்கேட்ட பேய்கள் களித்துக் கூத்தாடின. அப்பொழுது காளிதேவி ஓடிவந்த பேயைப்பார்த்துப் போர்நடந்த விவரத்தை உள்ளபடிசொல்லுக என, அப்பேய் தாயே! "ஒருவர்க்கொருவாய் கொண்டுரைக்க வொண்ணாதெனினும் உண்டாகச், செருவைச் சிறியேன் விண்ணப்பஞ் செய்யச் சிறிது கேட்டருளே" (தா. 300) என்று தொடங்கி, விசயதரன் பரிவேட்டையாடிக் காஞ்சீபுரத்தில் இருந்தபொழுது ஒருநாள், தனக்குக் கீழ்ப்பட்ட அரசர்களுள்ளே கலிங்க தேசத்தரசனாகிய 'அனந்தபன்மன்' என்பவன் கப்பங்கட்டவில்லை யென்பதை அறிந்தவுடனே தன் முதன்மந்திரியாகிய கருணாகரத் தொண்டைமானை அனுப்பினதையும், அவன் நால்வகைச்சேனைகளுடன் சென்று பொருது வெற்றிகொண்டு திரும்பிவந்ததையும் விரிவாகக்கூறிப் பின்னும் "தேவாசுர ராமாயண மாபாரதம் உளவென், றோவாவுரை யோயும்படி யுளதப்பொரு களமே." (தா. 459) என்று முடித்து, அக்களத்தைப் பார்த்தருளும்படி வேண்டிற்று. உடனே காளிதேவி யெழுந்து பேய்களுடன் சென்று போர்க்களத்தைக் கண்டு அதிசயித்து, அவ்வதிசயங்களையெலலாம் பேய்களுக்கு ஒருவாறுகாட்டிப் பிறகு "களமடையக்காட்டுதற்குமுடிவதன்று.........கூழ் அடும்" (தா. 490) என்று கட்டளையிட, அவ்வாறே பேய்கள் கூழ் அட்டுப் படைத்து உண்டு களித்து ஆடிப் பாடி விசயதரனை வாழ்த்தின என்பதாம்.

இக் கலிங்கத்துப்பரணி இதற்குமுன் மூவரால் அச்சிடப் பட்டிருப்பினும் அப்பதிப்புக்களிலெல்லாம் பிழைகள் நிரம்பிக் கிடக்கின்றன வென்பது சென்ற 1921-ம் வருஷமுடிவில் எனக்குத் தெரியவந்தது. அதன்மேல், சென்னை யிராசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையிலுள்ள இரண்டுபிரதிகளையும் வைத்து ஒப்பிட்டுத் திருத்தினேன். அதிலிருந்து மற்றுஞ்சில பிரதிகள் கிடைத்தால் ஒருவாறு பரிசோதித்து அச்சிடலாமெனத் தோன்

றிற்று; அங்ஙனஞ் செய்யவேண்டியது அவசியமென நண்பர்களிற் சிலரும் என்னைத் தூண்டினார்கள். அவர்களுள் முதன்மையானவர், தமிழ்க்கும் தமிழ்ப் பண்டிதர்களுக்கும் என்னைப்போன்ற வித்தியார்த்திகளுக்கும் களைகணாயிருந்த ஸ்ரீமான் பாண்டித்துரைத்தேவரவர்களின் அபிப்பிராயப்படி மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் கௌரவ காரியதரிசியாகி உழைத்துவருபவரும், மதுரைப் பிரபல வக்கீல்களுள் ஒருவரும் ஆகிய ஸ்ரீமான் T. C. ஸ்ரீனிவாஸ ஐயங்காரவர்கள் B. A., B. L., M. L. C. அதேசமயத்தில் சென்னையில் வசித்த யாழ்ப்பாணத்துத் திருக்கோணமலை த. கனகசுந்தரம்பிள்ளை B. A. அவர்கள் தங்கள் கைப்புத்தகத்திலிருந்த சில திருத்தங்களை எனக்குத் தெரிவித்தார்கள்.

அப்பால், சென்ற 1922-ம் வருஷத்துக் கோடை விடுமுறைக் காலத்தில், தஞ்சைக்குச் சென்று அங்கே, தமிழ்வரலாறு என்னும் அரிய ஆராய்ச்சிநூல் எழுதி வெளியிட்டுவரும் ஸ்ரீமான் ராவ்பகதூர் K. S. ஸ்ரீனிவாஸபிள்ளை அவர்களும், அரமனைச் சரசுவதிமாலின் கௌரவகாரியதரிசி ஸ்ரீமான் T. ஸாம்பமூர்த்தி ராயர் B. A., B. L. அவர்களும் மனமுவந்து செய்த உதவிகளைக்கொண்டு இரண்டுவாரமிருந்து சரசுவதிமாலிலுள்ள ஏழு ஏட்டுப் பிரதிகளையும் வைத்துப் பரிசோதித்தேன். அப்பரிசோதனைக்கு உடனிருந்து துணைபுரிந்தார் (1) திருவிடைமருதூரிலுள்ள திருவாவடுதுறையாதீனம் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ K. S. பாலசுப்பிரமணியக் கவிராயரவர்களும் (2) தஞ்சைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ A. பொன்னண்ணுக் களத்தில்வென்றாரவர்களும் (3) தஞ்சை அரமனைச் சரசுவதிமாலின் காபியிஸ்ட் ஸ்ரீ V. S. இராமசுவாமி அய்யர் அவர்களும் (4) ஷை காபியிஸ்ட் ஸ்ரீ K. S. சுப்பிரமணிய சாஸ்திரியாரவர்களும் (5) தஞ்சை மானம்பூச்சாவடி E. L. M. ஸகிண்டரி ஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ M. K. அநந்தாச்சாரியாரவர்களும் (6) தஞ்சை மேலவீதி அப்ஜியண்ணுவட்டாரம் ஸ்ரீ R. வேங்கடராம சாஸ்திரியாரவர்களும் (7) தஞ்சைச்சரசுவதிமால் இரண்டாம் உதவிலைப்ரேரியன் ஸ்ரீ N. V. சுப்பிரமணிய சாஸ்திரியார் அவர்களும் ஆவர். அவ்வாறு ஆராய்ந்ததிற் பல அரிய திருத்தங்களும், பாடபேதங்களும் கிடைத்தன.

அப்பால் டிஸம்பர்மீ கிரிஸ்துமஸ் விடுமுறைக்காலத்தில் மதுரைக்குச் சென்று ஐந்தாறுநாளிருந்து தமிழ்ச்சங்கத்திலுள்ளதோர்

அருமையான ஏட்டுப்பிரதியையும் வைத்துப் பரிசோதித்தேன். ஆண்டு உடனிருந்துதவியவர்கள், மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை உபாத்தியாயர் பண்டித ஸ்ரீ சு. ஹரிஹரஐயரவர்களும், செந்தமிழ் உதவிப்பத்திராதிபர் ஸ்ரீ T. K. இராமானுஜ ஐயங்காரவர்களும் ஆவர். அவ்வாறு ஆராய்ந்த பின்னர், என் ஆசிரியரவர்களையும், மதுரைத் தமிழ்ச்சங்கத்து நூற்பரிசோதகர் வித்துவான் ஸ்ரீ சே. ரா. சுப்பிரமணியக்கவிராயரவர்களையுங் கேட்டுச் சில சந்தேக நிவிர்த்தி செய்து கொண்டு திரும்பினேன்.

திரும்புகாலில் திருப்பனந்தாள் ஆதீனகர்த்தர்களைச் சந்திக்க நேர்ந்தது. அப்பெருந்தகையாளரிருவரும் இந்நூலின் பெருமையையும் என்சிரமத்தையும் அறிந்து இப்பதிப்புக்குரிய பொருளுதவியைத் தாங்கள் புரிவதாக மனமுவந்து வாக்களித்து அவ்வாறே யுதவினார்கள். இது காலத்தினாற் செய்த நன்றியாகும்.

இவ்வாறேற்பட்ட பல சௌகரியங்களைக்கொண்டு இதனைப் பதிப்பிக்கத்தொடங்கிப் பதிப்பித்துவருகையில் இதற்குச் சுருக்கமான உரையொன்று எழுதவேண்டுமென்னும் அவா எனக்குண்டாயிற்று. அதனால் 'அரும்பொருள் விளக்கம்' என்னும் பெயரிட்டு ஒரு குறிப்புரை யெழுதினேன். அஃதெழுதிய காலத்தில் சரித்திர ஆராய்ச்சியின் சம்பந்தமான பல அரியவிஷயங்களைச் சென்னை பிரசிடென்ஸி கலாசாலைச் சரித்திரபோதகாசிரியராகிய ஸ்ரீமான். அ. வா. வேங்கடராம ஐயரவர்கள் M. A., L. T., கீழ்ப்பாக்கம் ஸ்ரீ உ - வே. தி. கோ. ஆராவமுதையங்காரவர்கள் M. A., L.T., B. L. என்னும் இருவரிடமிருந்தும், மற்றுஞ்சில விஷயங்களை இச்சென்னைமாநகரிலுள்ள பெரியார் சிலரிடமிருந்துந் தெரிந்து கொண்டேன். மேற்கண்டவாறு பலவகையிலும் எனக்குதவிய யாவருக்கும் என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

பழைய பதிப்புக்களுக்கும் இப்பதிப்புக்கும் உள்ள முக்கியமான வேறுபாடுகளாவன:—

1. கடைதிறப்பிலே அச்சுப்பிரதிகளிலும் சில ஏட்டுப்பிரதிகளிலும் உள்ள சில தாழிசைகள் இடைச்செருகலென்று தோன்றினமையால் அவை மூலத்துடன் சேர்க்கப்படாமல் கூ - கO-ஆம் பக்கங்களின் கீழே தனியாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

2. காடுபாடியதின் ஈற்றிலிருந்த "அணிகொண்ட குரக்கினங்களலைகடலுக் கப்பாலே, மணலொன்று காணமல் வரையெடுத்து

## முகவுரை

யங்கினவே.'' என்னுந் தாழிசை அழகாயிருப்பினும், அந்த அவ்
விடத்தி லிருக்கவேண்டிய தவசியமெனத்தோன்றாமையாலும் யான்
ார்த்த ஏடுகளொன்றிலும் காணப்படாமையாலும் நீக்கப்பட்டது.

3. தா. 118, 352, 384, 385, 531, 568, 577, 578 இவ்வெட்
ும் சில நல்ல ஏட்டுப்பிரதிகளிற் காணப்பட்டமையாலும் அவ்வவ்
விடங்களுக்கு அவசியமெனத் தோன்றினமையாலும் புதிதாகச்
சேர்க்கப்பெற்றன.

4. அதிகாரப்பெயரும்முறையும் சயங்கொண்டார் கொண்ட உரு
ந் தெரிதற்கிடமின்றிப் பிரதிகளிற் பலபடியாகப்பிறழ்ந்துகிடந்தமை
ால் அவற்றுட் சிறந்ததெனத்தோன்றிய ஒன்றைத்தழுவி 13 அதிகா
ங்களாகப் பிரித்து முறைப்படுத்தியும், சில பிரதிகளிற் கண்டபடி
ாழிசைகளுக்கு முதலிலே தொடர்ச்சியெண் கொடுத்தும் அச்சிட
ாயிற்று.

இப்பதிப்பிலும் சில பிழைகள் காணப்படலாம். அறிஞர்கள்
அவற்றை எனக்கு எடுத்துக்காட்டி அடுத்த பதிப்பில் திருத்திக்
கொள்ளும்படி செய்யவேண்டுகிறேன்.

இப் பெரியவேலையில மிகச்சிறியனாகிய என்னைத் தூண்டித்
தான்றுத்துணையாய் நின்று பூர்த்திசெயவித்த எல்லாம்வல்ல இறை
வனை வந்தித்து வாழ்த்துகின்றேன்.

மயிலாப்பூர்,
23 - 5 - 1923.

இங்ஙனம்,
அ. கோபாலையன்.

# விசயதரன் வரலாறு.



கி. பி. 10—11 ஆம் நூற்றாண்டுகளில் சோழராச்சியம் பிரபலமடைந்திருந்தது. அக்காலத்திலே சோழநாட்டுக்கு வடக்கிலிருந்த வேங்கி நாட்டை ஆண்டுகொண்டிருந்த கீழைச்சளுக்கிய அரசர்கள் சோழ அரசர்களின் பெண்களை விவாகம் பண்ணிக்கொண்டு சினேகமாயிருந்தார்கள். 11 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்த ராசேந்திரசோழன் என்பவன் திக்குவிசயம் செய்து இப்பரதகண்ட முழுதும் தன் கீர்த்தியைப் பரப்பிக் கங்கைகொண்டசோழன் என்னும் பெயரையும் பெற்று அரசாண்டான். அவன், தன் முன்னோர் வசித்த தஞ்சாவூரைவிட்டுத் தன பெயராலே கங்கை கொண்ட சோழபுரம் என்றொரு நகரம் உண்டாக்கிக்கொண்டு அதிலே வசித்து வந்தான். அவனுக்கு அம்மங்காதேவி என்றொரு பெண்ணும் இராசாதித்தன், விசயராசேந்திரன், வீரராசேந்திரன் என்ற மூன்று பிள்ளைகளும் இருந்தார்கள். பெண்ணைக் கீழைச்சளுக்கிய ராசராசன் என்பவனுக்கு விவாகஞ் செய்துகொடுத்துச் சிலகாலமிருந்து கி. பி. 1042 - ல காலஞ்சென்றான்.

அப்பால் அம்மங்காதேவி கருப்பவதியாகிப் பிறந்தகத்துக்கு வந்து (உத்தேசம் 1043 - ல்) ஒரு புத்திரனைப்பெறறாள். இக்குழந்தையினிடத்திற் சக்கரவர்த்திக்குரிய அடையாளங்கள் காணப்பட்டமையாலும், பாட்டனாகிய இராசேந்திரசோழன் இறந்தவுடனே இக்குழந்தை பிறந்ததனாலும் பாட்டியாகிய அவன்தேவி இக்குழந்தைக்கு இராசேந்திரன் என்று பெயரிட்டு மிகவும் அருமையாக வளர்த்துவந்தாள். அம்மான்மார் மூவரும் இக்குழந்தையினிடத்து மிகவும் அன்பு பாராட்டிவந்தார்கள்.

இக்குழந்தை கங்கைகொண்டசோழபுரத்திலேயே நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கல்விகற்றுச் சகல கலா வல்லவனானன். இதனிடையே இவனுக்குப் பத்தாவது வயதில் முதல் அம்மானாகிய சோழசக்கரவர்த்தி இராசாதித்தன் இறந்துவிட (அவனுக்குச் சந்ததியின்மையால்) உடனே இரண்டாவது அம்மானாகிய விசயராசேந்திரன் பட்டத்திற்கு வந்தான். அவனுக்கு இராசமகேந்திரன் என்றொரு பிள்ளையும், மதுராந்தகி என்றொரு பெண்ணும் உண்டு. அப்பெண்ணைத் தன்சகோதரிமகனாகிய இவனுக்கே விவாகம்செய்துகொடுத்தான். பின்னர் இவனுக்குச்சற்றேறக்குறையஇருப

நாவது வயதில் விசயராசேந்திரனும் அவன்மகனும் இறந்துவிட மூன்ருவது அம்மானுகிய வீரராசேந்திரன் சோழசக்கரவர்த்தியாகி (அவனுக்கும் நேரான சந்ததியின்மையால்) தமையன் மாப்பிள்ளை யும் சகோதரிமகனுமாகிய இவனுக்கு இளவரசுப்பட்டங் கட்டினுன். இச்சமயத்தில் வேங்கிநாட்டில் இவன் தகப்பனுகிய இராசராசனும் இறந்துவிட, உடனே வீரராசேந்திரன், அந்நாட்டில் இவனுக்குப் பிரதிநிதியாகவிருந்து ஆண்டுவரும்படி இவன் சிற்றப்பன் விசயா தித்தனை நியமித்தான்.

அங்ஙனம் சிலகாலஞ் சென்றபிறகு விசயதரன் சோழநாட்டி லிருந்து ஒரு படையைத் திரட்டிக்கொண்டு வேங்கிநாட்டுக்கும் வடக்கேயிருந்த விரோதிகளை அடக்கும்பொருட்டு வயிராகரம், சக் கரக்கோட்டம் என்னும் இடங்களுக்குச் சென்றிருந்த சமயத்தில் வீரராசேந்திரன் காலஞ்சென்றுவிட, அச்செய்திகேட்டு உடனே திரும்பிவந்து கி. பி. 1070-ல சோழசக்கரவர்த்தியாகி அங்கே (அரச னின்மையால்) உண்டாகியிருந்த குழப்பத்தையடக்கிச் செங்கோல் செலுத்தத் தொடங்கினுன். இதற்குள் மதுராந்தகி காலஞ்சென்று விட அப்பால தியாகவல்லி ஏழிசைவல்லி என்னும் இருவரைக் கலி யாணம் பண்ணிக்கொண்டான். இவனுக்கு ஏழுபிள்ளைகளும் ஒரு பெண்ணும் உண்டு என்பர.

இவன் 49 வருஷகாலம் சோழசக்கரவர்த்தியாயிருந்தான். விச யாதித்தனை அவனுள்ளமட்டும் (கி. பி. 1062 - 1077) வேங்கிநாட்டுக் குப் பிரதிநிதியாக வைத்திருந்து அவனுக்குப் பிறகு தன் பிள்ளைக ளில் ஒருவனைப் பிரதிநிதியாக நியமித்தான். இவன் மிக்க அதிர்ஷ்ட மும் திறமையும் உடையவனுதலால் தன் பாட்டனும் மாமன்மாரும் அரும்பாடுபட்டுத் தேடிக்கொடுத்த சக்கரவர்த்திப்பதவியிலிருந்த காலத்தில் இராச்சியமெங்கும் அமைதி நிலைபெற்றிருந்தது. ஏனை யரசர் பலரும் இவனுக்கு அடங்கியிருந்தார்கள். அடங்காத சிலரை யும் தன் சேனையை ஏவியே அடக்கியாண்டுவந்தான்.

இவன் சக்கரவர்த்தியாகி 25 வருஷஞ் சென்றபிறகு கலிங்கப் போர் நிகழ்ந்தது. அதற்கும் தான் நேரிற் செல்லாமலே தன் முதன்மந்திரியாகிய கருணுகரத்தொண்டைமானைத தனக்குப் பிரதி நிதியாக அனுப்பிச் சயங்கொண்டு 'சயங்கொண்டான்' என்னும் பெயர் பெற்று இப்பாரணிபுனைந்து வாழ்ந்துவந்தான்.

---

# சயங்கொண்டார் வரலாறு.

இப்புலவர் பெருமான் சோழவளநாட்டிலே நன்னிலத்திற்கு அருகிலுள்ள தீபங்குடி என்னும் ஜைனகிராமத்திற் பிறந்தவர். இவர் வருணமும் சமயமும் நன்கு புலப்படவில்லை. தமிழ்நாவலர் சரிதையில் "சயங்கொண்டார், அபயன் 'நுமதூர்யாது' என்றுகேட்டபோது சொன்னகவி" என்னுந்தலைப்பின்கீழ்

*"செய்யும் வினையு மிருளுநண் பகலுந் தேறவு நறவும் மூடவுங் களவும்
பொய்யுங் கொலையும் மறமுந் தவிரப் பொய்தீ ரறநூல் செய்தார் தமதூர்
கையு முகமும் மிதழும் விழியுங் காலு நிறமும் போலுங் கமலங்
கொய்யும் மடவார் கண்வா யதரங் கோபங் கமழுந் தீபங் குடியே"

என்றதொருபாட்டுக் காணப்படுகின்றது. இதனைநோக்குமிடத்து இவர் ஜைனமதப் பற்றுடையவர் எனத்தோன்றும்; கலிங்கத்துப் பரணியின் கடவுள்வாழ்த்து முதலியவற்றை நோக்கிற் சைவமதப் பற்றுடையவரெனத் தோன்றும். ஆகவே, இவர் முதலில் ஜைனமதப் பற்றுடையவராயிருந்து, சைவசமயத்தினராகிய அபயனையடுத்தபின்னர்ச் சைவமதப்பற்றுடையராயினர் என்பது பொருந்தும். இவர் வடமொழித் தொடர்களையும் சொற்களையும் ஆங்காங்குச் செவ்வனே யிசைத்துக் கவி (தாழிசை. 159, 134, 252, 552, 455, 242-பார்க்க) பாடியிருத்தலாலும், இராசபாரம்பரியத்தில் வேதத்தின் பிரிவுகளை அழகாக எடுத்துக் கூறியிருத்தலாலும் இவரை வேதசாத்திரங்கள் பயின்ற அந்தணர் என்னலாம்.

இவர் விசயதரன் காலத்தவரெனவே இவரதுகாலமும் 800 வருஷங்களுக்கு முற்பட்டதென்பது தெளிவாம்.

---

இப்பாட்டு, சயங்கொண்டார் பாடிய 'தீபங்குடிப்பத்து' என்னும் பதிகத்தில் மூன்றாவதாகச் சிலபாடபேதத்துடன் காணப்படுகின்றது. அப் பதிகத்தில் ஏழுபாட்டுக்கள் இப்பொழுது கிடைத்திருக்கின்றன. அவை:—

நீருங் கயமு மிகுசோ லைகளு நிரைசேர் பழனக் கரையின் கமுகுங்
காரும் பரவு மவனு டிதெனக் கவிசூழ் தமிழ்நா வலர்வாழ் பதியூர்
சீரும் புகழும் பணியும் பணியுந் திகழ்பெற் றிடையு நடையு மிருகண்
கூரும் மகரக் குழையா ரதரங் கோபங் கடியுந் தீபங் குடியே. (௧)

காலைப் பொழுது மாலைப் பொழுதுங் கல்விப் பொருளோ செல்வப் பொருளாய்
மேலைக் குருநற் குணனைக் கருதி மிகுமா தவமே புரிவார் தமதூர்
சோலைக் குயில்வேள் வரவைப் பகரத் துணையைக் கருதி மனமுற் றுருகுங்
கோலப் பணிசேர் மடவா ரதரங் கோபங் கடியுந் தீபங் குடியே. (௨)

இவர் கவிகளிற் சீர்க்காக இடர்ப்பட்டுச் சொற்களைச் சிதையாமலும், வீணான அடைமொழி யொன்றேனும் உபயோகியாமலும், படிக்குந்தோறும் இனிமையயக்கும்படி விழுமிய ஓசையும் பொருளும் பொருந்தவும் இப்பரணி பாடியிருத்தலைக் கொண்டு இவரைக் கவிசக்கரவர்த்தி யென்று துணிந்து கூறலாம். தஞ்சாவூர் அரமனைச் சரசுவதி மாலிலுள்ள பழையதோர் ஏட்டுப்பிரதியின் ஈற்றிற் காணப்படும் "குலோத்துங்க சோழபெருமானுக்குத் தீபங்குடி கவிற்சண்டிதன் கவிசக்கிரவர்த்தி செயங்கொண்டார் பாடின கலிங்கத்துப்பரணி முற்றும்" என்னும் வாக்கியமும் அதனைவலியுறுத்தும்.

—

செய்யும் வினையு மிருளுந் தபுந்த தேசுவ நதட றுணுமுயிரும்
பொய்யுங் கொலையுங் களவுந் தவிரப் பொய்தீ ரறநூல் செய்வார் தமதூர்
கையும் முகமும் விழியுங் குயமுங் காலுங் கமலம் போலு மெனவே
கொய்யும் மடவார் கனிவா யதரங் கோபங் கடியுந் தீபங் குடியே. (௩)

வஞ்சங் கடிதார் பிறனில் விழையார் வாமன் வழிநூல் வழுவார் நிதமு
மிஞ்சொன் மிகுமா தவர்தா டொழுதே யியமனை வலறமே புரிவார் தமதூர்
நஞ்சம் பயில்வாட் கடனீ ளெளியா ளையனைக் கடையார் மதுரக் கிடையார்
கொஞ்சுஞ் சுகமென் மொழியா ரதரங் கோபங் கடியுந் தீபங் குடியே. (௪)

அனகன் னமல னரியே ரனையா னாதிப் பெருமா னலமேல் வருவோன்
பனசப் பணிநீ ழலில்வா ழருகன் பதுதா மரையே பணிவார் தமதூர்
கனகக் குழையார் தரளப் பணியார் காதார் விழியார் போதார் முலையார்
குனிவிற் புருவப் படையா ரதரங் கோபங் கடியுந் தீபங் குடியே. (௫)

வண்டார் பிண்டிக் கிறைமுக் குடையான் வாமன் றருமத் திகிரிப் படையான்
தொண்டா கியமா தவருக் குரியன் றுகளார் மனமுற் றவருக் கரியன்
பண்டார் வேதப் பரமன் சரணைப் பரிவா னிதமும் பணிவார் தமதூர்
குண்டார் முலைமென் மடவா ரதரங் கோபங் கடியுந் தீபங் குடியே. (௬)

நிலைசேர் பொருளு நிலையில் பொருளு நிமல னெறியா லுலகுக் குரைசெய்
தலையா கியமா தவர்தா ளிதயத் தலைகொண் டிதமே புரிவார் தமதூர்
மலையோ குடமோ மணிமா முடியோ வனசத் திளமா முகையோ முலையென்
கொலைவேல் விழியார் செவ்வா யதரங் கோபங் கடியுந் தீபங் குடியே. (௭)

இவ்வேழு பாடல்களும் வேறுசில பதிகங்களும் அடங்கிய கையெழுத்துப் பிரதியொன்றை 'ஜைனகெஸட்' என்னும் ஆங்கில மாதாந்தர பத்திரிகையின் அதிபர் ஸ்ரீமான் C. S மல்லிநாதஜைன் அவர்களிடமிருந்து வாங்கிச் சென்னை யிராசதானிகலாசாலைத் தத்துவசாத்திர போதகாசிரியர் ஸ்ரீமான் A. சக்கரவர்த்தி M. A., I. E. S. அவர்கள் அன்புடன் எமக்குதவினார்கள்.

சிவமயம்.

# கலிங்கத்துப்பரணி.



## ௧.—கடவுள் வாழ்த்து.

### உமாபதி.

1. புயல்வண்ணன் புனல்வார்க்கப் பூமிசையோன்
 [1]தொழில்காட்டப் புவன வாழ்க்கைச்
செயல்வண்ண நிலைநிறுத்த மலைமகளைப்
 புணர்ந்தவனைச் சிந்தை செய்வாம். (௧)

2. அரு [2]மறையி னெறிகாட்ட வயன்பயந்த
 நிலமகளை யண்டங் காக்கு
முரிமையினிற் கைப்பிடித்த வுபயகுலோத்
 தமனபயன் வாழ்க வென்றே. (௨)

### திருமால்.

வேறு.

3. [3]ஒருவயிற்றும் பிறவாது பிறந்தருளி யுலகொடுக்குந்
திருவயிற்ற தொருகுழவி திருநாமம் பரவுதுமே. (௩)

4. அந்நெடுமா லுதரம்போ லருளபயன் றனிக்கவிகை
யிந்நெடு [4]மா நிலமனைத்தும் பொதிந்தினிது வாழ்கவென்றே. ()

(பிரதிபேதம்.)— 1 'சடங்கியற்ற' 2 'மறைகளெனறி' 3 'ஒருவயிற்றிற்'
4 'மாலுலகனைத்தும்'

## நான்முகன்.

5. உகநான்கும் பொருணான்கு முபநிடத மொருநான்கு
முகநான்கும் படைத்துடைய முதல்வனையாம் பரவுதுமே. (ரு)

6. நிலநான்குந் திசைநான்கு நெடுங்கடல்க ளொருநான்குங்
குலநான்குங் காத்தளிக்குங் குலதீபன் வாழ்கவென்றே. (சு)

## சூரியன்.

7. பேராழி யுலகனைத்தும் பிறங்கவள ரிருணீங்க
வோராழி தனைநடத்து மொண்சுடரைப் பரவுதுமே. (எ)

8. பனியாழி யுலகனைத்தும் பரந்தகலி யிருணீங்கத்
தனியாழி தனைநடத்துஞ் சயதுங்கன் வாழ்கவென்றே. (அ)

## கணபதி.

வேறு.

9. காரணகா ரியங்களின்கட் டறுப்போர் யோகக்
கருத்தென்னுந் தனித்தறியிற் கட்டக் கட்டுண்
டாரணமா நாற்கூடத் தணைந்து நிற்கு
மைங் [1]கரத்த தொருகளிற்றுக் கன்பு செய்வாம். (கூ)

10. தனித்தனியே திசையானைத் தறிக ளாகச்
சயத்தம்பம் பலநாட்டி யொருகூ டத்தே
யனைத்துலகுங் கவித்ததெனக் கவித்து நிற்கு
மருட்கவிகைக் கலிப்பகைஞன் வாழ்க வென்றே. (க0)

## முருகவேள்.

வேறு.

11. பொன்னிரண்டு வரைதோற்கும் பொருவரிய
நிறம் [2]படைத்துப் புயமுங் கண்ணும்
பன்னிரண்டு மாறிரண்டும் படைத்துடையா
னடித்தலங்கள் பணிதல் செய்வாம். (கக)

12. ஓரிரண்டு திருக்குலமு நிலைபெறவந்
தொருகுடைக்கீழ்க் கடலுந் திக்கு
மீரிரண்டு படைத்துடைய விரவிகுலோத்
தமனபயன் வாழ்க வென்றே. (க௨)

---

(பி - ம்.)—1 'கரத்திறெரு' 2 'படைத்தபுய'

## நாமகள்.

வேறு.

13. பூமாதுஞ் சயமாதும் [1]பொருந்தி வாழும்
புயத்திருப்பத் [2]தனித்துயரத் திருப்பே மென்று
நாமாது கருதினள்போ னயந்து சென்னி
நாவகத்து ளிருப்பாளை நவிலு வாமே. (கங)

14. எண்மடங்கு புகழ்மடங்கா நல்ல னெங்கோன்
யானவன்பா லிருப்பதுநன் றென்பாள் போல
மண்மடந்தை தன்சீர்த்தி வெள்ளை சாத்தி
மகிழ்ந்தபிரான் வளவர்பிரான் வாழ்க வென்றே. (கச)

## துர்க்கை.

வேறு.

15. செய்யதிரு மேனியொரு பாதிகரி தாகத்
தெய்வமுத னாயகனை யெய்தசிலை மாரன்
கையின்மலர் பாதமலர் [3]மீதுமணு காநங்
[4]கன்னிதன் மலர்க்கழல்கள் சென்னிமிசை வைப்பாம். ()

16. கறுத்தசெழி யன்கழல் சிவப்பவரை யேறக்
கார்முகம் வளைத்துதியர் கோமகன் முடிக்கட்
பொறுத்தமலர் பாதமலர் மீதணிய நல்கும்
பூழியர் பிரானபயன் வாழ்கவினி தென்றே. (கசு)

## சத்தமாதர்கள்.

வேறு.

17. மேதி புள்ளலகை தோகை யேறுவணம்
வேழ மென்றகொடி யேழுடைச்
சோதி மென்கொடிக ளேழி னேழிரு
துணைப்ப தங்களை நினைத்துமே. (கஎ)

18. கேழன் [5]மேழிகளி றாளி வீணைசிலை
கெண்டை யென்றினைய பல்கொடி
தாழ மேருவி [6]லுயர்ந்த செம்பியர்
தனிப்பு லிக்கொடி தழைக்கவே. (கஅ)

(பி - ம்.)—1 ‘பொலிந்துவாழ்ந்து’ 2 ‘மிக்குயரத்திருப்பாளென்று நாமாதுங் கலைமாது மென்னச் சென்னி’ 3 ‘மீதணியநல்குங்’ 4 ‘கன்னி கமலக் கழல்கள்’ 5 ‘மேழிகலை’, ‘மேழிகிளி’ 6 ‘உயர்தத’

## அறுவகை வாழ்த்து.

வேறு.

19. விதிமறை யவர்தொழில் விளைகவே
விளைதலின் முகின்மழை பொழிகவே
நிதிதரு பயிர்வள நிறைகவே
நிறைதலி னுயிர்நிலை பெறுகவே. (௧௯)

20. தல [1]முழு தினுமனு வளர்கவே
சயதர னுயர்புலி [2]நுழைகவே
நிலவுமிழ் கவிகையும் வளர்கவே
நிதிபொழி கவிகையும் வளர்கவே. (௨௦)

**௧.—கடவுள் வாழ்த்து முற்றிற்று.**

---

இரண்டாவது

# கடை திறப்பு.



21. சூதள வளவெனு மிளமுலைத்
துடியள வளவெனு நுணுகிடைக்
காதள வளவெனு மதர்விழிக்
கடலமு தனையவர் திறமினோ. (௧)

22. புடைபட விளமுலை வளர்தொறும்
[3]பொறையறி வுடையரு நிலைதளர்ந்
திடைபடு வதுபட வருளுவீ
ரிடுகத வுயர்கடை திறமினோ. (௨)

23. சுரிகுழ லசைவுற வசைவுறத்
துயிலெழு மயிலென மயிலெனப்
பரிபுர வொலியெழ வொலியெழப்
பணிமொழி யவர்கடை திறமினோ. (௩)

---

(பி - ம்.)—1 'முதலுலாமனு', 'முழுதுளமனு' 2'வளர்கவே' 3'பொறியறிவு'

24. கூடிய நன்கன வதனிலே
கொடைநர துங்கனொ டணைவுறு
ஆடிய நெஞ்சினொ டேடவீ
ருமது நெடுங்கடை திறமினோ. (௪)

வேறு.

25. விடுமி னெங்கடுகில விடுமி [1]னென்றுமுனி
வெகுளி மென்குதலை துகிலினைப்
பிடிமி னென்றபொருள் விளைய நின்றருள்செய்
பெடைநலீர்கள்கடை திறமினோ. (௫)

26. எனத டங்கவினி வளவ துங்கனரு
ளெனம கிழ்ந்திரவு கனவினிற்
றனத டங்கண்மிசை நகந டந்தகுறி
தடவு மாதர்கடை திறமினோ. (௬)

27. இகலி ழந்தரசர் தொழவ ரும்பவனி
யிரவு கந்தருளு கனவினிற்
பகலி ழந்தநிறை பெறமு யன்றுமொழி
பதறு மாதர்கடை திறமினோ. (௭)

வேறு.

28. முனிபவ ரொத்திலராய் முறுவல வளைத்தலுமே
[2]முகிழ்நகை பெற்றமெனு மகிழ்நர் மணித்துவர்வாய்
கனிபவ ளத்தருகே வருதலு முத்துதிருங்
கயல்க ளிரண்டுடையீர் கடைதிற மின்றிறமின். (௮)

29. இத்துயின் மெய்த்துயிலே யென்று குறித்திளைஞோ
ரிதுபுல விக்குமருந் தெனமனம் வைத்தடியிற்
கைத்தலம் வைத்தலுமே பொய்த்துயில கூர்நயனக்
கடைதிற வாமடவீர் கடைதிற மின்றிறமின். (௯)

வேறு.

30. முருகிற் சிவந்த கழுநீரு
முதிரா விளைஞ ராருயிருந்
திருகிச் செருகுங் குழன்மடவீர்
செம்பொற் கபாடந் திறமினோ. (௧௦)

---

(பி - ம்.)—1 'என்றருளும்' 2 'புகிணகை பெற்றமெனு மகிலர'

31. முத்து வடஞ்சேர் [1]முகிழ்முலைமேன்
முயங்குங் கொழுநர் மணிச்செவ்வாய்
வைத்த பவள வடம்புனைவீர்
[2]வனைபொற் கபாடந் திறமினோ. (கக)

32. கலவிக் களியின் மயக்கத்தே
கலைபோ [3]யகன்ற தறியாமே
நிலவைத் துகிலென் றெடுத்துடுப்பீர்
நிறைபொற் கபாடந் திறமினோ. (கஉ)

வே று.

33. தங்குகண் வேலசெய்த புண்களைத்
தடமுலை வேதுகொண் [4]டொற்றியே
செங்கனி வாய்மருந் தூட்டுவீர்
[5]செம்பொ னெடுங்கடை திறமினோ. (கங)

34. [6]தண்கொடை மானதன் மார்புதோய்
தாதகி மாலையின் மேல்விழுங்
கண்கொடு போம்வழி தேடுவீர்
கனக நெடுங்கடை திறமினோ. (கச)

வே று.

35. அவசமுற் றுளநெகத் [7]துயினெகப் பவளவா
யணிசிவப் பறவிழிக் கடைசிவப் புறநிறைக்
கவசமற் றிளநகைக் களிவரக் களிவருங்
கணவரைப் புணருவீர் கடைதிறந் திடுமினோ. (கரு)

36. அஞ்சியே கயல்கெடக் கூடலிற் பொருதுசென்
றணிகடைக் குழையிலே [8]விழுவடர்த் தெறிதலால்
வஞ்சிமா னதன்விடும் படையினிற் கொடியகண்
மடநலீர் சுடர்மணிக் கடைதிறந் திடுமினோ. (கசு)

37. நனவினிற் சயதரன் புணரவே பெறினுநீர்
நனவெனத் தெளிவுறா ததனையும் பழையவக்
கனவெனக் கூறுவீர் தோழிமார் நகைமுகங்
கண்டபின் றேறுவீர் கடைதிறந் திடுமினோ. (கஎ)

(பி - ம்.)—1 'முகிண்முலை' 2 'மணிப்பொற்' 3 'அகலக்கலைமதியின்', 'அகலச் சாளரவாய்' 4 'ஒற்றியுஞ்' 5 'செம்பொன் மணிக்கடை' 6 'தண்குடை' 7 'துகினெக' 8 'விழவிடா தெறிதலால்'

வேறு.

38. மெய்யே கொழுநர் பிழைநலிய வேட்கை நலிய விடியளவும்
பொய்யே யுறங்கு மடநல்லீர் புனைபொற் கபாடந் திறமினோ.

39. போக [1]வமளி மயக்கத்தே புலர்ந்த தறியா தேகொழுந
ராக வமளி மிசைத்துயில்வீ ரம்பொற் கபாடந் திறமினோ. ()

40. ஆளுங் கொழுநர் வரவுபார்த் தவர்தம் வரவு காணாமற்
றாளு மனமும் புறம்பாகச் சாத்துங் கபாடந் திறமினோ. (௨0)

வேறு.

41. மீனம்புகு கொடிமீனவர் விழியம்புக வோடிக்
கானம்புக வேழம்புகு மடவீர்கடை திறமின். (௨௧)

42. அலைநாடிய புனனாடுடை யபயற்கிடு திறையா
மலைநாடியர் துளுநாடியர் மனையிற்கடை திறமின். (௨௨)

43. மழலைத்திரு மொழியிற்சில [2]வடுகுஞ்சில தமிழுங்
குழறித்தரு கருநாடியர் குறுகிக்கடை திறமின். (௨௩)

வேறு.

44. விலையி லாதவட முலையி லாடவிழி
குழையி லாடவிழை கணவர்மீதாட
மலையி [3]லாடிவரு மயில்கள் போலவரு
மடநல் லீர்கடைக டிறமினோ. (௨௪)

45. களப வண்டலிடு கலச கொங்கைகளின்
மதியெ ழுந்துகனல் சொரியுமென்
றளக பந்திமிசை யளிகள் பந்தரிடு
மரிவை மீர்கடைக டிறமினோ. (௨௫)

46. சொருகு கொந்தளக மொருகை மேலலைய
வொருகை கீழலைசெய் துகிலொடே
திருவ னந்தலினு முகமலர்ந்து வரு
தெரிவை மாதர்கடை திறமினோ. (௨௬)

வேறு.

47. உந்திச் சுழியின் முளைத்தெழுந்த
வுரோமப் பசுந்தா ளொன்றிலிரண்
டந்திக் கமலங் கொடுவருவீ
ரம்பொற் கபாடந் திறமினோ. (௨௭)

---

(பி - ம்.)—1 'அமளிக் களிமயக்கிற்' 2 'வடுகும்பல' 3 'ஆடவரு'

சிறைபிடிக்கப்பட்ட மகளிர் அமர்ந்து [illegible]
[illegible]

48. கழுவுங் கொழுநர் பிழைநலியக்
கழுநீ ரென்னக் கழுநீர்மை
வழுவ வுடனே [1]மணங்குழைவீர்
மணிப்பொற் கபாடந் திறமினோ. (உஅ)

49. வேகம் விளைய வருங்கொழுநர்
[2]விழிகள் சிவந்தபடிநோக்கிப்
போகம் விளைய நகைசெய்வீர்
புனைபொற் கபாடந் திறமினோ. (உகூ)

வே று.

50. முலைமீது கொழுநர்கை நகமேவு குறியை
முன்செல்வ மில்லாத வவர்பெற்ற நிதிபோற்
[3]கலைமீ தெடாவாரு மில்லா விடத்தே
கண்ணுற்று நெஞ்சங் களிப்பீர்க டிறமின். (௩0)

வே று.

51. மெய்யி லணைத்துருகிப் பைய வகன்றவர்தா
மீள்வ ரெனக்கருதிக் கூடல் வளைத்தறவே
கையி லணைத்தமணற் கண்பனி சோர்புனலிற்
கரைய விருந்தழுவீர் கடைதிற மின்றிறமின். (௩க)

வே று.

52. கடலின் விடமென வமுதென மதனவேள்
கருதி [4]வழிபடு படையொடு கருதுவா
ருடலி னுயிரையு முணர்வையு நடுவுபோ
யுருவு மதர்விழி யுடையவர் திறமினோ. (௩உ)

53. இடையி னிலையரி திறுமிறு மெனவெழா
வெமது புகலிட மினியிலை யெனவிழா
வடைய மதுகர மெழுவது விழுவதா
மளக வனிதைய ரணிகடை திறமினோ. (௩௩)

வே று.

54. முறுவன் மாலையொடு தரள மாலைமுக
மலரின் மீதுமுலை முகிழினுஞ்
சிறுநி லாவுமதின் மிகுநி லாவுமென
வருந வீர்கள்கடை திறமினோ. (௩ச)

(பி - ம்.)— [1]'மயங்கிடுவீர்' [2]'மேனி' [3]'கலைநீவியெவரேனும்' [4]'விடுபடையடுவது'

55. அளக பாரமிசை யசைய மேகலைக
ளவிழ வாபரண வகையெலா
மிளக மா[1]முலைக ளிணைய ருமல்வரு
மியன லீர்கடைக டிறமினோ. (௫௫)

56. மதுர மானமொழி பதற வாள்விழி
சிவப்ப வாயிதழ் வெளுப்பவே
யதர பானமது பான மாகவறி
வழியு மாதர்கடை திறமினோ. (௫௬)

வேறு.

57. பூவிரி மதுகர நுகரவும் பொருகய லிருகரை புரளவுங்
காவிரி யெனவரு மடநலீர் கனக நெடுங்கடை திறமினோ. ()

வேறு.

58. [2]கூடு மிளம்பிறையிற் குறுவெயர் முத்துருளக்
கொங்கை வடம்புரளச் செங்கழு நீரளுக்
காடு குலைந்தலையக் கைவளை பூசலிடக்
கலவி விடாமடவீர் கடைதிற மின்றிறமின். (௫௮)

---

(பி - ம்.)—1 'முலைகொ(ளை)...ய ருமல்' 2'கோடும்'

**கடைதிறப்பில் அதிகமாகக்காணப்படும் பாட்டுக்கள்:—**

செருவிளை நீர்பட வெம்முலைச் செவ்விளை நீர்படு சேயரிக்
கருவிளை நீர்பட வூடுவீர் கனக நெடுங்கடை திறமினோ. (க)

வாயிற் சிவப்பை விழிவாங்க மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்கத்
தோயக் கலவி யமுதளிப்பீர் துங்கக் கபாடந் திறமினோ. (உ)

பொருங்கண் வேலிளைஞர் மார்பி னூடுருவு புண்க டரவிரு கொங்கையின்
கருங்கண் வேதுபட வொற்றிமென்கைகொடு கட்டு மாதர்கடைதிறமினோ.

பேணுங் கொழுநர் பிழைகளெலாம் பிரிந்த பொழுது நினைந்தவரைக்
காணும் பொழுது மறந்திருப்பீர் கனப்பொற் கபாடந் திறமினோ. (ச)

வாச மார்முலைகண் மார்பி லாடமது மாலை தாழ்குழலின் வண்டெழுந்
தூச லாடவிழி பூச லாடவுற வாடு வீர்கடைக டிறமினோ. (ரு)

நேயக் கலவி மயக்கத்தே நிகழ்ந்த மொழியைக் கிளியுரைப்ப
வாயைப் புதைக்கு மடநல்லீர் மணிப்பொற் கபாடந் திறமினோ. (சு)

பொங்கு மதிக்கே தினநடுங்கிப் புகுந்த வறையை நிலவறையென்
றங்கு மிருக்கப் பயப்படுவீ ரம்பொற் கபாடந் திறமினோ. (எ)

வேறு.

59. உபய தனமசையி லொடியு மிடைநடையை
யொழியு மொழியுமென வொண்சிலம்
பபய மபயமென வலற நடைபயிலு
மரிவை மகளிர்கடை திறமினோ. (௫௯)

வேறு.

60. காஞ்சி யிருக்கக் கலிங்கங் குலைந்த
கலவி மடவீர் கழற்சென்னி
காஞ்சி யிருக்கக் கலிங்கங் குலைந்த
களப்போர் பாடக் கடைதிறமின். (௬0)

61. இலங்கை யெறிந்த கருணா கரன்ற
னிகல்வெஞ் சிலையின் வலிகேட்பீர்
கலிங்க மெறிந்த கருணா கரன்றன்
களப்போர் பாடக் கடைதிறமின். (௬௧)

௨.—கடைதிறப்பு முற்றிற்று.

---

வருவார் கொழுந ரெனத்திறந்தும் வாரார் கொழுந ரெனவடைத்துந்
திருகுங் குடுமி விடியளவுந் தேயுங் கபாடந் திறமினோ. (௮)

ஊடு வீர்கொழுநர் தங்கள் பான்முனி வொழிந்து கூடுதலி லுங்களைத்
தேடு வீர்கடைக டிறமி னோவினிய தெரிவை மீர்கடைக டிறமினோ. (௯)

பண்படு கிளவியை யமுதெனப் பருகிய கொழுநனை நெறிசெயக்
கண்கொடு கொலைசெய வருளுவீர் கனக நெடுங்கடை திறமினோ. (௧0)

பிழைநினைந் துருகி யணைவு றாமகிழ்நர் பிரித லஞ்சிவிடு கண்கணீர்
மழைத தும்பவிர றரையி லேயெழுது மடம யீர்கடைக டிறமினோ. (௧௧)

நக்காஞ் சிக்கும் வடமலைக்கு நடுவில் வெளிக்கே வேடனைவிட்
டக்கா னகத்தே யுயிர்பறிப்பீ ரம்பொற் கபாடந் திறமினோ. (௧௨)

செக்கச் சிவந்த கழுநீருஞ் செகத்தி லிளைஞ ராருயிரு
மொக்கச் சொருகுங் குழன்மடவீ ரும்பொற் கபாடந் திறமினோ. (௧௩)

இவையன்றி வேறுசிலதாழிசைகளும் சிலபிரதிகளிற் காணப்படுகின்றன. அவையாவும் ஒரு பிரதியிலுள்ளபடி மற்றொன்றிலில்லை. உற்றுநோக்குவார்க்கு இவையனைத்தும் இடைச்செருகல் என்பது புலனும்.

மூன்றாவது

# காடு பாடியது.



62\. களப்போர் விளைந்த கலிங்கத்துக்
கலிங்கர் நிணக்கூழ் களப்பேயி
னுளப்போ [1]ரிரண்டு நிறைவித்தா
ளுறையுங் காடு பாடுவாம். (க)

வேறு.

63\. பொரிந்த காரை கரிந்த சூரை
புகைந்த வீரை [2]யெரிந்தவே
யுரிந்த பாரை யெறிந்த பாலை
யுலர்ந்த வோமை கலந்தவே. (உ)

64\. உதிர்ந்த வன்னி யொடுங்கு நெல்லி
[3] யுணங்கு தும்பை யுலர்ந்தவேல்
பிதிர்ந்த சுள்ளி சிதைந்த வெள்ளில்
பிளந்த கள்ளி பரந்தவே. (ங)

65\. வற்றல் வாகை வறந்த கூகை
மடிந்த தேறு பொடிந்தவேன்
முற்ற லீகை முளிந்த விண்டு
முரிந்த புன்கு நிறைந்தவே. (ச)

வேறு.

66\. தீய வக்கொடிய கான கத்தமரை
திறந்த வாய்தொறு நுழைந்தவர்
சாயை புக்கவழி யாதெ னப்பரிதி
தன்க ரங்கொடு திளைக்குமே. (ரு)

67\. ஆடி நின்றசிறை வெம்ப ருந்தினிழ
லஞ்சி யக்கடு வனத்தைவிட்
டோடு கின்ற [4]நிழ லொக்கு நிற்குநிழ
லோரி டத்துமுள வல்லவே. (சு)

---

(பி - ம்.)—1 'ரீண்ட' 2 'பொடிந்தவேல்' 3 'ஒடுங்குதுள்ளரி' 4 'நிழலைச்சூழ் நிற்கு'

68. ஆத வம்பருகு மென்று நின்றநிழ
லங்கு நின்றுகுடி போனவப்
பாத வம்புனல் பெறாது ணங்குவன
பருகு நம்மையென வெருவியே. (எ)

வே று.

69. செந்நெ ருப்பினைத் தகடு செய்துபார்
செய்த தொக்குமச் செந்த ரைப்பரப்
பந்நெ ருப்பினிற் புகைதி ரண்டதொப்
பல்ல தொப்புறா வதனி டைப்புறா. (அ)

70. தீயின் வாயினீர் பெறினு முண்பதோர்
சிந்தை கூரவாய் [1]வெந்து லர்ந்துசெந்
நாயின் வாயினீர் தன்னை நீரெனா
நவ்வி நாவினா னக்கி விக்குமே. (கூ)

71. இந்நி லத்துளோ ரேக லாவதற்
கெளிய கானமோ வரிய வாறுளோ
ரந் [2]நி லத்தினில் வெம்மை யைக்குறித்
தல்ல வோநிலத் தடியி டாததே. (கo)

வே று.

72. இருபொழுது மிரவிபசும் புரவிவிசும்
பியங்காத தியம்பக் கேண்மி
னொருபொழுது தரித்தன்றி யூடுபோக்
கரிதணங்கின் காட்டின் றன்றோ. (கக)

73. காடுநனைக் கடத்துமெனக் கருமுகிலும்
வெண்மதியுங் கடக்க வப்பா
லோடியிளைத் துடல்வியர்த்த வியர்ப்பன்றோ
வுகுபுனலும் பனியு மம்மா. (கஉ)

74. விம்முகடு விசைவனத்தின் வெம்மையினைக்
குறித்தன்றோ விண்ணோர் விண்ணி
னம்முகடு முகிற்றிரையிட் டமுதவட்ட
மாலவட்ட மெடுப்ப தம்மா. (கங)

(பி - ம்.)—1 'வெந்துவந்து' 2 'நிலத்தின்மேல'

வே று.

75. நிலம்புடைபேர்ந் தோடாமே நெடுமோடி நிறுத்தியபேய்
புலம்பொடுநின் றுயிர்ப்பனபோற் புகைந்துமரங் கரிந்துளவால்.

76. வற்றியபேய் வாய்புலர்ந்து வறணாக்கை நீட்டுவபோன்
முற்றியநீண் மரப்பொதும்பின் [1]முதுபாம்பு புறப்படுமால். (கரு)

77. விழிசுழல வருபேய்த்தேர் மிதந்துவரு நீரந்நீர்ச்
சுழிசுழல வருவதெனச் சூறைவளி சுழன்றிடுமால். (கசு)

வே று.

78. சிதைந்தவுடல் சுடுசுடலைப் பொடியைச் சூறை
சீத்தடிப்பச் சிதறியவப் பொடியாற் செம்மை
புதைந்த [2]மணி புகைபோர்த்த தழலே போலும்
போலாவேற் பொடிமூடுந் தணலே போலும். (கஎ)

79. மண்ணோடி யறவறந்து திறந்தங் காந்த
வாய்வழியே வேய்பொழியு முத்த மவ்வேய்
கண்ணோடிச் சொரிகின்ற கண்ணீ ரன்றேற்
கண்டிரங்கிச் சொரிகின்ற கண்ணீர் போலும். (கஅ)

80. வெடித்தகழை [3]விசைத்தெறிந்த முத்த மண்மேல்
வீழ்ந்தனவத் தரைபுழுங்கி யழன்று [4]மெய்ம்மேற்
பொடித்தவியர்ப் புள்ளிகளே போலும் போலும்
போலாவேற் கொப்புளங்கள் போலும் போலும். (கசு)

81. பல்காற்றின் டிரைக்கரங்கள் கரையின் மேன்மேற்
பாய்கடல்க ணூக்குமதப் படர்வெங் கானிற்
[5]செல்காற்று வாராமற் காக்க வன்றே
திசைக்கரியின் செவிக்காற்று மதற்கே யன்றே. (உ0)

82. முள்ளாறுங் கல்லாறுந் தென்ன ரோட
முன்னொருநாள் வாளபயன் முனிந்த போரின்
வெள்ளாறுங் கோட்டாறும் புகையான் மூட
வெந்தவனை மீந்தவனை மொக்கி லொக்கும். (உக)

ரு.—காடுபொடியது முற்றிற்று.

---

(பி - ம்)—1 'முதுப்பாம்பு புறம்படுமே' 2 'நிலம்' 3 'மிசைதெறிப்பத் தரை மேன்முத்தம்' 4 'மேன்மேற்' 5 'சில்காற்றும்'

நான்காவது

# கோயில் பாடியது.



83. ஓதி வந்தவக் கொடிய கானகத்
துறைய ணங்கினுக் கயன்வ குத்ததோர்
பூத லம்பழங் கோயி லென்னினும்
புதிய கோயிலுண் டதுவி ளம்புவாம். (௧)

84. வட்ட வெண்குடைச் சென்னி மானதன்
வாளின் வாயினின் மறலி வாயிடைப்
பட்ட மன்னர்தம் பட்ட மங்கைமார்
பணிம ணித்திருக் கருவி ருத்தியே. (௨)

85. துவர்நி றக்களிற் றுதிய வேலிற
சுரிகை போர்முகத் துருவ நேரெதிர்த்
தவர்நி ணத்தொடக் குருதி நீர்குழைத்
தவர்க ருந்தலைச் சுவர டுக்கியே. (௩)

86. அறிஞர் தம்பிரா னபயன் [1]வாரணை
மரசர் மண்டலத் தரண றப்பறித்
தெறித ரும்பெருங் [2]கணைய மம்புகொண்
டெழுது தூணெடுத் திடமி யற்றியே. (௪)

87. கடிந ழிந்துபோர் மதிலை யிறபடுங்
கரிம ருப்பினைத் திரடு லாமெனும்
படிப ரப்பியப் பருமயானையின்
பழுவெ லும்பினிற் பாவ டுக்கியே. (௫)

88. மீளி மாவுகைத் தபயன் முன்னொர்நாள்
விருத்த ராசரைப் பொருது கொண்டபோ
ராளி வாரணங் கேழல் சீயமென்
றவைநி ரைத்துநா சிகையி ருத்தியே. (௬

(பி - ம்.)—1 'வாரணத்தரசர்' 2 'கணைமரங்கள்கொண்'

89. துங்க பத்திரைச் செங்க ளத்திடைச்
 [1]சோள சேகரன் வாளெ றிந்தபோர்
வெங்க [2]தக்களிற் றின்ப டத்தினால்
 வெளிய டங்கவே மிசைக வித்துமே. (எ)

வேறு.

90. கொள்ளிவாய்ப் பேய்காக்குங்
 கோபுரமு நெடுமதிலும்
வெள்ளியாற் சமைத்தனபோல்
 வெள்ளெலும்பி னாற்சமைத்தே. (அ)

91. காரிரும்பின் மகரதோ
 ரணம்போலக் கரும்பேய்க
ளோரிரண்டு காலநாட்டி
 யொருகரும்பேய் மிசைவளைத்தே. (கூ)

வேறு.

92. மயிற்கழுத்துங் கழுத்கரிய மலர்க்கமுகத்
 தாமரையு மருங்கு சூழ்ந்த
வெயிற்கழுத்து நிணக்கொடியு மிளங்குழவிப்
 பசுந்தலையு மெங்குந் தூக்கி. (க0)

93. பணியாத வழுதியர்தம் பாய்களிற்றின்
 செவிச்சுளகு பலவுந் தூக்கி
மணியூச லெனமதுரை மகரதோ
 ரணம்பறித்து மறித்து நாட்டி. (கக)

94. [3]பரிவிருத்தி யலகிட்டுப் பைங்குருதி
 நீர்தெளித்து நிணப்பூச் சிந்தி
யெரிவிரிக்க விமவிளக் கெம்மருங்கு
 மேற்றியதோ ரிடல்பிற் றாலோ. (கஉ)

வேறு.

95. சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்
 தருகவரம் வரத்தினுக்குத் தக்க தாகப்
பலியாக வுறுப்பரிந்து தருது மென்று
 பரவுமொலி கடலொலியிற் பரக்கு மாலோ. (கங)

(பி - ம்.)—1 'சோழ' 2 'கடக்களிற்' 3 'பரிவிரித்தி'

96. சொல்லரிய [1]வோமத்தீ வளர்ப்ப ராலோ
தொழுதிருந்து பழுவெலும்பு தொடர வாங்கி
வல்லெரியின் விறகாக விடுவ ராலோ
வழிகுருதி நெய்யாக வார்ப்ப ராலோ. (கச)

97. அடிக்கழுத்தி னெடுஞ்சிரத்தை யரிவ ராலோ
வரிந்தசிர மணங்கின்கைக் கொடுப்ப ராலோ
கொடுத்தசிரங் கொற்றவையைப் பரவு மாலோ
குறையுடலுங் கும்பிட்டு நிற்கு மாலோ. (கரு)

98. நீண்டபலி பீடத்தி லறுத்து வைத்த
[2]நெறிகுஞ்சிச் சிரத்தைத்தன் னினமென் றெண்ணி
யாண்டலைப்புள் ளருகணைந்து பார்க்கு மாலோ
வணைதலுமச் சிரமச்ச முறுத்து மாலோ. (கசு)

வேறு.

99. கடன மைந்தது கருந்தலை யரிந்த பொழுதே
கடவ தொன்றுமிலை யென்றுவிளை யாடு முடலே
யுடல்வி ழுந்திடி னுகர்ந்திட வுவந்த சிலபே
யுறுபெ ரும்பசி யுடன்றிட வுடன்றி ரியுமே. (கஎ)

100. பகடி டந்துகொள் பசுங்குருதி யின்று தலைவீ
பலிகொ ளென்றகுர லெண்டிசை பிளந்து மிசைவான்
முகடி டந்துரு மெறிந்தென முழங்க வுடனே
மொகுமொ கென்றொலி மிகுந்தமரு கங்கள் பலவே. (கஅ)

வேறு.

101. தமரு கங்கடரு கின்றசதி யின்கண் வருவா
ரமரி யின்புறு மனுதிவரு சாத கர்களே. (கசு)

102. படைவ லங்கொடு பசுந்தலை யிடங்கொ டணைவா
[3]ருடையொ ழிந்திடை நுடங்கவரு யோகி னிகளே. (உ0)

வேறு.

103. வீங்குதலை நெடுங்கழையின் மிசைதோறுந்
திசைதோறும் விழித்தே நின்று
தூங்குதலை சிரிப்பனகண் டுறங்குதலை
மறந்திருக்குஞ் சுழல்கட் கூர்ப்பேய். (உக)

(பி - ம்.)—1 'ஈமத்தீ' 2'நெடுங்குஞ்சித் தலையைத்தன்' 3'இடையொழிந்திட நுடங்கிவரு'

104. அரிந்ததலை 1யுடனமர்ந்தே யாடுகழை
யலைகுருதிப் புனலின் மூழ்கி
யிருந்த 2வுயிர் கொளக்கால னிடுகின்ற
நெடுந்தூண்டி லென்னத் தோன்றும். (உஉ)

வேறு.

105. கொல்வா யோரி முழவாகக்
கொள்ளி வாய்ப்பேய் குழலிக்கு
நல்வாய்ச் செய்ய தசைதேடி
நரிவாய்த் தசையைப் பறிக்குமால். (உரு)

106. நிணமுந் தசையும் பருந்திசிப்ப
3நெருப்பும் பருத்தி யும்பொன்று
பிணமும் பேயுஞ் சுடுகாடும்
பிணங்கு 4நெறியு முடைத்தரோ. (உச)

ச.—கோயில்பாடியது முற்றிற்று.

---

ஐந்தாவது

# தேவியைப் பாடியது.



107. உவையுவை யுளவென் றெண்ணி யுரைப்பதெ னுரைக்கவந்த
வவையவை மகிழ்ந்தமோடி யவயவம் விளம்பல் செய்வாம்.(க)

வேறு.

108. ஒருமலை மத்துவலித் துலவு கயிற்றினுமற்
றுலகு பரித்தபணத் துரக வடத்தினுமப்
பருமணி முத்துநிரைத் துடுமணி தைத்த 5வினைப்
பரிபுரம் வைத்ததளிர்ப் பதயுக ளத்தினளே. (உ)

109. அரவொடு திக்கயமப் பொழுது பரித்தவிடத்
தடியிட வுட்குழிவுற் றசைவுறு மப்பொழுதிற்
றரணி பரித்ததெனப் பரணி தரித்தபுகழ்ச்
சயதர னைப்பரவிச் சதிகொ ணடத்தினளே. (ரு)

(பி-ம்.)—1 'உடனலம்வந்தாடு' 2'உடல்' 3 'நெருப்புப்பருத்தி' 4'நரியும்' 5'வினைப்'

110. பரிவக லத்தழுவிப் புணர்கல விக்குருகிப்
படர்சடை முக்கணுடைப் பரமர் கொடுத்தகளிற்
றுரிமிசை யக்கரியிற் குடரொடு கட்செவியிட்
டொருபுரி யிட்டிறுகப் புனையு முடிக்கையளே.

111. கலைவள ருத்தமனைக் கருமுகி லொப்பவனைக்
கரட தடக் [1]கவுளக் கனக நிறத்தவனைச்
சிலைவளை வித்தவுணத் தொகைசெக விட்டவயிற்
றிறலவ னைத்தருமத் திருவுத ரத்தினளே.

112. தணிதவ ளப்பிறையைச் சடைமிசை வைத்தவிடைத்
தலைவர் வனத்தினிடைத் தனிநுகர் தற்குநினைத்
தணிதவ ளப்பொடியிட் டடைய விலச்சினையிட்
டமுத மிருத்தியசெப் பனைய தனத்தினளே.

113. கவள மதக்கரடக் கரியுரி வைக்கயிலைக்
களிறு விருப்புறுமக் கனக முலைத்தரளத்
தவள வடத்தினிடைப் பவளமொ டொத்தெரியத்
தழலுமி ழுத்தரியத் தனியுர கத்தினளே.

114. அரியு மிடற்றலையிட் டலைகுரு திக்கெதிர்வைத்
தறவு மடுத்தசிவப் பதனை முழுத்திசையிற்
கரிகர டத்தொளையிற் கலுழி யிடைக்கழுவிக்
கருமை படைத்தசுடர்க் கரகம லத்தினளே.

115. சிமைய வரைக்கனகத் திரளுரு கப்பரவைத்
திரைசுவ றிப்புகையத் திசைசுடு மப்பொழுதத்
திமைய வரைத்தகைதற் கிருளு மிடற்றிறைவற்
கினிய தரத்தமுதக் கனியத ரத்தினளே.

116. உருகு தலைத்தொடையற் குவமை யுறச்சுழல்வுற்
றுலவு விழிக்கடைபட் டிடல்பகை யற்றொழியத்
திருகு தலைக்குரவைச் சிறுகுத லைப்பவளச்
சிறுமுறு வற்றரளத் திருவத னத்தினளே.

117. அருமறை யொத்துலகத் தருணெறி யுய்த்தகுணத்
தபய னுதித்தகுலத் துபய குலத்துமுதற்
றிருமதி யொக்குமெனத் தினகர னொக்குமெனத்
திகழ் [2]வத னத்தினிடைத் திலக வனப்பினளே.

(பி - ம்.)— [1]'கடவுட்கனக' [2]'வதனத்தினுடைத்திலக'

வேறு.

118. ஓங்காரத் துட்பொருளா யொருவாது நடந்தானை
நீங்காம னின்றானை யெவ்வண்ண நிகழ்த்துவாம். (௧௨)

119. அண்டமுறுங் குலகிரிக ளவளொருகா லிருகாதிற்
கொண்[1]டணியுங் குதம்பையுமாங் கோத்தணியின் மணிவடமாம். (௧௩)

120. கைம்மலர்மே லம்மனையாங் கந்துகமாங் கழங்குமா
மம்மலைக ளவள்வேண்டி னாகாத தொன்றுண்டோ. (௧௪)

௫.—தேவியைப்பாடியது முற்றிற்று.

---

ஆறாவது

# பேய்களைப் பாடியது.



121. எவ்வணங்கு மடிவணங்க விப்பெருமை படைத்துடைய
வவ்வணங்கை யகலாத வலகைகளை யினிப்புகல்வாம். (௧)

வேறு.

122. பெருநெ டும்பசி பெய்கல மாவன
பிற்றை நாண்முளை நாளின் மெலிவன
கருநெ டும்பனங் காடு முழுமையுங்
காலுங் கையு முடையன போல்வன. (௨)

123. வன்பி லத்தொடு வாதுசெய் வாயின
வாயி னுனிறை யாத வயிற்றின
முன்பி ருக்கின் முகத்தினு மேற்செல
மும்மு ழம்படு மம்முழந் தாளின. (௩)

124. வெற்றெ லும்பை நரம்பின் வலித்துமேல்
[2]வேய்ந்தி லாவிறப் பேய்ந்த வுடம்பின
கொற்றி லம்பெறுங் கூழில மெங்களைக்
[3]கொள்வ தேபணி யென்று குரைப்பன. (௪)

125. உள்ளொ டுங்கி யிரண்டுமொன் றாகவே
யொட்டி யொட்டு விடாத கொடிற்றின
கொள்ளி கொண்டிரண் டேமுழை யுட்புகக்
குன்றி தோன்றுவ போல விழிப்பன. (௫)

---

(பி - ம்.)—1 'அணியிற்' 2 'வெந்திலாவிறகேய்ந்த' 3 'கொல்வதே'

126. வற்ற லாக வுலர்ந்த முதுகுகண்
மரக்க லத்தின் மறிபுற மொப்பன
வொற்றை வான்றொளைப் புற்றெனப் பாம்புட
னுடும்பு [1]முட்டுக் குறங்கிடு முந்திய. (௭

127. பாந்த ணூல்வன போலு முடமயிர்ப்
பாசி பட்ட பழந்தொளை மூக்கின
வாந்தை பாந்தி யிருப்பத் துரிஞ்சில்புக்
கங்கு மிங்கு முலாவுஞ் செவியின. (௮

128. கொட்டு மேழியுங் கோத்தன பல்லின
கோம்பி [2]பாம்பிடைக் கோத்தணி தாலிய
தட்டி வானைத் தகர்க்குந் தலையின
தாழ்ந்து மார்பிடைத் தட்டு முதட்டின. (௯

129. அட்ட மிட்ட நெடுங்கழை காணிலென்
[3]னன்னை யன்னையென் றாலுங் குழவிய
வொட்ட லொட்டகங் காணிலென் பிள்ளையை
யொக்கு மொக்குமென் றெக்கலை கொள்வன. (௬

130. துஞ்ச லுக்கணித் [4]தாமென முன்னமே
சொன்ன சொன்ன துறைதொறும் பேயெலா
மஞ்ச வித்தொரு காலக லாமலவ்
வணங்கி னுக்கரு காக விருக்கவே. (௧௦

131. புயல லிப்பதன் மேலு மளித்திடும்
பொற்க ரத்தப யன் [5]புலி பின்செலக்
கயலொ ளித்த கடுஞ்சுரம் போலகங்
[6]காந்து வெம்பசி யிற்புறந் தீந்தவும். (௧௧

132. ஆளைச் சீறுங் களிற்றப யன்பொரு
மக்க ளத்தி லரசர் சிரஞ்சொரி
மூளைச் சேற்றில் வழுக்கி விழுந்தற
மொழிபெ யர்ந்தொரு கான்முட மானவும். (௧௨

---

(பி - ம்.)—1 'உள்புக் குலாவிடு' 2 'பாம்பிற் பிணித்தணி' 3 'ஐயனைய னென்றாலுங்' 'தாயின மென்பது சொல்ல வஞ்சியச் சொல்லிய பேயெலாம்' 5 'படை முன்செலக்' 6 'காய்ந்து'

133. அந்த நாளக் களத்தடு கூழினுக்
காய்ந்த வெண்பல் லரிசி யுரறகவித்
துந்து போதினிற் போதகக் [1]கோட்டுநீ
டுலக்கை பட்டு வலக்கை [2]சொத் தானவும். (௧௩

134. விருத ராச பயங்கரன் முன்னொர்நாள்
வென்ற சக்கரக் கோட்டத் திடைக்கொழுங்
குருதி யுங்குட ருங்கலந் தட்டவெங்
கூழ்தெ றித்தொரு கண்குரு டானவும். (௧௪

135. வண்டல் பாய்பொன்னி நாடனை வாழ்த்திமா
மதுரை வெங்களத் தேமது ரிக்க [3]வட்
டுண்ட கூழொடு நாவுஞ் சுருண்டுபுக்
குள்வி ழுந்தற வூமைக ளானவும். (௧௫

136. ஆனை சாய வடுபரி யொன்றுகைத்
தைம்ப டைப்பரு வத்தப யன்பொருஞ்
சேனை வீரர்நின் முர்த்திடு மார்பினிற்
றிமிரி வெங்களத் திற்செவி டானவும். (௧௬

137. பண்டு [4]தென்னவர் சாய வதற்குமுன்
பணிசெய் பூத கணங்க ளனைத்தையுங்
கொண்டு வந்துபேய் கூடிய [5]போதிலக்
குமரி மாதர் பெறக்குற ளானவும். (௧௭

138. பரக்கு மோதக் கடார மழித்தநாட்
[6]பாய்ந்து செம்புன லாடியு நீந்தியுங்
குரக்கு வாதம் [7]பிடித்து வலித்தறக்
குடிய டங்கலுங் கூன்முது கானவும். (௧௮)

139. சிங்க ளத்தொடு தென்மது ராபுரி
செற்ற கொற்றவன் வெற்றிகொள் காலையே
வெங்க ளத்தி லடுமடைப் பேய்க்கெலாம்
வேலை புக்கு விரல்க டறிந்தவும். (௧௯)

௬.—பேய்களைப்பாடியது முற்றிற்று.

---

(பி - ம்.)—1 'கொம்பெறு முலக்கை' 2 'சொட்டானவும்', 'சொற்றான வும்' 3 'அன்றுண்ட' 4 'தென்னவன் சாய்வதன் முன்னமே' 5 'பூதவக்' 6 'பாய்ந்த' 7 'பிடித்தவிதத்தினிற்'

ஏழாவது

# இந்திரசாலம்.



140. இவ்வண்ணத் திருபுறமுந் தொழுதிருப்ப
[1]வெலும்பின்மிசைக் குடர்மென் கச்சிற்
செவ்வண்ணக் குருதிதோய் சிறுபூதத்
தீபக்காற் கட்டி விட்டே. (க)

141. பிணமெத்தை யஞ்சடுக்கிப் பேயணையை
முறித்திட்டுத் தூய வெள்ளை
நிணமெத்தை [2]விரித்துயர்ந்த நிலாத்திகழும்
பஞ்சசய னத்தின் மேலே. (உ)

142. கெடாத [3]படி கெடுஞ்செழியர் கெடும்பொழுதி
லிடும்பிண்டி பால மேந்தி
யிடாகினிக ளிருமருங்கு மீச்சோப்பிப்
பணிமாற விருந்த போதில். (ங)

வேறு.

143. அடலுகை வெலும்பெடுத்து நரம்பிற் கட்டி
யடித்தடியும் பிடித்தமரின் மடிந்த வீரர்
[4]குடர்மாலை சூடிநிணச் சட்டை யிட்ட
கோயிலு யகநெடும்பேய் கும்பிட் டாங்கே. (ச)

144. சுரகுருவின் றூதாகி யமன்பாற் செல்வோன்
றுணித்துவைத்த சிரமன்று தின்ற பேயைச்
சிரமரிய வதற்குறவா யொளித்துப் போன
சிலபேயைத் திருவுள்ளத் தறிதி யன்றே. (ரு)

145. அப்பேயி னொருமுதுபேய் வந்து நின்றிங்
கடியேனை விண்ணப்பஞ் செய்க வென்ற
திப்பேயிங் கொருதீங்குஞ் செய்த தில்லை
யென்கொலோ திருவுள்ள மென்னக் கேட்டே. (சு)

---

(பி - ம்.)— [1] 'எலும்பிழிகைக்' [2] 'மிசைவிரித்து நிலாத்' 'பழிவெஞ் செழியர்' [4] 'குடர்சூடிநிணச்சட்டையிட்டுநின்ற'

வேறு.

146\. அழைக்க வென்றலு மழைக்க வந்தணுகி
யஞ்சி யஞ்சியுன தாணையிற்
பிழைக்க வந்தன பொறுத்தெ மக்கருள்செய்
பெண்ண ணங்கென வணங்கவே. (எ)

147\. அருத்தி யிற்பிழை நினைத்த கூளியை
யறுத்த வன்றலை யவன்பெறப்
பொருத்தி யப்பிழை பொறுத்த னம்பிழை
பொறாத தில்லையினி யென்னவே. (அ)

148\. உய்ந்து போயின முவந்தெ மக்கருள
வொன்றொ டொப்பன வொராயிர
மிந்த்ர சாலமுள கற்று வந்தனெ
னிருந்து காணென விறைஞ்சியே. (௯)

149\. ஏற [1]நின்னிரு திருக்கண் வைத்தருள்செ
யிக்கை யிற்சில துதிக்கைபார்
மாறி யிக்கையி லழைக்க மற்றவை
மதக்க ரித்தலைக ளானபார். (க0)

150\. இக்க ரித்தலையின் வாயி னின்றுதிர
நீர்கு டித்துரு மிடித்தெனக்
கொக்க ரித்தலகை சுற்ற மற்றிவை
குறைத்த லைப்பிண மிதப்பபார். (கக)

151\. அடக்க மன்றிது கிடக்க வெம்முடைய
வம்மை வாழ்கவென [3]வெம்மைபார்
கடக்க மன்றபயன் வென்று வென்றிகொள்
களப்பெ ரும்பரணி யின்றுபார். (க௨)

152\. துஞ்சி வீழ்துரக ராசி பாருட
றுணிந்து வீழ்குறை துடிப்பபா
ரஞ்சி யோடுமத யானை பாருதிர
வாறு மோடுவென நூறுபார். (க௩)

---

(பி - ம்.)—1 'நின்றிடு' [2]'நின்றுநீரெதிர்குதித்து' [3]'நன்மை'

153. அற்ற தோளிவை யலைப்ப பாருவை
யறாத நீள்குடர் மிதப்பபா
ரிற்ற தாணரி யிழுப்ப பாரடி
யிழுக்கு மூளையில் வழுக்கல்பார். (௧௪)

154. நிணங்கள் பார்நிண மணங்க ளிந்தன
நிலங்கள் பார்நில மடங்கலும்
பிணங்கள் பாரிவை கிடக்க நம்முடைய
பேய லாதசில பேய்கள்பார். (௧௫)

155. என்ற போதிலிவை மெய்யெ னவுட
னிருந்த பேய்பதறி யொன்றன்மே
லொன்று கான்முறிய மேல்வி ழுந்தடிசி
லுண்ண வெண்ணிவெறு மண்ணிலே. (௧௬)

வே று.

156. விழுந்து கொழுங்குரு திப்புன லென்று
வெறுங்கை முகந்துமுகந்
தெழுந்து விழுந்தசை யென்று நிலத்தை
யிருந்து துழாவிடுமே. (௧௭)

157. சுற்ற நிணத்துகில் பெற்றன மென்று
சுலாவு வெறுங் [1]கையவே
யற்ற குறைத்தலை யென்று விசும்பை
யதுக்கு மெயிற்றினவே. (௧௮)

158. கயிற்றுறி யொப்பதொர் பேய்வறி தேயுடல்
கௌவின [2]தொக்கவிரைந்
தெயிற்றை யதுக்க நிரைத்திடு பேய்க
[3]ளிரைத்தன மேல்விழவே. (௧௯)

159. முறம்பல போல நகங்கண் முறிந்து
முகஞ்சித றுமுதுகுந்
திறம்பி விலாவிற யோகினி மாதர்
சிரித்து விலாவிறவே. (௨௦)

---

(பி - ம்.)—1 'கையினல்' 2 'ஒப்பனினைர்' 3 'இரைந்துநகைத்தனவே'

160. அக்கண மாளு மணங்கினே வந்தனே
செய்து கணங்களெலா
மிக்கண மாளு மினித்தவிர் விச்சை
யெனக்கை விதிர்த்தலுமே. (உக)

## வேறு.

161. கொற்றவர்கொற் றவனபய னறியு மென்று
குவலயத்தோர் கலேயனைத்துங் கூற வாங்கே
[1]கற்றவர்கற் றனவவன்கண் டருளு மாபோற்
கடைபோகக் கண்டருளென் கல்வி யென்றே. (உஉ)

162. வணங்குதலுங் கணங்களெலா மாயப் பாவி
மறித்தெம்மை மறுகூடு சுடுவை யாகி
லணங் [2]கரசி னுணையென வணங்கு மிப்போ
தவைதவிரெங் கிவைகற்ரு யென்ன வாங்கே. (உ௩)

163. நின்முனிவுஞ் சுரகுருவின் முனிவு மஞ்சி
நிலேயரிதென் றிமகிரிபுக் [3]கிருந்தேற் கௌவை
தன்முனிவு மவன்முனிவுந் தவிர்க வென்று
சாதனமந் திரவிச்சை பலவுந் தந்தே. (உச)

164. உன்னுடைய பழவடியா ரடியா டெய்வ
வுருத்திரயோ கினியென்பா [4]ளுனக்கு நன்மை
யின்னமுள கிடைப்பனவிங் கிருக்க வென்ன
யானிருந்தேன் சிலகால மிருந்த நாளில். (உரு)

## எ.—இந்திரசாலம் முற்றிற்று.

---

(பி - ம்.)—1 'சற்றுவந்தார் கற்றவவன் காணுமாபோற்', 'கற்றவை கற்றவையனைத்துங் காணுமாபோற்' 2 'அரசியாணை' 3 'இருந்தோமௌவை' 4 'எனக்கு'

எட்டாவது

# இராச பாரம்பரியம்.



165. செண்டு கொண்டுகரி காலனொரு [1]காலி னிமயச்
சிமய மால்வரை திரித்தருளி மீள வதனைப்
பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற்
பாய்[2]பு லிக்குறி பொறித்தது மறித்த பொழுதே. (க)

166. கால மும்மையு முணர்ந்தருளு நார தனெனுங்
கடவுள் வேதமுனி வந்துகடல் சூழ்பு வியினின்
போலு மன்னருள ரல்லரென வாசி [3]புகலாப்
புகல்வ தொன்றுளது கேளரச வென்று புகல்வான். (உ)

167. பண்டு பாரத மெனுங்கதை பராச ரன்மகன்
பகர வெங்கரி முகன்பரு மருப்பை யொருகைக்
கொண்டு மேருசிக ரத்தொரு புறத்தி [4]லெழுதக்
குவல யம்பெறு தவப்பய னுரைப்ப வரிதால். (ஙு)

168. பார தத்தினுள வாகிய [5]பவித்தி ரகதை
பரம னற்சரிதை மெய்ப்பழைய நான்ம றைகளே
நேர தற்கிதனை நான்மொழிய நீயெ ழுதுமுன்
நெடிய குன்றின்மிசை யேயிசைவ தான கதைகேள். (ச)

169. அதன்மு தற்கண்வரு மாதிமுதன் மாய வனெனு
மைய னும்பரணவ மாகவடை வேத முமதன்
பதம்வ குக்கவரு பாதமது வும்ப தமுடன்
பாத மானசில வந்தபல வந்த வகையும். (ரு)

170. அந்த முட்பட விருக்கும விருக்கின் வழியே
யாகி வந்தவவ் வருக்கமும் வருக்க முழுதும்
வந்த வட்டகமு மொட்டரிய சங்கி தைகளும்
வாய்மை வேதியர்க டாம்விதி யெனும்வ கையுமே. (சு)

(பி - ம்.)—1 'நாளிலிமயச்' 2 'புலிக்கொடி' 3 'பரவிப்' 4 'எழுதிக்' 5 'பவித்ரகதையெம்'

171. கமல யோனிமுத லாகவரு முங்கண் மரபிற்
காவன் மன்னவர்க ளாகிவரு கின்ற முறையா
லமல வேதமிது தானுமிதி லார ணகிலத்
தமல னேயபய னாகவறி கென்ற ருளியே. (எ)

172. அரணி வேள்வியி [1]லகப்படு மகண்ட வுருவா
யரவ ணைத்துயிலு மாதிமுத லாக வபயன்
றரணி காவலள வுஞ்செல மொழிந்து முனிவன்
ருனெ ழுந்தருள மாமுனி மொழிந்த படியே. (அ)

173. ஆதி மாலமல நாபி[2]கம லத்த யனுதித்
தவன்ம ரீசியெனு மண்ணலை யளித்த பரிசுங்
காதல் கூர்தரு மரீசிமக னாகி வருமக்
காசி பன்கதி ரருக்கனை யளித்த பரிசும். (கூ)

174. அவ்வ ருக்கன்மக னாகிமனு மேதி னிபுரந்
தரிய காதலனை யாவினது கன்று நிகரென்
றெவ்வ ருக்கமும் வியப்பமுறை செய்த பரிசு
மிக்கு வாகுவிவன் மைந்தனென வந்த பரிசும். (க0)

175. இக்கு வாகுவின் மகன்புதல்வ னான வுரவோ
[3]னிகலு ரஞ்செய வருஞ்சய புரந்த ரனெனுஞ்
சக்கு வாயிர முடைக்களிறு வாக னமெனத்
தானி ருந்துபொரு தானவரை வென்ற சயமும். (கக)

176. ஒருந்து றைப்புனல் சினப்புலியு மானு முடனே
யுண்ண வைத்தவுர வோனுலகில் வைத்த வருளும்
பொருது றைத்தலை புகுந்துமுசு குந்த னிமையோர்
புரம டங்கலு மரண்செய்து புரந்த புகழும். (கஉ)

177. கடல்க லக்கவெழு மின்னமுது தன்னை யொருவன்
கடவுள் வானவர்க ளுண்ணவருள் செய்த கதையு
முடல்க லக்கற வரிந்துதசை யிட்டு மொருவ
னொருது லைப்புறவொ டொக்கநிறை புக்க புகழும். (கங)

---

(பி - ம்.)—1 'அகப்படவகண்ட' 2'கமலத்தின்மிசையே, யயனுதித்தவன் மரீசியை யளித்த' 3'இகலுவோனிகலுரஞ்செய்துபுரந்'

178. சுராதி ராசன்முத லாகவரு சோழன் முனைநாட்
சோழ மண்டல மமைத்தபிற கேழு லகையு
மிராச கேசரி [1]புரந்துபர கேச ரிகளா
மிருவ ராணைபுலி யாணையென நின்ற புகழும். (கச)

179. கால னுக்கிது வழக்கென வுரைத்த வவனுங்
காவி ரிப்புனல் கொணர்ந்தவவ னும்பு வனியின்
மேல னைத்துயிரும் வீவதிலை யாக நமன்மேல்
வென்றி கொண்டவனு மென்றிவர்கள் கொண்ட விறலும்.

180. புலியெ னக்கொடியி லிந்திரனை வைத்த வவனும்
புணரி யொன்றினிடை யொன்றுபுக விட்ட வவனும்
வலியி னிற்குருதி யுண்கென வளித்த வவனும்
வாத ராசனை வலிந்துபணி கொண்ட வவனும். (கரு)

181. தூங்கு மூன்றெயி [2]லெறிந்தவவ னுந்தி ரண்மணிச்
சுடர்வி மானமது வான்மிசை யுயர்த்த வவனுந்
தாங்கு பாரத முடிப்பளவு நின்று தருமன்
றன்க டற்படை [3]தனக்குதவி செய்த வவனும். (கஎ)

182. தளவ ழிக்குநகை யாளிழி பிலத்தின் வழியே
தனிந டந்துரகர் [4]தங்கண்மணி கொண்ட வவனுங்
களவ ழிக்கவிதை பொய்கையுரை செய்ய வுதியன்
கால்வ ழித்தளையை வெட்டியர சிட்ட வவனும். (கஅ

183. என்று மற்றிவர்க டங்கள்சரி தங்கள் பலவு
மெழுதி மீளவதன் மேல்வழுதி சேரன் மடியத்
தன்ற னிக்களி றணைந்தருளி வீர மகடன்
றனத டங்களொடு தன்புய மணைந்த பரிசும். (கக

வேறு.

184. தொழுது மன்னரே கரைசெய் பொன்னியிற்
றொடர வந்திடா முகரி யைப் [5]படத்
தெழுது கென்றுகண் டிவைமி கைக்கணென்
றிங்க ழிக்கவே யங்க ழிந்ததும். (உ0

(பி - ம்.)—1 'புகுந்த' 2 'எறிந்தவனு மிந்திரன்மணிச்' 3 'தனக்குண தந்தவவனும்' 4 'தங்கள்பதி' 5 'படைத்'

185. தத்து நீர்வராற் குருமி வென்றதுந்
தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
பத்தொ டாறுநூ றுயி ரம்பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும். (உக)

186. ஒருவர் முன்னோர்[1]நா ளொருவர் பின்னோர்நா
ளுதகை மன்னரே மதுரை மன்னரென்
றிருவர் தம்மையுங் கிழிகள் சுற்றுவித்
தெரிவி ளக்குவைத் [2]திகல்வி ளைத்ததும். (உஉ)

187. வேழ மொன்றுகைத் தாலி விண்ணின்வாய்
விசைய டங்கவு மசைய வென்றது
மீழ முந்தமிழ்க் கூட லுஞ்சிதைத்
திகல்க டந்ததோ ரிசைப ரந்ததும். (உரு)

188. சதய நாள்விழா வுதியர் மண்டலந்
தன்னில் வைத்தவன் றனியொர் மாவின்மே
லுதய பானுவொத் துதகை வென்றகோ
னொருகை வாரணம் பலக வர்ந்ததும். (உச)

189. களிறு கங்கைநீ ருண்ண மண்ணையிற்
காய்சி னத்தொடே கலவு செம்பியன்
குளிறு தெண்டிரைக் குரைக டாரமுங்
கொண்டு மண்டலங் குடையுள் வைத்ததும். (உரு)

190. கம்பி லிச்சயத் தம்ப நட்டதுங்
கடிய ரண்கொள்கல் யாணர் கட்டறக்
கிம்பு ரிப்பணைக் கிரியு கைத்தவன்
[3]கிரிக ளெட்டினும் புலிபொ றித்ததும். (உசு)

191. ஒருக ளிற்றின்மேல் வருக ளிற்றையொத்
துலகு யக்கொளப் பொருது கொப்பையிற்
பொருக ளத்திலே முடிக வித்தவன்
புவிக விப்பதோர் குடைக வித்ததும். (உஎ)

வேறு.

192. பனுவலுக்கு முதலாய வேத நான்கிற்
பண்டுரைத்த நெறிபுதுக்கிப் பழைய தங்கண்

(பி - ம்.)—1 'நாடந்து பின்செலா, வுதியர்மன்னரே' 2 'இசைவிளைத்ததும்' 3 'கிரியனைத்தினும்'

[1] மனுவினுக்கு மும்மடிநான் மடியாஞ் சோழன்
மதிக்குடைக்கீ ழறந்தளிர்ப்ப வளர்த்த வாறும். (௨௮)

193. குந்தளரைக் கூடற்சங் கமத்து வென்ற
கோனபயன் குவலயங்காத் தளித்த பின்னை
யிந்தநிலக் குலப்பாவை யிவன்பாற் சேர
வென்னதவஞ் செய்திருந்தா ளென்னத் தோன்றி. (௨௯)

194. எவ்வளவுந் திரிபுவன முளவாய் நிற்கு
மெவ்வளவுங் குலமறைக ளுளவாய்த் தோன்று
மவ்வளவுந் திகிரிவரை யளவுஞ் செங்கோ
லாணைசெல வபயன்காத் தளிக்கு மாறும். (௩௦)

வே று.

195. இப்பு றத்திமய மால்வரையின் மார்பி னகலத்
தெழுதி னெழுது தற்கரிய வேத மெழுதி
யொப்பு றத்தனது தொன்மரபு மம்[2]ம ரபின்மே
லுரைசெய் பல்புகழு மொன்றுமொழி யாத பரிசே. (௩௧)

196. எழுதி மற்றதுரை செய்பவர்கள் செய்பி ழையெலா
மெமர்பொ றுக்கவென விப்படி [3]முடித்த விதனைத்
தொழுது கற்றன னெனத்தொழுது சொல்லு மளவிற்
சோழ வம்சமிது [4]சொன்னபரி சென்ன வழகே. (௩௨)

வே று.

197. வையகமாங் குலமடந்தை மன்னபயன்
றன்னுடைய மரபு கேட்டேற்
கையனையான் பெற்றெடுத்த வப்பொழுது
மிப்பொழுதொத் திருந்த தில்லை. (௩௩)

198. உலகையெலாங் கவிக்கின்ற வொருகவிகைச்
[5]சயதுங்கன் மரபின் கீர்த்தி
யலகையெலாங் கற்றும்மி [6]னகிலபூ
தங்காப்பா னவனே யென்ன. (௩௪)

**௮.—இராசபாரம்பரியம் முற்றிற்று.**

---

(பி-ம்.)—[1] ‘மனுகுலத்துமும்மடிநான்மடிச்சோழன்றன், மதிக்குடைக்கீ ழறங்களிக்கவளர்த்தவாறும்’ [2] ‘மரபிலோடுரைசெய்’ [3] ‘முடிக்க’ [4] ‘சொன்ன வழிவென்ன’ [5] ‘சயதரன்றன்’ [6] ‘அகிலபுவனங்காப்பான்’

ஒன்பதாவது

## பேய்முறைப்பாடு.



199. ஆறுடைய [1]திருமுடியா னருளுடைய
பெருந்தேவி யபயன் காக்கும்
பேறுடைய பூதமாப் பிறவாமற்
பேய்களாய்ப் பிறந்து கெட்டேம். (க)

200. ஆர்காப்ப ரெங்களைநீ யறிந்தருளிக்
காவாயே லடையப் [2]பாழ்த்த
வூர்காக்க மதில்வேண்டா வுயிர்பாழ்த்த
வுடம்பினைவிட் டோடிப் போதும். (உ)

201. ஓய்கின்றே மோய்வுக்கு மினியாற்றே
மொருநாளைக் கொருநா ளுங்க
டேய்கின்ற படிதேய்ந்து மிடுக்கற்றேஞ்
செற்றாலு முய்ய மாட்டேம். (ங)

வேறு.

202. வேகைக்கு விறகானே மேலியா நின்றே
மெலிந்தவுட [3]றடிப்பதற்கு விரகுங் காணேஞ்
சாகைக்கித் தனையாசை போதும் பாழிற்
சாக்காடு மரிதாகத் தந்து வைத்தாய். (ச)

வேறு.

203. சாவத்தான் பெறுதுமோ [4] சதுமுகன்றான்
கீழ்நாங்கண் மேனாட் செய்த
பாவத்தா லெம்வயிற்றிற் பசியைவைத்தான்
பசிக்கல்லே மெங்கட் கல்லேம். (ரு)

204. பதடிகள்போற் காற்றடிக்கப்
பறக்கின்றேம் பசிக்கலந்து பாதி நாக்கு
முதடுகளிற் பாதியுந்தின் றொறுவாயே
மடியேமை [5] யுய்யப் பாராய். (சா)

---

(பி - ம்.)—[1] 'சடைமுடியான்' [2] 'பாழாமூர்காக்குமதில்வேண்டாவுயிர்காத்த, [3] 'தீப்பதற்குவிறகும்' [4] 'சதுமுகனுர்......வைத்தார்' [5] 'ஓட்டப்பாராய்'

205. அகளங்க னமர்க்கிரங்கா னரசரிடுந்
திறைக்கருள்வா னவன்றன் யானை
நிகளம்பூண் டனவடியே நெடும்பசியா
னறவுலர்ந்து நெற்று யற்றேம். (எ)

206. மூக்கருகே [1]வழுநாறி முடைநாறி
யுதடுகளுந் துடிப்ப வாயை
யீக்கதுவுங் குறியாலுய்ந் திருக்கின்றே
மன்றாகி லின்றே சாதும். (அ)

வேறு.

207. என்றுபல கூளிக ளிரைத்துரைசெய் போதத்
தன்றிமய வெற்பினிடை நின்றுவரு மப்பேய். (௯)

208. கைதொழு திறைஞ்சியடி யேன்வட கலிங்கத்
தெய்திய விடத்துள நிமித்தமிவை கேண்மோ. (௧0)

வேறு.

209. மதக்கரி மருப்பிற மதம்புலரு மாலோ
மடப்பிடி மருப்பெழ மதம்பொழியு மாலோ
கதிர்ச்சுடர் விளக்கொளி கறுத்தெரியு மாலோ
[2]காலமுகில் செங்குருதி காலவரு மாலோ. (௧௧)

210. வார்முரச சிருந்துவறி தேயதிரு மாலோ
வந்திரவி லிந்திரவில் வானிலிடு மாலோ
வூர்மனையி லூமனெழ வோரியழு மாலோ
வோமவெரி யீமவெரி போலெரியு மாலோ. (௧௨)

211. பூவியலு மாலைகள் புலால்கமழு மாலோ
பொன்செய்மணி மாலையொளி போயொழியு மாலோ
வோவிய மெலாமுடல் வியர்ப்பவரு மாலோ
வூறுபுனல் செங்குருதி [3]நாறவரு மாலோ. (௧௩)

வேறு.

212. எனவுரை முடித்ததனை யென்கொல்விளை வென்றே
வினவுரை தனக்கெதிர் விளம்பின ளணங்கே. (௧௪)

(பி - ம்.)—1 'வளிநாறி' 2 'கறுத்தமுகில்' 3 'நாறியெழுமாலோ'

வே று.

213. உங்கள் குறியும் வடகலிங்கத் துள்ள குறியு முமக்கழகே
நங்கள் கணிதப் பேய் [1]கூறு நனவுங் கனவுஞ் சொல்லுவாம்.

வே று.

214. நிருபரணி வென்றவக ளங்கன்மத [2]யானைக
ணிணங்கள்கொடு நிற்ப னவதற்
கொருபரணி யுண்டெனு வுரைத்தத வுரைப்படி
யுமக்கிது கிடைக்கு மெனவே. (௧௬)

215. தடித்தன மினித்தலை தடித்தன மெனப்பல
தனிப்பனை குனிப்ப வெனவே
நடித்தன [3]நடிப்பவலி யுற்றன கொடிற்றையு
நனைத்தன வுதட்டி னுடனே. (௧௭)

216. [4]விலக்குக விலக்குக விளைத்தன விளைத்தன
வெனக்களி விளைத்த னவிலா
வலக்குக வலக்குக வடிக்கடி சிரித்தன
வயர்த்தன பசித்த பசியே. (௧௮)

வே று.

217. ஆடியிரைத் தெழுகணங்க ளணங்கேயிக் கலிங்கக்கூழ்
கூடியிரைத் துண்டெழியெங் கூடாரப் போதுங்கொல். (௧௯)

218. போதும்போ தாதெனநீர் புடைப்படல மிடவேண்டா
வோதஞ்சூ ழிலங்கைப்போர்க் கொட்டிரட்டி கலிங்கப்போர்.

௬.—பேய்முறைப்பாடு முற்றிற்று.

---

(பி - ம்.)—1 'சொல்லநாங்கேட்டனவுஞ்' 2 'யானைநிகளங்களொடு' 3 'கடித்தவலிடித்தன கொடிற்றையு' 4 'விலக்குக விளைத்தன விளைத்தன வெனக்களி விளைத்தன விளைத்தனவிலா'

பத்தாவது

# அவதாரம்.



219. அன்றிலங்கை பொருதழித்த வவனேயப்
பாரதப்போர் முடித்துப் பின்னே
வென்றிலங்கு கதிராழி விசயதர
னெனவுதித்தான் விளம்பக் கேண்மின். (க)

220. தேவரெலாங் குறையிரப்பத் தேவகிதன்
றிருவயிற்றில் வசுதே வற்கு
மூவுலகுந் [1]தொழநெடுமான் முன்னொருநா
ளவதாரஞ் செய்த பின்னே. (உ)

221. இருண்முழுதும் புவியகல விரவிகுல
மினிதோங்க விராச ராச
னருடிருவின் றிருவயிறு மாலிலேயி
னவதரித்தா னவனே மீள. (௩)

222. வந்தருளி யவதாரஞ் செய்தலுமே
மண்ணுலகு மறைக ணான்கு
மந்தரநீங் கினவென்ன வந்தரதுந்
துமிமுழங்கி யதிர்ந்த வாங்கே. (௪)

223. அலர்மழையும் பொழிந்தனவாங் கவைகண்டு
கங்கைகொண்ட சோழன் றேவி
குலமகடன் குலமகனைக் கோகனத
மலர்க்கையி லெடுத்துக் கொண்டே. (௫)

224. அவனிபர்க்குப் புரந்தரனா மடையாள
மவயவத்தி [2] னடைவே நோக்கி
யிவனெமக்கு மகனாகி யிரவிகுலம்
[3] பாரிக்கத் தகுவ னென்றே. (௬)

---

(பி - ம்.)—1 'தொழு' 2 'அடைய' 3 'பாலிக்கத்'

வேறு.

225. திங்களி னிளங்குழவி செம்மலிவ னென்றுஞ்
செய்யபரி திக்குழவி யையனிவ னென்றுந்
தங்களின் மகிழ்ந்திரு குலத்தரசர் தாமுந்
தனித்தனி யுவப்பதொர் தவப்பயனு மொத்தே. (எ)

226. பண்டுவசு தேவன்மக னாகிநில மாதின்
[1]படர்களையு மாயனிவ னென்றுதெளி வெய்தத்
தண்டுதனு வாள்பணில நேமியெனு நாமத்
தன்படைக ளானதிரு வைம்படை தரித்தே. (அ)

227. சினப்புலி வளர்ப்பதொர் சிறுப்புலியு மொத்தே
திசைக்களி றணைப்பதொர் தனிக்களிறு மொத்தே
யனைத்தறமு மொக்கவடி வைக்கவடி வைத்தே
யறத்தொடு [2]மறத்துறை நடக்கநடை கற்றே. (௯)

228. தாயர்தரு பான்முலை சுரக்கவரு நாளே
தானுமுல கத்தவர் தமக்கருள் சுரந்தே
தூயமனு வுஞ்சுருதி யும்பொருள் [3]விளங்கச்
சொற்கடெரி யத்தனது சொற்கடெரி வித்தே. (௧௦)

வேறு.

229. திருமார்பின் மலர்மடந்தை திருக்கழுத்தின்
மங்கலநா ணென்ன முந்நூல்
பெருமார்பிற் சிறந்தொளிரப் பிறப்பிரண்டா
வதுபிறந்து சிறந்த பின்னே. (௧௧)

230. போதங்கொண் மாணுருவாய்ப் புவியிரந்த
வஞ்ஞான்று புகன்று [4] சென்ற
வேதங்க ளனைத்துமவன் வேதியர்பாற்
கேட்டருளி மீண்டுங் கற்றே. (௧௨)

231. நிறைவாழ்வைப் பெறனமக்கு மணித்தென்று
நிலப்பாவை களிப்ப விந்தத்
துறைவாளைப் புயத்திருத்தி யுடைவாளைத்
திருவரையி னொளிர வைத்தே. (௧௩)

(பி - ம்.)—1 'பரங்கடியு' 2 'மனுத்துறை' 3 'விளங்கிச்' 4 'கொண்ட'

### வே று.

232. ஈரிரு மருப்புடைய வாரண முகைத்தே
யிந்திர னெதிர்ந்தவரை வென்றுவரு மேல்யா
ேனாரிரு மருப்புடைய வாரண முகைத்தே
யொன்னலரை வெல்வனென வன்னது பயின்றே.(கச)

233. இற்றைவரை யுஞ்செல வருக்கனொரு நாள்போ
லேழ்பரி யுகைத்திரு ளகற்றிவரு மேல்யா
னொற்றைவய மானடவி யித்தரை வளாகத்
துற்றவிரு ளொப்பனென மற்றது பயின்றே. (கரு)

234. சக்கர முதற்படையொ ரைந்துமுத லுளே
தன்னுடைய வானவத லைவை நமக்குத்
திக்குவிச யத்தின்வரு மென்றவை பயிற்றிச்
செங்கைமலர் நொந்தில சுமந்தில தனக்கே. (கசா)

### வே று.

235. உரைசெய்பல கல்விகளி னுரிமைபல சொல்லுவதெ
னுவமையுரை செய்யி னுலகத்
தரசருள ரல்லரென [1]வவைபுகழ மல்குகலை
யவையவை பயின்ற பிறகே. (கஎ)

236. இசையுட னெடுத்தகொடி யபயனவ னிக்கிவனை
யிளவரசில் வைத்த பிறகே
திசையளவு முற்றரசர் திருவினை முகப்பதொரு
திருவுள மடுத்த ருளியே. (கஅ)

237. வளர்வதொர் பதத்தினிடை மதகரி முகத்தினிடை
வளையுகிர் மடுத்து விளையா
டிளவரி யெனப்பகைஞ ரெதிர்முனை களைக்கிழிய
வெறிபடை பிடித்த ருளியே. (கக)

238. குடதிசை புகக்கடவு குரகத ரதத்திரவி
குறுகலு [2]மெறித்த விருள்போல்
வடதிசை முகத்தரசர் வருகத முகத்தனது
[3] குரகத முகைத்த ருளியே. (உ0)

---

(பி - ம்.)—1 'வானவருமல்லரெனவவை' 2 'ஒளிக்குமிருள்' 3 'வயப் பரியுகைத்'

239\. புரமெரி மடுத்தபொழு ததுவிது வெனத்திகிரி
புகையெரி குவிப்ப வயிரா
கரமெரி மடுத்தரசர் கரமெதிர் குவிப்பதொரு
கடவரை தனைக்க டவியே. (உக)

240\. குளமுதிர மெத்தியதொர் குரைகடல் கடுப்பவெதிர்
குறுகலர்கள் விட்ட குதிரைத்
தள [1]முறிய வெட்டியொரு செருமுதிர வொட்டினர்க
டலைமலை குவித்த ருளியே. (உஉ)

வே று.

241\. மனுக்கோட்டங் கவிர்த்தபிரான் வளவர்பிரான் றிருப்புருவத்
தனுக் [2]கோட்ட நமன்கோட்டம் பட்டதுசக் கரக்கோட்டம்.

வே று.

242\. சரிக ளங்தொறுந் தங்கள் சயமக
டன்னை மன்னப யன்கைப் பிடித்தலும்
பரிக ளுங்களி றுந்தன ராசியும
பாரி பொர்கங் கொடுத்தனர் பார்த்திபர். (உச)

243\. பொருத ராதிபர் கண்கள் சிவந்தில
போரி லோடிய கால்கள் சிவந்தன
விருத ராச பயங்கரன் செங்கையில்
வேல்சி வந்தது கீர்த்தி வெளுத்ததே. (உரு)

வே று.

244\. மாவுகைத் தொருதனி யபய னிப்படி
வடதிசை மேற்செல மன்னர் [3]வீரனுங்
தேவருக் கரசென விசும்பின் மேற்செலத்
தென்றிசைக் குப்புகுந் தன்மை செப்புவாம். (உசு)

வே று.

245\. மறையவர் வேள்வி குன்றி மனுநெறி யனைத்து மாறித்
துறைகளோ ராறு [4]மாறிச் சுருதியு முழக்க மோய்ந்தே. ()

(பி - ம்.)—1 'முதிர' 2'கோட்டம் படப்பொடியாய்ப்' 3'மன்னவன்' 4 'மாறச்'

246. சாதிக ளொன்றோ டொன்று தலைதடு மாறி யாரு
மோதிய நெறியி னில்லா தொழுக்கமு மறந்து போயே. ()

247. ஒருவரை யொருவர் கைம்மிக் கும்பர்தங் கோயில் சாம்பி
யரிவையர் கற்புச் சோம்பி யரண்களு மழிய வாங்கே. ()

248. கலியிருள் பரந்த காலைக் கனையிருள் கரக்கத் தோன்று
மொலிகட லருக்க னென்ன வுலகுய்ய வந்து தோன்றி.(௯0)

249. காப்பெலா முடைய தானே படைப்பதுங் கடனாக் கொண்டு
கோப்பெலாங் [1]கோணாந்து பாரைக் குறியிலே நிறுத்தி வைத்தே.()

250. விரிபுனல் வேலை நான்கும் வேதங்க ணான்கு மார்ப்பத்
திரிபுவ னங்கள் [2]வாழ்த்தத் திருவபி டேகஞ் செய்தே. ()

வேறு.

251. அறைகழ லரச ரப்பொழு தடிமிசை யறுகெ டுத்திட
மறையவர் முடியெ டுத்தனர் மனுநெறி தலையெ டுக்கவே.()

252. [3] நிருபம சரித னைப்புனை நெடுமுடி மிசைவி திப்படி
சொரிபுன லிடைமு ளைத்தன துறைகளி னறம னைத்துமே.()

253. பொதுவற வுலகு கைக்கொடு புலிவளர் கொடியெ டுத்தலு
மதுமுதல் கொடியெ டுத்தன [4]வமரர்தம் விழவெ டுக்கவே.

254. குவிகைகொ டரசர் சுற்றிய குரைகழ லபயன் முத்தணி
கவிகையி னிலவெ றித்தது கலியெனு மிருளொ ளித்ததே.()

வேறு.

255. அரனுறை யும்படி மலைக ளடைய விளங்கின வனையோ
னொருதனி வெண்குடை யுலகி லொளிகொ ணலந்தருநிழலில்.

256. அரிதுயி லும்படி கடல்க ளடைய விளங்கின [5]கவினி
னொருகரு வெங்கலி கழுவி யுலவு பெரும்புகழ் நிலவில். ()

257. நிழலி லடைந்தன திசைக ணெறியி லடைந்தன மறைகள்
கழலி லடைந்தன ருதியர் கடலி லடைந்தனர் செழியர்.(௯௯)

258. கருணை யொடுந்தன துபய கரமுத வும்பொருண் மழையி
[6] னரணிய மந்திர வனல்க ளவையுத வும்பெரு மழையே.()

(பி-ம்.)—1 'குலைந்தோர்தம்மைக்' 2 'வாழத்' 3 'நிரைமணிபலகுயிற்றி' 4 'அமரர்கண்முழ' 5 'கலியி லூரனுறு வெங்கறைகழுவி' 6 'அரணியின்மந்திர'

259. பரிசில் சுமந்தனர் கவிஞர் பகடு சுமந்தன திறைக
[1]ளரசர் சுமந்தனர் கழல்க ளவனி சுமந்தன புயமும். (௬௧)

வேறு.

260. விரித்த வாளுகிர் விழித்த முற்புலியை
மீதி ருத்தவிம யத்தினைத்
திரித்த கோலில்வளை வுண்டு [2]நீதிபுனை
செய்ய கோலில்வளை வில்லையே. (௬௨)

261. கதங்க ளிற்பொரு திறைஞ்சி டாவரசர்
கால்க ளிற்றளையு நூல்களின்
பதங்க ளிற்றளையு மன்றி வேறொரு
பதங்க ளிற் [3]றளைக ளில்லையே. (௬௩)

262. மென்க லாபமட மாதர் சீறடி
மிசைச்சி லம்பொலி விளைப்பதோ
ரின்க லாம்விளைவ தன்றி யெங்குமொ
ரிகற்க லாம்விளைவ தில்லையே. (௬௪)

வேறு.

263. வருசெருவொன் றின்மையினன் மற்போருஞ்
சொற்புலவோர் [4]வாதப் போரு
மிருசிறைவா ரணப்போரு மிகன்மதவா
ரணப்போரு [5]மினைய கண்டே. (௬௫)

264. கலையினொடுங் கவிவாணர் கவியினொடு
மிசையினொடுங் காதன் மாதர்
முலையினொடு மனுநீதி முறையினொடு
மறையினொடும் பொழுது போக்கி. (௬௬)

265. காலாற்றண் டலையுழக்குங் காவிரியின்
கரைமருங்கு வேட்டை யாடிப்
பாலாற்றங் கரைமருங்கிற் பரிவேட்டை
யாடுதற்குப் பயண மென்றே. (௬௭)

(பி - ம்.)—1 'அரசுசுமந்தனவிறைகள்' 2 'நீதிபுரி' 3 'தளையுமில்லையே'
4 'வாக்கிற்போரும்' 5 'இனிது'

266. முரசறைகென் றருளுதலு முழுதுலகு
மொருநகருட் புகுந்த தொப்பத்
திரைசெய்கட லொலியடங்கத் [1]திசைநான்கிற்
படைநான்குந் திரண்ட வாங்கே. (சஅ)

267. [2] அழகினு லழகுபெற வணியனைத்து
மணிந்தருளிக் கணித நூலிற்
பழகினர் தெரிந்துரைத்த பழுதறுநாட்
பழுதற்ற பொழுதத் தாங்கே. (சகூ)

வேறு.

268. அனக [3]தானமறை வாணர்பலர் நின்று பெறவே
யபய தானமப யம்புகுது மன்னர் பெறவே
கனக தானமுறை நின்றுகவி வாணர் பெறவே
கரட தானமத வாரணமு மன்று பெறவே. (ரு0)

269. மற்ற வெங்கட களிற்றினுத யக்கி ரியின்மேண்
மதிக வித்திட வுதித்திடு மருக்க னெனவே
கொற்ற வெண்குடை கவிப்பமிசை கொண்டு கவரிக்
குலம திப்புடை [4]கவிழ்த்தநில வொத்து வரவே. (ருக)

270. ஒருவ லம்புரி தழங்கொலி முழங்கி யெழவே
யுடன்மு ழங்குபணி லம்பல முழங்கி [5]யெழவே
பருவம் வந்துபல கொண்டல்கண் முழங்குமெனவே
பலவி தங்களொடு பல்லிய முழங்கி வரவே. (ருஉ)

271. மன்னர் சீர்செய மிகுந்திடை விடாத வொலியு
மறைவ லாளர்மறை நான்மையின் வழாத வொலியு
மின்ன மாகடன் முழங்கியெழு கின்ற வொலியென்
றிம்ப ரும்பரறி யாதபரி செங்கு மிகவே. (ருங)

272. வாழி சோழகுல சேகரன் வகுத்த விசையின்
மதுர வாரியென லாகுமிசை மாத ரிதெனு
வேழு [6]பாருலகொ டேழிசை வளர்க்க வுரியான்
யானை மீதுபிரி யாதுட னிருந்து வரவே. (ருச)

(பி - ம்.)—1 'திரை' 2 'அழகின்மேல்' 3 'தானதருமங்கண்மறைமன்னர் பெறவே' 4 'குவித்த' 5 'வரவே' 6 'பாருலகினேழிசைகள் சூழவருவான்'

273. பொன்னின் மாலைமலர் மாலைபணி மாறி யுடனே
புவனி காவலர்க டேவியர்கள் [1]சூழ்பு டைவரச்
சென்னி [2]யானையுட னானையை நடத்து முரிமைத்
தியாக வல்லிநிறை [3]செல்வியுடன் சேர்ந்து வரவே.(ருரு)

274. பிடியின் மேல்வரு பிடிக்குல மநேக மெனவே
பெய்வ ளைக்கைமட மாதர்பிடி மீது வரவே
முடியின் மேன்முடி நிரைத்துவரு கின்ற தெனவே
முறைசெய் மன்னவர்கள் பொற்குடை கவித்து வரவே.()

275. ஆனை மீதுவரு மானையு மநேக மெனவே
யடுக ளிற்றின்மிசை [4]கொண்டரச நேகம் வரவே
சேனை மீதுமொரு சேனைவரு கின்ற தெனவே
தெளிப டைக்கல மெலாமொளி படைத்து வரவே.(ருஎ)

276. முகிலின் மேன்முகின் முழங்கிவரு கின்ற தெனவே
மூரி யானைகளின் மேன்முரச திர்ந்து வரவே
துகிலின் மேல்வரு துகிற் [5]குலமு மொக்கு மெனவே
தோகை நீள்கொடிகண் மேன்முகி றொடங்கி வரவே.(ருஅ)

77. தேரின் மீதுவரு தேர்களு மநேக மெனவே
செம்பொன் மேகலை நிதம்பநிரை தேரின் வரவே
பாரின் மீதுமொரு பாருளது போலு மெனவே
படல தூளியு மெழுந்தடைய மூடி வரவே. (ருகூ)

வேறு.

278. யானை மேலிளம் பிடியின் மேனிரைத்
திடைய ரூதபொன் னிலக டங்களச்
சேனை மாகடற் கபய னிம்முறைச்
சேது பந்தனஞ் செய்த தொக்கவே. (சூo)

279. நீல மாமணிச் சிவிகை வெள்ளமு
நித்தி லக்குலக் கவிகை வெள்ளமுங்
காலி னல்வரும் யமுனை வெள்ளமுங்
கங்கை வெள்ளமுங் காண்மி னென்னவே. (சூக)

(பி-ம்.)—1 'சூழ்பிடி' 2 'ஆனையுடனானையை' 3 'செல்வமுடனல்கிவரவே', 'செல்வியுடன்மல்கி' 4 'கொண்டவரனேகர்' 5 'குலமனேகமெனவே'

280. கெண்டை மாசுண மூவணம் வாரணங்
கேழ லாளிமா மேழி கோழிவிற்
கொண்ட வாயிரங் கொடிநு டங்கவே
குமுறு வெம்புலிக் கொடி[1]யி லங்கவே. (சுஉ)

281. தொடைகொள் கந்தரம் புடைகொள் கொங்கைகண்
சோதி வாண்முகங் கோதை யோதிமென்
னடைகொ ளின்சொலென் றடைய வொப்பிலா
நகைம ணிக்கொடித் தொகைப ரக்கவே. (சுங)

வே று.

282. எங்குமுள மென்கதலி யெங்குமுள தண்கமுக
மெங்குமுள பொங்கு மிளநீ
ரெங்குமுள பைங்குமிழ்க ளெங்குமுள [2] செங்குமுத
மெங்குமுள செங்க யல்களே. (சுச)

283. ஆறலை தரங்கமுள வன்னநடை தாமுமுள
வாலைகமழ் பாகு முளவாய்
வேறுமொரு பொன்னிவள நாடெசய துங்கன்முன்
விதித்ததுவு மொக்கு மெனவே. (சுரு)

284. வேழநிரை யென்றமலை யெங்குமிடை கின்றவயில்
வென்றியப யன்ற னருளால்
வாழவப யம்புகுது சேரனொடு கூடிமலை
நாடடைய வந்த தெனவே. (சுசு)

285. அக்கிரி குலங்கள்விடு மங்குலியி னுண்டிவலை
யச்செழிய ரஞ்சி விடுமத்
திக்கினுள நித்தில முகந்துகொடு வீசியொரு
தென்றல்வரு கின்ற தெனவே. (சுஎ)

286. தென்றிசையி னின்றுவட திக்கின்முகம் வைத்தருளி
முக்கணுடை வெள்ளி மலையோன்
மன்றினட மாடியருள் கொண்டுவிடை கொண்டதிகை
மாநகருள் விட்ட ருளியே. (சுஅ)

(பி - ம்.)—1 'குலாவவே' 2 'செங்கமலம்'

287. விட்டவதி கைப்பதியி னின்றுபய ணம்பயணம்
விட்டுவிளை யாடி யபயன்
வட்டமதி யொத்தகுடை மன்னர்தொழ நண்ணினன்
வளங்கெழுவு கச்சி நகரே. (௬௯)

288. என்னுமித மென்மொழி யெடுத்திறைவி சொல்லுவதன்
முன்னமிகல் கண்ட தொருபேய்
தன்னுடைய காறனது பிற்பட மனத்துவகை
தள்ளிவர வோடி வரவே. (௭௦)

வேறு.

289. கலிங்கர் குருதி குருதி கலிங்க மடைய வடைய
மெலிந்த வுடல்க டடிமின் மெலிந்த வுடல்க டடிமின். ()

290. உணங்கல் வயிறு குளிர வுவந்து பருக விறைவி
கணங்க ளெழுக வெழுக கணங்க ளெழுக வெழுக. (௭௨)

வேறு.

291. என்செயப் பாவி காளிங் கிருப்பதங் கிதற்கு முன்னே
வன்சிறைக் கழுகும் பாறும் வயிறுகள் பீறிப் போன.(௭௩)

292. வயிறுக ளென்னிற் போதா [1]வாய்களும் போதா பண்டை
யெயிறுக ளென்னிற் போதா வென்னினு மீண்டப் போதும்.

293. சிரமலை விழுங்கச் செந்நீர்த் திரைகடல் பருக லாகப்
பிரமனை வேண்டிப் பின்னும் பெரும்பசி பெறவும் வேண்டும்.

வேறு.

294. என்ற வோகை தஞ்செவிக் கிசைத்த லுந்த சைப்பிணந்
தின்ற போற்ப ருத்துமெய் சிரித்து மேல்வி ழுந்துமே.(௭௬)

295. ஓகை சொன்ன பேயின்வாயை யோடி முத்த முண்ணுமே
சாகை சொன்ன பேய்களைத் தகர்க்க பற்க ளென்னுமே. ()

296. பிள்ளை வீழ வீழவும் பெருந்து ணங்கை கொட்டுமே
வள்ளை பாடி யாடியோடி வாமெ ளுவ ழைக்குமே. (௭௮)

297. மனுவு டுத்த தேவிவாழி வாழி யென்று [2]பாடியே
கனவு ரைத்த பேயினைக் கழுத்தி னிற்கொ டாடுமே.(௭௯)

---

(பி - ம்.)—1 'வாய்களேற்', 'வாய்களோ' 2'வாழ்த்தியே', 'வாழ்த்துமே'

வே று.

298. ஆடிவரு பேய்களி னலந்தலை தவிர்த்தடு
பறந்தலை யறிந்த தனினின்
றோடிவரு பேயையிக லுள்ளபடி சொல்கென
வுரைத்தன ளுரைத்த ருளவே. (அ௦)

க௦.—அவதாரம் முற்றிற்று.

---

பதினோராவது

## காளிக்குக் கூளி கூறியது.



299. மாவா யிரமும் படக்கலிங்கர்
மடிந்த களப்போ ருரைப்போர்க்கு
நாவா யிரமுங் கேட்போர்க்கு
நாளா யிரமும் வேண்டுமால். (க)

300. ஒருவர்க் கொருவாய் கொண்டுரைக்க
வொண்ணு தெனினு [1]முண்டாகச்
செருவைச் சிறியேன் விண்ணப்பஞ்
செய்யச் சிறிது கேட்டருளே. (உ)

வே று.

301 பாரெ லாமுடை யானப யன்கொடைப்
பங்க யக்கர மொப்பெனப் பண்டொர்நாட்
காரெ லாமெழுந் தேழுரை நாழிகை
காஞ்ச னம்பொழி காஞ்சி யதன்கணே. (௩)

302. அம்பொன் மேரு வதுகொ லிதுகொலென்
றும்பி ரங்கதிர் வெய்யவ னேயுறுஞ்
செம்பொன் மாளிகைத் தென்குட திக்கினிற்
செய்த சித்திர மண்டபந் தன்னிலே. (௪)

303. மொய்த்தி லங்கிய தாரகை வானினீண்
முகட்டெ ழுந்த முழுமதிக் கொப்பென

---

(பி - ம்.)—1 'உண்டாகுஞ்'

நெய்த்தி லங்கிய நித்திலப் பந்தரி
னின்று வெண்குடை யொன்று நிழற்றவே. (ரு)

304. மேற்க வித்த மதிக்குடை யின்புடை
வீசு கின்றவெண் சாமரை தன்றிருப்
பாற்க டற்றிரை யோரிரண் டாங்கிரு
பாலும் வந்து பணிசெய்வ [1]போலவே. (சு)

305. அங்கண் ஞால மனைத்தும் புயத்தில்வைத்
தாட கக்கிரி யிற்புலி வைத்தவன்
சிங்க வாசனத் தேறி யிருப்பதோர்
சிங்க வேறெனச் செவ்வி சிறக்கவே. (எ)

306. பணிப்ப ணத்துறை பார்க்கொரு நாயகன்
பல்க லைத்துறை நாவி லுறைந்தவன்
மணிப்[2]ப ணிப்புயத் தேசிங்க வாகனி
வந்து செந்திரு மாதொ டிருக்கவே. (அ)

307. தரும டங்க முகந்து தனம்பொழி
தன்பு யம்பிரி யாச்சயப் பாவையுந்
திரும டந்தையும் போற்பெரும் புண்ணியஞ்
செய்த தேவியர் சேவித் திருக்கவே. (கூ)

308. நாட காதி நிருத்த மனைத்தினு
நால்வ கைப்பெரும் பண்ணினு மெண்ணிய
வாடல் பாட லரம்பைய ரொத்துள
வணுக்கி மாரு மநேக ரிருக்கவே. (க0)

309. சூதர் மாகத ராதிய மாந்தருந்
துய்ய மங்கலப் பாடகர் தாமுநின்
பாத மாதுர ராயவ ருக்கெலாம்
பைம்பொன் மௌலி யெனப்புகழ் பாடவே. (கக)

310. வீணை யாழ்குழ றண்ணுமை வல்லவர்
வேறு வேறிவை நூறு விதம்படக்
காண லாம்வகை கண்டன நீயினிக்
காண்டல் வேண்டு மெனக்கழல் போற்றவே. (கஉ)

(பி - ம்.)—[1] 'போலுமே' [2] 'பணைப்புயத்தே'

311. தாள முஞ்செல வும்பிழை யாவகை
 தான்வ குத்தன தன்னெதிர் பாடியே
காள முங்களி றும்பெறும் பாணர்தங்
 கல்வி யிற்பிழை கண்டனன் கேட்கவே. (கங)

312. வெங்க ளிற்றி னிழிந்தபின் வந்தடி
 வீழ்ந்த மன்னவர் வெந்நிடு முன்னிடு
தங்கள் பொற்குடை சாமர மென்றிவை
 தாங்க டங்கரத் தாற்பணி மாறவே. (கச)

313. தென்ன ராதி நராதிப ரானவர்
 தேவி மார்கடன் சேடியராகவே
மன்ன ராதிபன் [1]வானவ ராதிபன்
 வந்தி ருந்தன னென்ன விருக்கவே. (கரு)

314. மண்ட லீகரு மாநில வேந்தரும்
 வந்து ணங்கு கடைத்தலை வண்டைமன்
றொண்டை மான்முதன் மந்திர பாரகர்
 சூழ்ந்து தன்கழல் சூடி யிருக்கவே. (கசு)

315. முறையி டத்தரு மந்திர வோலையாண்
 முன்வ ணங்கி முழுவதும் வேந்தர்தந்
திறையி டப்புற நின்றன ரென்றலுஞ்
 செய்த நோக்கில்வந் தெய்தி நெருக்கவே. (கஎ)

வேறு.

316. தென்னவர் வில்லவர் கூவகர் சாவகர் சேதிபர் யாதவரே
 கன்னடர் பல்லவர் கைதவர் காடவர் காரிபர் கோசலரே. ()

317. கங்கர் [2]கடாரர் கவிந்தர் துமிந்தர் கடம்பர் துளும்பர்களே
 வங்க ரிலாடர் மராடர் விராடர் மயிந்தர் சயிந்தர்களே. (கசூ)

318. சிங்களர் வங்களர் சேகுணர் சேவணர் [3]சீயண ரையணரே
 கொங்கணர் கொங்கர் குலிங்க ரவந்தியர் குச்சரர் கச்சியரே.

319. வத்தவர் மத்திரர் மாளுவர் மாகதர் மச்சர் மிலேச்சர்களே
 குத்திரர் குத்தர் குடக்கர் பிடக்கர் குருக்கர் துருக்கர்களே.

(பி - ம்.)—1 'வானவர் தம்பிறை' 2 'கராளர்' 3 'செய்யவர்' 4 'குத்தர் திகத்தர் விடக்கர் துருக்கர் குருக்கர் வியத்தர்களே'

320. எங்கக ரங்களு நாடு மெமக்கருள் செய்தனை யெம்மையிடச்
சொன்ன கரங்கள் கொணர்ந்தன மென்றடி சூடு கரங்களொடே.

வேறு.

321. ஆர மிவையிவை பொற்கல மானை யிவையிவை யொட்டக
மாட லயமிவை மற்றிவை யாதி முடியொடு பெட்டக
மீர முடையன நித்தில மேறு நவமணி கட்டிய
வேக வடமிவை மற்றிவை யாதும் விலையில் பதக்கமே.()

322. இவையு மிவையு மணித்திர ளினைய வினைய தனக்குவை
யிருளும் வெயிலு மெறித்திட விலகு மிவைமக ரக்குழை
யுவையு முவையு மிலக்கண முடைய பிடியுவை புட்பக
முயர்செய்கொடியிவைமற்றிவையுரிமையரிவையர்பட்டமே.

323. ஏறி யருள வடுக்குமிந் நூறு களிறு மிவற்றெதி
ரேனை யரச ரொருத்தரோ ரானை யிடுவ ரெனிற்புவி
மாறி யருள வவர்க்கிடை யாமு மிசைவ மெனப்பல
மான வரசர் தனித்தனி வாழ்வு கருதி யுரைப்பரே. ()

வேறு.

324. அரச ரஞ்சலென வடியி ரண்டுமவர்
முடியில் வைத்தருளி யரசர்மற்
றுரைசெ யுந்திறைக ளொழிய நின்றவரு
முளர்கொ லென்றருளு பொழுதிலே. (௨௬)

325. கடவ தந்திறைகொ டடைய வந்தரசர்
கழல்வ ணங்கினர்க ளிவருடன்
வடக லிங்கர்பதி யவனி ரண்டுவிசை
வருகி லன்றிறைகொ டெனலுமே. (௨௭)

326. உறுவ தென்கொலென வுடல்கு லைந்தரச
ருயிர்ந டுங்கவொளிர் பவளவாய்
முறுவல் கொண்டபொரு ளறிகி லஞ்சிறிது
முனிவு கொண்டதிலை வதனமே. (௨௮)

327. எளிய னென்றிடினும் வலிய குன்றரண
மிடிய நம்படைஞர் கடிதுசென்
றளிய லம்புமத மலைகள் கொண்டணைமி
னவனை யுங்கொணர்மி னெனலுமே. (௨௯)

328. இறைமொ ழிந்தளவி லெழுக லிங்கமவை
யெறிவெ னென்றுகழ றெழுதனன்
பிறமன் மறைமொ ழிந்தபடி மரபின் வந்தகுல
திலகன் வண்டைநக ரரசனே. (௩0)

வே று.

329. அடைய வத்திசைப் பகை[1]து கைப்பனென்
றுரைசெ கொண்டடற் றெண்டைமான்
விடையெ னக்கெனப் புலியு யர்த்தவன்
விடை [2]கொ டுக்கவப் பொழுதிலே. (௩க)

## (படையெழுச்சி)

330. கடல் [3]க லக்கல்கொன் மலையி டித்தல்கொல்
கடுவி டப்பொறிப் பணபணிப்
பிடரொ டித்தல்கொல் படைநி னைப்பெனப்
பிரள யத்தினிற் றிரளவே. (௩உ)

331. வளைக லிப்பவு முரசொ லிப்பவு
[4] மரமி ரட்டவும் வயிரமாத்
தொளையி சைப்பவுந் திசையி பச்செவித்
தொளைய டைத்தலைத் தொடரவே. (௩௩)

வே று.

332. குடைநி ரைத்தலிற் றழைநெ ருக்கலிற்
கொடிவி ரித்தலிற் குளிர்ச துக்கமொத்
திடை [5]நி ரைத்தலிற் பகல்க ரப்பவுய்த்
திருநி லப்பரப் பிருள்ப ரக்கவே. (௩ச)

333. அலகில் வட்டிகை தழல்வி ழித்தலா
லரிய பொற்பணிக் கலனி மைத்தலா
லிலகு கைப்படை கனல்வி ரித்தலா
லிருள்க ரக்கவே யொளிப ரக்கவே. (௩ரு)

---

(பி - ம்.)—1 'தமிப்பனென்' 2'கொடுத்தவப்' 3'கலக்கவோ மலையிடிக்க வோ......பிடரொடிக்கவோ' 4'மரையிரட்டவும்' 5'நெருக்கலிற்'

334. அகில வெற்புமின் றனை யானவோ
வடைய மாருதம் புரவி யானவோ
முகில னைத்துமத் தேர்க ளானவோ
மூரி வேலைபோர் வீர ரானவோ. (௩௬)

335. பார்சி றுத்தலிற் படைபெ ருத்ததோ
படைபெ ருத்தலிற் பார்சி றுத்ததோ
நேர்செ றுத்தவர்க் கரிது நிற்பிட
நெடுவி சும்பலா லிடமு மில்லையே. (௩௭)

336. எனவெ டுத்துரைத் ததிச யித்துநின்
றினைய மண்ணுளோ ரனைய விண்ணுளோர்
மனந டுக்குறப் [1]புறம றைத்தவான்
மாதி ரங்களைச் சாது ரங்கமே. (௩௮)

வே று.

337. கடல்க ளைச்சொரி மலையுள வெனவிரு
கடத டத்திடை பொழிமத முடையன
கனல்[2]வி ளைப்பன முகிலுள வெனவிழி
கனல்சி னத்தன கரியொடு பரிகளி
னுடல்பி ளப்பன பிறைசில வுளவென
வுயர்ம ருப்பின வுலகுகள் குலைதர
வுருமி டிப்பன வடவன லுளவென
வொலிமு ழக்கின கடகரி மிடையவே. (௩௯)

338. முனைக ளொட்டினர் முடிகளை யிடறுவ
முடியின் முத்தினை [3]விளைபுக ழெனநில
முதுகில் வித்துவ நிலமுறு துகளற
முகின்மி திப்பன முகில்விடு துளியொடு
கனைக டற்றிரை நிரையென விரைவொடு
கடலி டத்தினை வலமிடம் வருவன
[4] கடலி டத்திறு மிடியென வடியிடு
கவன மிக்கன கதழ்பரி கடுகவே. (௪௦)

(பி - ம்.)—1 'பொறைமறைத்தலான்மாதிரங்களிற்' 2'விழிப்பன' 3'விளை புலமெனநில முழுதும்வித்துவ' 4 'கடலிடைத்துயிலரியெழவடியிடு'

339. [1]இருநி லத்திட ருடைபடு முருளன
விருபு டைச்சிற குடையன முனைபெறி
னெதிர்ப றப்பன விடுநுக மொடுகொடி
திவுளி முற்படி னிதுபரி பவமெனு
மொருநி னைப்பினை யுடையன [2]வினையன
வுயர்செய் மொட்டொடு [3]நறுமல ரெனவவிழ்
வொழிதெ ரச்செரு வுறுபுன லுமிழ்வன
வுலக ளப்பன விரதமும் விரவவே. (சக)

340. அலகில் வெற்றியு முரிமையு மிவையென
வவய வத்தினி லெழுதிய வறிகுறி
யவையெ னப்பல வடுநிரை யுடையவ
ரடிபெ றக்கிடி லமரர்த முலகொடிவ்
வுலகு கைப்படு மெனினும தொழிபவ
ருடலெ மக்கொரு சுமையென முனிபவ
ருயிரை விற்றுறு புகழ்கொள வுழல்பவ
ரொருவ ரொப்பவர் படைஞர்கண் மிடையவே. (சஉ

வேறு.

341. விழித்த விழிகனல் விழித்த விருதர்கள்
விடைத்து [4]வெடுவெடு சிரித்தவாய்
தெழித்த பொழுதுட றிமிர்க்க விமையவர்
திகைக்கண் மதகரி திகைக்கவே. (சஙு

342. உகத்தின் முடிவினி லுதைத்த கனைகட
லுவட்டி தெனமுகின் முகட்டின்மே
னகைத்து விடுபரி முகத்து நுரைசுர
நதிக்க ணுரையென மிதக்கவே. (சச

343. கழப்பில் வெளில்சுளி கதத்தி விருகவுள்
கவிழ்த்த கடமடி பொறுத்தபார்
குழப்பி வருமுகின் முழங்கி னலைகடல்
குடித்த முகில்களு [5]மிடிக்கவே. (சரு

(பி - ம்.)— 1 'இருநிலத்தொடு மடைவிலவுருளொடு மிருபுடைச்சிற குடையன முனையெதி ரெதிர்' 2 'வலியன', 'வரையென' 3 'மலரெனநிறுவி வொலிதரச்' 4 'விடுவிடு' 5 'இடிக்கவே'

344. கடுத்த விசையிருள் கொடுத்த வுலகொரு
 [1]கணத்தில் வலம்வரு கணிப்பிறே
றெடுத்த கொடிதிசை யிபத்தின் மதமிசை
 யிருக்கு மளிகளை யெழுப்பவே. (சசு

வேறு.

345. எழுந்தது சேனை யெழலு மிருந்தது பாரின் முதுகு
விழுந்தன [2]கான மடைய வெறுந்தரை யான நதிகள். (சஎ

346. அதிர்ந்தன நாலு திசைக ளடங்கின வேழு கடல்கள்
பிதிர்ந்தன மூரி மலைகள் பிறந்தது தூளி படலம். (சஅ

347. நிலந்தரு தூளி பருகி நிறைந்தது வானின் வயிறு
வலந்தரு மேக நிரைகள் வறந்தன நீர்கள் சுவறி. (சகூ

348. தயங்கொளி யோடை வரைகள் தருங்கட தாரை மழையி
னயங்களின் வாயி னுரையி [3]னடங்கின தூளி யடைய. (ருO

வேறு.

349. எழுதூளி யடங்க நடந்துதயத்
 தேகுந்திசை கண்டது மீளவெழும்
பொழுதேக லொழிந்து கடற்படையெப்
 பொழுதுந்தவி ராது வழிக்கொளவே. (ருக

350. தண்ணார்மலர் சேர்திர டோளபயன்
 றனேவிய சேனை தனக்கடையக்
கண்ணாகிய சோழ னிசக்கரமாங்
 கருணாகரன் வாரண மேற்கொளவே. (ருஉ

வேறு.

351. தொண்டை யர்க்கரசு முன்வ ருஞ்சுரபி
 துங்க [4]வெள்விடை யுயர்த்தகோன்
வண்டை யர்க்கரசு பல்ல வர்க்கரசு
 மால்க ளிற்றின்மிசை கொள்ளவே. (ருங

352. வாசி கொண்டரசர் வார ணங்கவர
 வாணர் கோவரையன் வாண்முகத்
தூசி கொண்டுமுடி கொண்ட சோழனொரு
 சூழி வேழமிசை கொள்ளவே. (ருச

---

(பி - ம்.)—1 'கணத்திலளவிடு' 2 'கானமலையும்' [3] 'அவிந்தது தூளிபடலம்' 4 'வேள்கொடி'

வே று.

353. [1] மறிந்தோடி யெவ்வரசுஞ் சாய வென்று
வருமனுக்கைப் பல்லவர்கோன் வளவர் வேந்தோ
டெறிந்தோடி யிலங்கோடைக் களிறு மேற்கொண்
டிரைவேட்ட [2]பெரும்புலிபோ லிகன்மேற் செல்ல. (ருரு)

வே று.

354. [3]பாலாறு குசைத்தலை பொன்முகரிப்
பழவாறு படர்ந்தெழு கொல்லியெனு
நாலாறு மகன்றொரு பெண்ணையெனு
நதியாறு கடந்து நடந்துடனே. (ருசு)

355. [4]வயலாறு புகுந்து மணிப்புனல்பாய்
மண்ணாறு வளங்கெழு [5]குன்றியெனும்
[6]பெயலாறு பரந்து நிறைந்துவரும்
பேராறு மிழிந்தது பிற்படவே. (ருஎ)

வே று.

356. கோதா வரிநதி மேலா றொடுகுளிர்
[7]பம்பா வளநதி சந்தப்பே
ரோதா வருநதி யொருகோ தமையுட
னொலிநீர் மலிதுறை பிறகாக. (ருஅ)

357. கடையிற் புடைபெயர் கடலொத் [8]தரசர்
கலங்கும் பரிசு கலிங்கம்புக்
கடையப் படரெரி கொளுவிப் பதிகளை
யழியச் சூறைகொள் பொழுதத்தே. (ருகூ)

358. கங்கா நதியொரு புறமா கப்படை
கடல்போல் வந்தது கடல்வந்தா
லெங்கே புகலிட மெங்கே யினியரண்
[9]யாதோ விதுவிது விதியென்றே. (சுo)

---

(பி - ம்.)—1 'மறித்தோடிவடவரசர்சரியவென்று வருமனுக்கப்பல்லவர் கோன் வண்டைவேந்த, னெறித்தோடையிலங்குநடைக்களிற்றின்' 2 'சினப்புலி யொத்திகன்' 3 'பாலாறு குரைத்தலைபொன் முகரியாறு பழவாறு பரந்தெறியுங் கொல்லியென்னு, நாலாறு மன்றொருநாட் கடந்துபெண்ணை நதியாறுங் கடந்துடனே நடந்துசெல்ல.' 4 'வாயாறு' 5 'குண்டி', 'குண்டை','முண்டி' 6'பேயாறு' 7 'கம்பா' 8 'அமரர்' 9 'யாரேயதிபதியிங்கென்றே'

359. இடிகின் றனமதி லெரிகின் றனபதி
யெழுகின் றனபுகை பொழிலெல்லா
மடிகின் றனகுடி கெடுகின் றனமினி
வளைகின் றனபடை [1]பகையென்றே. (சுக)

360. உலகுக் கொருமுத லபயற் கிடுதிறை
யுரைதப் பியதெம தரசேயெம்
பலகற் பனைகளை நினைவுற் றிலேவரு
படைமற் றவன்விடு படையென்றே. (சுஉ)

361. உரையிற் குழறியு முடலிற் பதறியு
மொருவர்க் கொருவர்முன் முறையிட்டே
யரையிற் றுகில்விழ வடையச் சனபதி
யடியிற் [2]புகவிழு பொழுதத்தே. (சுரு)

வேறு.

362. அந்தரமொன் றறியாத வடகலிங்கர்
குலவேந்த னனந்த பன்மன்
வெந்தறுகண் வெகுளியினல் வெய்துயிர்த்துக்
கைபுடைத்து வியர்த்து நோக்கி. (சுச)

363. வண்டினுக்குந் திசையானை மதங்கொடுக்கு
மலர்க்கவிகை யபயற் கன்றித்
தண்டினுக்கு மெளியேனே வெனவெகுண்டு
தடம்புயங்கள் குலுங்க நக்கே. (சுரு)

364. கானரணு மலையரணுங் கடலரணுஞ்
சூழ்கிடந்த கலிங்கர் பூமி
தானரண முடைத்தென்று கருதாது
வருவதுமத் தண்டு போலும். (சுசு)

வேறு.

365. [3]என்று கூறலு மானவன் மந்திரி
யொன்று கூறுவன் கேளென் றுணர்த்துவான். (சுஎ)

366. அரசர் சீறுவ ரேனு மடியவ
ருரைசெ யாதொழி யார்க ளுறுதியே. (சுஅ)

---

(பி - ம்.)—1 'படையென்றே' 2 'புகவிழவழலுற்றே' 3 'என்றுகூறவே யெங்கராயனு, னென்றுகூறகே னென்றுரைக்குமால்.'

367. ஏனை வேந்தை யெறியச் சயதரன்
றானை யல்லது தானவன் வேண்டுமோ. (௬௯)

368. விட்ட [1]தண்டெழ மீனவ ரைவருங்
கெட்ட கேட்டினைக் கேட்டிலை போலுநீ. (௭௦)

369. போரின் மேற்றண் டெடுக்கப் புறக்கிடுஞ்
சேரர் வார்த்தை செவிப்பட்ட தில்லையோ. (௭௧)

370. வேலை [2]கொண்டு விழிஞ மழித்ததுஞ்
சாலை கொண்டதுந் தண்டு [3]கொண் டேயன்றோ. (௭௨)

371. மாறு பட்டெழு தண்டெழ வத்தவ
ரேறு பட்டது மிம்முறை [4]யேயன்றோ. (௭௩)

372. தளத்தொ டும்பொரு தண்டெழப் பண்டொர்நா
டளத்தி பட்ட தறிந்திலை யையநீ. (௭௪)

373. தண்ட நாயகர் தாக்கு நவிலையிற்
[5] கொண்ட வாயிரங் குஞ்சர மல்லவோ. (௭௫)

374. உழந்து தாமுடை மண்டலந் தண்டினு
ளிழந்த வேந்த ரினையரென் றெண்ணுகேன். (௭௬)

375. கண்டு காணுன் புயவலி நீயுமத்
தண்டு [6]கொண்டவன் சக்கரம் வந்ததே. (௭௭)

376. இன்று சீறினு நாளையச் சேனைமுன்
னின்ற போதினி லென்னை நினைத்தியால். (௭௮)

வேறு.

377. என்றிவை யுரைத்தலு [7]மெனக்கெதி ருரைக்கவிமை
யோர்களு நடுங்கு வர்புயக்
குன்றிவை செருத்தொழில் பெறுதுநெடு நாண்மெலிவு
கொண்டபடி கண்டி லையோ. (௭௯)

378. பிழைக்கவுரை செய்தனை பிழைத்தனை யெனக்குறுதி
பேசுவது வாசி கெடவோ
முழைக்கணிள வாளரி [8] முகத்தெளி தெனக்களிறு
முட்டியெதிர் கிட்டி வருமோ. (௮௦)

(பி - ம்.)—1 'தண்டினின்' 2 'கொண்ட' 3 'கொண்டல்லவோ' 4 'யல்லவோ' 5 'கொண்டதாயிரங்' 6 'காணவன் சக்கரமாவதே' 7 'எனக்கிவையுரைக்க' 8 'முனைக்கெழி லினக்களிறு'

379. என்னுடைய தோள்வலியு மென்னுடைய வாள்வலியும்
யாதுமறி யாது பிறர்போ
னின்னுடைய பேதைமையி னுலுரைசெய் தாயிது
நினைப்பளவில் [1]வெல்ல வரிதோ. (அக)

380. வேழமிர தம்புரவி வெம்படைஞ ரென்றினைய
நம்படை விரைந்து கடுகச்
சோழகுல துங்கன்விட வந்துவிடு தண்டினெதிர்
சென்றமர் தொடங்கு கெனவே. (அஉ)

381. பண்ணுக வயக்களிறு பண்ணுக வயப்புரவி
பண்ணுக கணிப்பில் பலதேர்
நண்ணுக படைச்செருநர் நண்ணுக செருக்கள
நமக்கிகல் கிடைத்த தெனவே. (அங)

382. கலிங்கமவை யேழினு மெழுந்ததொரு பேரொலி
கறங்குகட லேழு முடனே
மலங்கியெழு பேரொலி யெனத்திசை திகைப்புற
வருந்தொனி யெழுந்த பொழுதே. (அச)

வே று.

383. தொளைமுக மதமலை யதிர்வன தொடுகடல்
பருகிய முகிலெனவே
வளைமுக நுரையுக வருபரி கடலிடை
மறிதிரை நிரையெனவே. (அரு)

384. விசைபெற விடுபரி யிரதமு மறிகடன்
மிசைவிடு கலமெனவே
யிசைபெற வுயிரையு மிகழ்தரு மிளையவ
ரெறிசுற வினமெனவே. (அசு)

385. அறைகழ லிளையவர் முறுகிய சினவழ
லதுவட வனலெனவே
முறைமுறை முரசுகண் மொகுமொகு வதிர்வன
முதிர்கட லதிர்வெனவே. (அஎ)

(பி - ம்.)—1 'வெல்வதரிதே'

386. இடையிடை யரசர்க ளிடுகுடை கவரிக
ளிவைதிரை நுரையெனவே
மிடைகொடி பிறழ்வன மறிகட லுடையவு
மிளிர்தரு கயலெனவே. (அஅ)

387. அலகிலொ டலகுகள் கலகல வெனுமொலி
[1]யறைதிரை யொலியெனவே
யுலகுகள் பருகுவ தொருகட லிதுவென
வுடலிய படையெழவே. (அகூ)

388. விடவிகண் மொடுமொடு விசைபட முறிபட
வெளிபட நெறிபடவே
யடவிகள் பொடிபட வருவிக ளனல்பட
வருவரை துகள்படவே. (கூ0)

389. ஒருவர்த முடலினி லொருவர்த முடல்புக
வுறுவதொர் படியுறவே
வெருவர மிடைபடை நடுவொரு விரலிட
விழியிட வெளியரிதே. (கூக)

390. வெளியரி [2]தெனவெதிர் மிடைபடை மனுபரன்
விடுபடை யதனெதிரே
[3]யெளிதினி னிரைபெறு புலியென வலியினொ
டெடுமெடு மெடுமெனவே. (கூஉ)

## (போர்)

### வேறு.

391. எடுமெடு மெடுமென வெடுத்ததோ
ரிகலொலி கடலொலி [4]யிகக்கவே
விடுவிடு விடுபரி கரிக்குழாம்
[5] விடும்விடு மெனுமொலி மிகைக்கவே. (கூ௩)

392. வெருவர வரிசிலை தெறித்தநாண்
விசைபடு திசைமுகம் வெடிக்கவே
செருவிடை யிளையவர் தெழித்ததோர்
தெழியுல குகள்செவி டெடுக்கவே. (கூச)

---

(பி - ம்.)—1 'அலைதிரை' 2 'எனமிடைமனுபரனனுபமன்' 3 'எளிதென விரைபெறு' 4 'அவிக்கவே' 5 'விடுமெனுமொலிதிசையிசைக்கவே'

393. எறிகட லொடுகடல் கிடைத்தபோ
விருபடை களுமெதிர் கிடைக்கவே
மறிதிரை யொடுதிரை மலைத்தபோல்
வருபரி யொடுபரி மலைக்கவே. (கூரு)

394. கனவரை யொடுவரை முனைத்தபோற்
கடகரி யொடுகரி முனைக்கவே
யினமுகி லொடுமுகி லெதிர்த்தபோ
லிரதமு மிரதமு மெதிர்க்கவே. (கூசு)

395. பொருபுலி புலியொடு [1]சிலைத்தபோற்
பொருபட ரொடுபடர் சிலைக்கவே
யரியினொ டரியின மடர்ப்பபோ
லரசரு மரசரு மடர்க்கவே. (கூஎ)

396. விளைகனல் விழிகளின் முளைக்கவே
[2] மினலொளி கனலிடை பிறக்கவே
வளைசிலை யுருமென விடிக்கவே
வடிகணை நெடுமழை சிறக்கவே. (கூஅ)

397. குருதியி னதிவெளி பரக்கவே
[3] குடர்நிரை நுரையென மிதக்கவே
கரிதுணி படுமுட லடுக்கியே
கரையென விருபுடை கிடக்கவே. (கூகூ)

வேறு.

398. மருப்பொடு [4]மருப்பெதிர் பொருப்பிவை யெனப்பொரு
மதக்கரி மருப்பி னிடையே
நெருப்பொடு நெருப்பெதிர் சுடர்ப்பொறி தெறித்தெழ
நிழற்கொடி தழற்க துவவே. (௪௦௦)

399. நிழற்கொடி தழற்கது வலிற்கடி தொளித்தவை
[5] நினைப்பவர் நினைப்ப தன்முனே
யழற்படு புகைக்கொடி யெடுத்தன புதுக்கொடி
யனைத்தினு நிரைத்த தெனவே. (௪௦க)

(பி - ம்.)—1 'சிலைப்பபோற்' 2 'வெயிலொளிகனலிடை யெறிக்கவே' 3 'குடையினநுரை' 4 'பொருப்பிவை யெனப்பொருமதக்கரி மருப்பொடு மருப்பினிடையே' 5 'நினைத்தவர்'

400. இடத்திடை வலத்திடை யிருத்திய [1]துணைக்கர
நிகர்த்தன வடுத்த கரியின்
கடத்திடை மடுத்துழு தெடுத்தன சிறப்பொடு
கறுத்தன வவற்றி னெயிறே. (௧௦௨)

வே று.

401. எயிறுக ளுடைய பொருப்பை வலித்திடை
யெதிரெதி ரிருபலை யிட்டு முறுக்கிய
கயிறுக ளிவையென [2]வொத்த கடக்கரி
கரமொடு கரமெதிர் தெற்றி வலிப்பவே. (௧௦௩)

402. முடுகிய பவன பதத்தி னுகக்கடை
முடிவினி லுலக முணச்சுடர் விட்டெழு
கடுகிய வடவன லத்தினை வைத்தது
களமுறு துரக கணத்தின் முகத்திலே. (௧௦௪)

403. களமுறு துரக கணத்தின் [3]முகத்தெதிர்
கறுவிலர் சிலர்கல வித்தலை நித்தில
விளமுலை யெதிர்பொரு மப்பொழு திப்பொழு
தெனவெதிர் கரியின் மருப்பெதிர் நிற்பரே. (௧௦௫)

404. எதிர்பொரு கரியின் மருப்பை யுரத்தினி
லிறவெறி படையி னிறுத்து மிறைத்தெழு
[4] சதுரர்த மணியக லத்து மருப்பவை
சயமகள் களப முலைக்குறி யொக்குமே. (௧௦௬)

405. சயமகள் களப முலைக்கணி யத்[5]தகு
தனிவட மிவையென மத்தக முத்தினை
யயமெதிர் கடவி மதக்கரி வெட்டின
ரலைபடை நிரைகள் களத்து நிரைக்கவே. (௧௦௭)

406. அலைபடை நிரைக ணிரைத்த செருக்கள
[6] மழல்புரி களமென வொப்பில விற்படை
தலைபொர [7]வெரிய நெருப்பினின் மற்றது
தழல்படு கழைவன மொக்கினு மொக்குமே. (௧௦௮)

---

(பி - ம்.)—1 'துணைப்பிறை நிகர்ப்பினுமெதிர்த்த கரியின், கடத்தெழு மதத்திடை மடுத்தனசிவப்பொடு' 2 'அக்கரடக்கரி' 3 'முகத்தொரு' 4 '**சதிரர்**' 5 '**தரு**' 6 'அமர்புரி' 7 'எரியுநெருப்பின'

407. தழல்படு கழைவன மெப்படி யப்படி
சடசட தமர மெழுப்பக ழிப்படை
யழல்படு புகைபொழி யப்பொழி யச்சில
ரடுசிலை பகழி தொடுத்து வலிப்பரே. (கoகூ)

408. அடுசிலை பகழி தொடுத்து விடப்புகு
மளவினி லயமெதிர் விட்டவர் வெட்டின
ருடல்சில விருதுணி பட்டன பட்டபி
ன்னொருதுணி கருது மிலக்கை யழிக்குமே. (ககo)

409. ஒருதுணி கருது மிலக்கை [1]யழித்தெழ
வுருவிய பிறைமுக வப்பக ழித்தலை
யரிதரி திதுவு மெனப்பரி யுய்ப்பவ
ரடியொடு முடிக டுணித்து விழுத்துமே. (ககக)

410. அடியொடு முடிக டுணித்து விழப்புகு
மளவரி தொடையக லத்தொ டணைத்தனர்
நெடியன சிலசர மப்படி பெற்றவர்
நிறைசர நிமிர விடத்துணி யுற்றவே. (ககஉ)

411. நிறைசர நிமிர விடத்துணி யுற்றவர்
நெறியினை யொடியெறி கிற்பவ ரொத்தெதி
ரறைகழல் விருதர் [2]செருக்கற வெட்டலி
னவருட லிருவகிர் பட்டன முட்டவே. (ககரு)

வேறு.

412. [3] விடுத்த வீர ராயுதங்கண் மேல்வி ழாம லேநிரைத்
[4] தெடுத்த வேலி போற்கலிங்கர் வட்ட ணங்க ளிட்டவே. ()

413. இட்ட வட்ட ணங்கண்மே லெறிந்த வேறி றந்தவாய்
வட்ட மிட்ட நீண்மதிற்கு வைத்த நூழை யொக்குமே. ()

414. கலக்க மற்ற வீரர்வாள் [5]கலந்த சூரர் கைத்தலத்
துலக்கை யுச்சி தைத்தபோ துழுங்க லப்பை யொக்குமே.

415. மத்த யானை யின்கரஞ் சுருண்டு வீழ வன்சரந்
தைத்த போதி லக்கரங்கள் சக்க ரங்க ளொக்குமே. (ககா)

(பி - ம்.)—1 'அழித்தனவுருவிய', 'அழித்தெழுமுரவிய' 2 'நெருக்கறவெட்டினர்' 3 'விடைத்த' 4 'அடைத்தவேலிபோற்கலிங்க ரட்டணங்கள்' 5 'கலந்து'

416. வெங்க யத்தின் மத்தகத்தின் வீழு முத்து வீரமா
மங்கை யர்க்கு மங்கலப் பொரிச்சொ ரிந்த தொக்குமே. ()

417. மறிந்த கேட கங்கிடப்ப மைந்தர் துஞ்சி வைகிவேர்
பறிந்த தேரி னேமியோடு பார்கி டப்ப தொக்குமே. (ககசூ)

418. களித்த வீரர் விட்டநேமி கண்டு வீசு தண்டிடைக்
குளித்த போது கைப்பிடித்த கூர்ம மூக்க னொக்குமே. ()

419. கவந்த மாட முன்புதங் களிப்பொ டாடு பேயின
நிவந்த வாட லாட்டுவிக்கு நித்த கார ரொக்குமே. (கஉக)

420. ஒட்ட கங்கள் யானை[1]வாணி லுய்த்த மாவு ழந்தபோர்
விட்ட கன்று போகிலாது மீள்வ போலு மீளுமே. (கஉஉ)

421. பிறங்கு சோரி வாரியிற் பிளிற்றி வீழ்க ளிற்றினங்
கறங்கு வேலை நீருணக் கவிழ்ந்த மேக மொக்குமே. (கஉங)

422. வாளில் வெட்டி வாரணக்கை தோளி விட்ட மைந்தர்தாந்
தோளி விட்டு நீர்விடுந் துருத்தி யாள ரொப்பரே. (கஉச)

வே று.

423. நேர்முனையிற் [2]பிடித்த பகழிக
ணேரெழவிற் சுழற்று மளவினின்
மார்பிடையிற் குளித்த பகழியை
வார்சிலையிற் றொடுத்து விடுவரே. (கஉரு)

424. அசையவுரத் [3]தழுத்தி யிவுளியை
யடுசவளத் தெடுத்த பொழுதவை
விசையமகட் கெடுத்த கொடியென
விருதர்களத் தெடுத்து வருவரே. (கஉசா)

425. இருதொடையற் றிருக்கு மறவர்க
ளெதிர்பொருகைக் களிற்றி னடல்கெட
வொருதொடையைச் சுழற்றி யெறிவர்க
ளொருதொடையிட் டுவைப்ப ரெறியவே. (கஉஎ)

426. இருவருரத் தினுற்ற [4]சுரிகையி
னெதிரெதிர்புக் கிமைக்கு மளவினி
லொருவரெனக் கிடைத்த [5]பொழுதினி
லுபயபலத் தெடுத்த தரவமே. (கஉஅ)

(பி - ம்.)—1 'வாளுயர்த்தமாவழிந்தபோர்' 2 'றொடுத்த' 3 'அழுத்து மிவுளி' 4 'விசிகையின்' 5 'இகலினு ளுபயபெலத்தொடொத் துதைப்பரே'

வேறு.

427. பொருநர்கள் சிலர்த முரத்தி னிற்கவிழ்
புகர்முக மிசையடி யிட்ட திற்பகை
விருதரை யரிவர் சிரத்தை யச்சிரம்
விழு[1]பொரு தறையெனு மக்க ளிற்றையே. (கஉகூ)

428. விடுபடை பெறுகிலர் மற்றி னிச்சிலர்
விரைபரி விழவெறி தற்கு முற்பட
வடுகரி நுதல்பட விட்ட கைப்படை
யதனையொர் நொடிவரை யிற்ப றிப்பரே. (கஙo)

429. அமர்புரி தமதக லத்தி டைக்கவி
ழடுகரி நுதலி லடிட்ப ரிக்களி
றெமதென விருகண் விழிக்க வுட்கின
ரெனவிடு கிலர்படை ஞர்க்கு வெட்கியே. (கஙக)

வேறு.

430. அலகில் செருமுதிர் போதில் வண்டைய
ரரச னரசர்க ளுதன் மந்திரி
யுலகு புகழ்கரு ணுக ரன்றன
தொருகை யிருபணை வேழ முந்தவே. (கஙஉ)

431. அணிக ளொருமுக மாக வுந்தின
வமர ரமரது காண முந்தினர்
துணிகள் படமத மாமு றிந்தன
துரக நிரையொடு தேர்மு றிந்தவே. (கஙங)

432. விருத ரிருதுணி பார்நி றைந்தன
விடர்க டலைமலை வான்வ ளர்ந்தன
குருதி குரைகடல் போறப ரந்தன
குடர்கள் குருதியின் மேன்மி தந்தவே. (கஙச)

433. [2] கசைகள் கருவிக ளோடு சிந்தின
கழுகு [3]நிரையொடு காக முண்டன
[4] திசைக டிசைமலை யோட திர்ந்தன
திமில குமில மெலாம்வி ளைந்தவே. (கஙரு)

(பி - ம்.)—1 'பொருதுடை', 'பொழுதுடை' 2 'கரிகள்' 3 'நரியொடு' 4 'திரைகள்'

434. புரசை மதமலை யாயி ரங்கொடு
1 பொருவ மெனவரு மேழ்க லிங்கர்த
மரச னுரைசெய்த வாண்மை யுங்கெட
வமரி லெதிர்விழி யாதொ துங்கியே. (கஙசு)

435. அறியு முழைகளி லோப துங்கிய
தரிய பிலனிடை யோம றைந்தது
செறியு மடவியி லோக ரந்தது
தெரிய வரியதெ னுவ டங்கவே. (கஙஎ)

436. எதுகொ லிதுவிது மாயை யொன்றுகொ
லெரிகொன் மறலிகொ லூழி யின்கடை.
யதுகொ லெனவல றுவி ரிந்தன
ரலதி குலதியொ டேழ்க லிங்கரே. (கஙஅ)

437. வழிவர் சிலர்கட.ல் பாய்வர் வெங்கரி
மறைவர் சிலர்வழி தேடி வன்பில
மிழிவர் சிலர்சிலர் தூறு மண்டுவ
ரிருவ ரொருவழி போக லின்றியே. (கஙகூ)

438. ஒருவ ரொருவரி னோடை முந்தின
ருடலி 2னிழலினை யோட வஞ்சின
ரருவ ரருவ ரெனுவி றைஞ்சின
ரபய மபய மெனுந டுங்கியே. (கசo)

439. மழைக ளதிர்வன போல திர்ந்தெழும்
வளவன் விடுபடை வேழ மென்றிருண்
முழைக ளுழைவர்கள் போரி லின்றுந
முதுகு செயுமுப கார மென்பரே. (கசக)

440. உபய குலமும்வி டாவொ ழுங்குடை
யொருவ னெளிதினில் வாகை முன்கொள
வபய மிடுபடை யேழ்க லிங்கமு
மடைய வொருமுக மாய்மு றிந்தவே. (கசஉ)

வேறு.

441. எழுக லிங்க 3மொருவ னழித்தநா
ளொருக லிங்க மெழுவ ருடுத்ததே. (கசங)

(பி - ம்.)—1 'பொருவனென' 2 'இழிவினை யோடலஞ்சினர், வருவர் வருவ ரெனுவிறைஞ்சினர் மறவரபய' 3 'இறைவன்'

வே று.

442. அப்படிக் கலிங்க ரோட வடர்த்தெறி சேனை வீரர்
கைப்படு களிறு மாவுங் கணித்துரைப் பவர்கள் யாரே. ()

443. புண்டொறுங் குருதி பாயப் பொழிதரு கடமும் பாய
வண்டொடும் பருந்தி னோடும் வளைப்புண்ட களிற நேகம்.()

444. ஓட்டறப் பட்ட போரி [1]லூர்பவர் தம்மை வீசிக்
கட்டறுத் தவர்போ னின்று கட்டுண்ட களிறநேகம். (கசசு)

445. வரைசில புலிக ளோடும் வந்துகட் டுண்ட வேபோ
லரைசருந் தாமுங் கட்டுண் டகப்பட்ட களிற நேகம். (கசஎ)

வே று.

446. நடைவ யப்பரி யிரத மொட்டக
நவநி திக்குவை மகளிரென்
றடைய வப்பொழு தவர்கள் [2]கைக்கொளு
மவைக ணிப்பது மருமையே. (கசஅ)

447. இவைக வர்ந்தபி னெழுக லிங்கர்த
மிறையை யுங்கொடு பெயர்துமென்
றவனி ருந்துழி யறிக வென்றன
னபயன் மந்திரி முதல்வனே. (கசகூ)

448. உரைகள் பிற்படு மளவி லொற்றர்க
ளொலிக டற்படை கடிதுபோய்
வரைக ளிற்புடை தடவி யப்படி
வனமி லைப்புரை தடவியே. (கருo)

449. சுவடு பெற்றில மவனை மற்றொரு
சுவடு பெற்றன மொருமலைக்
குவடு பற்றிய தவன டற்படை
[3] யதுகு ணிப்பரி தெனலுமே. (கருக)

வே று.

450. எக்குவடு மெக்கடலு மெந்தக் காடு
மினிக்கலிங்கர் காணவரி தென்று நாளு
மக்குவடு மக்கடலும் வளைந்து வெய்யோ
னத்தமனக் குவடணையு மளவிற் சென்றே. (கருஉ)

(பி - ம்.)—1 'உகைப்பவர்' 2 'கைப்படும்' 3 'கொணரவப்பரிசெனலுமே'

451. தோலாத களிற்றபயன் வேட்டைப் பன்றி
தொழுவடைத்துத் தொழுவதனைக் காப்பார் போல
வேலாலும் வில்லாலும் வேலி கோலி
வெற்பதனை விடியளவுங் காத்து நின்றே. (௪௫௧)

452. செம்மலையா யொளிபடைத்த தியாதோ வென்றுஞ்
செங்கதிரோ னுதயஞ்செய் துதய மென்னு
மம்மலையோ விம்மலையு மென்னத் தெவ்வ
ரழிகுருதி நதிபரக்க வறுக்கும் போழ்தில். (௪௫௨)

453. வரைக்கலிங்கந் தமைச்சேர மாசை யேற்றி
வன்றூறு பறித்துமயிர்க் குறையும் வாங்கி
யரைக்கலிங்க முரிப்புண்ட கலிங்க ரெல்லா
மமணரெனப் பிழைத்தாரு மநேக ராங்கே. (௪௫௩)

454. வேடத்தாற் குறையாது மூந்நூ லாக
வெஞ்சிலைநாண் மடித்திட்டு விதியாற் கங்கை
யாடப்போந் தகப்பட்டேங் [1]காத்தோம் பென்றென்
றிறந்தாவிட் டுயிர்பிழைத்தா ரநேக ராங்கே. (௪௫௪)

455. குறியாகக் குருதிநீர்க் கோடி யாடை
கொண்டுடுத்துப் போர்த்துத்தங் குஞ்சி முண்டித்
தறியீரோ சாக்கியரை யுடைகண் டா[2]லென்
றப்பிரமண் ணியமிடுவா ரநேக ராங்கே. (௪௫௫)

456. சேனைமடி களங்கண்டு திகைத்து நின்றேந்
தெலுங்கரே மென்றுசிலைக் கலிங்கர் தங்க
ளானைமணி யினைத்தாளம் [3]பிடித்துப் பாடி
யுடிப்பாண ரெனப்பிழைத்தா ரநேக ராங்கே. (௪௫௬)

457. இவர்கண்மே லினியொருவர் பிழைத்தா ரில்லை
யெழுகலிங்கத் தோவியர்க ளெழுதி வைத்த
சுவர்கண்மே லுடலன்றி யுடல்க ளெல்லாந்
தொட்டீர்த்துப் பிடித்தறுத்தார் சூர ராங்கே. (௪௫௭)

---

(பி - ம்.)— 1 'காந்தேமென்றே யரிதனைவிட்' 2 'என் னப்புறமென் றியம்பிடுவ ரனேகர்' 3 'பிடித்துக்கும்பிட்டு'

458. கடற்கலிங்க மெறிந்துசயத் தம்ப நாட்டிக்
கடகரியும் [1]வயமாவுந் தனமுங் கொண்டு
சுடர்க்கதிர்வா ளபயனடி யருளி னேடுஞ்
சூடினன் வண்டையர்கோன் றொண்டை மானே. (கசுo)

வே று.

459. தேவாசுர ராமாயண மாபாரத முளவென்
றோவாவுரை யோயும்படி யுளதப்பொரு களமே. (கசுக)

கக.—காளிக்குக் கூளி கூறியது முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

## களங்காட்டியது.



460. காலக்கள மதுகண்டரு ளிறைவீகடி [2]தெனவே
யாலக்கள முடையான்மகி ழமுதக்கள மணுகி. (க)

461. என்னேயொரு செருவெங்கள மெனவேயதி சயமுற்
றந்நேரிழை யலகைக்கண மவைகண்டிட மொழியும். (உ)

வே று.

462. உடலின்மேற் [3]பலகாயஞ் சொரிந்து பின்கா
லுடன்பதைக்க வுதிரத்தே யொழுகும் யானை
கடலின்மேற் கலந்தொடரப் பின்னே செல்லுங்
கலம்போன்று தோன்றுவன காண்மின் காண்மின். (ங)

463. நெடுங்குதிரை மிசைக்கலினை சரியப் பாய்ந்து
நிணச்சேற்றிற் கால்குளிப்ப நிரையே நின்று
படுங்குருதிக் கடும்புனலை யடைக்கப் பாய்ந்த
பலகுதிரைத் தறிபோன்ற பரிசு காண்மின். (ச)

464. விருந்தினரும் வறியவரு நெருங்கி [4]யுண்ண
மேன்மேலு முகமலரு மேலோர் போலப்
பருந்தினமுங் கழுகினமுந் தாமே யுண்ணப்
பதுமமுக மலர்ந்தாரைப் பார்மின் பார்மின். (ரு)

---

(பி - ம்.)—1 'குவிதனமுங் கவர்ந்து தெய்வச், சுடர்ப்படைவாள்' 2 'என லும், ஆலக்களமுடையாளு மகிழ்ந்தக்களம்' 3 'பெருங்காயஞ்' 4 'அண்ண'

465. சாமளவும் பிறர்க்குதவா தவரை நச்சிச்
சாருநர்போல் வீரருட றரிக்கு மாவி
போமளவு [1]மவரருகே யிருந்து விட்டுப்
போகாத நரிக்குலத்தின் புணர்ச்சி காண்மின். (௬)

466. மாமழைபோற் பொழிகின்ற தான வாரி
மறுத்துவிழுங் கடகளிற்றை வெறுத்து வானோர்
பூமழைமேற் பாய்ந்தெழுந்து [2]நிரந்த வண்டு
பொருட்பெண்டிர் போன்றனவுங் காண்மின் காண்மின்.

467. சாய்ந்துவிழுங் கடகளிற்றி னுடனே சாய்ந்து
தடங்குருதி மிசைப்படியுங் கொடிக டங்கள்
காந்தருடன் கனலமளி யதன்மேல் வைகுங்
கற்புடைமா தரையொத்தல் காண்மின் காண்மின். (அ)

468. தங்கணவ ருடன்றாமும் போக வென்றே
சாதகரைக் கேட்பாரே தடவிப் பார்ப்பா
[3]ரெங்கணவர் கிடந்தவிட மெங்கே யென்றென்
றிடாகினியைக் கேட்பாரைக் காண்மின் காண்மின். (௯)

469. வாய்மடித்துக் கிடந்ததலை மகனை நோக்கி
மணியதரத் [4]தேதேனும் வடுவுண் டாயோ
நீமடித்துக் கிடந்ததெனப் புலவி கூர்ந்து
நின்றாவி சோர்வாளைக் காண்மின் காண்மின். (௧௦)

470. தரைமகளுந் தன்கொழுந னுடலந் தன்னைத்
தாங்காமற் றன்கரத்தாற் றாங்கி விண்ணாட்
டரமகளி ரவ்வுயிரைப் புணரா முன்ன
மாவியொக்க விடுவாளைக் காண்மின் காண்மின். (௧௧)

471. பொருதடக்கை வாளெங்கே மணிமார் பெங்கே
[5]போர்முகத்தி லெவர்வரினும் புறங்கொ டாத
பருவயிரத் தோளெங்கே யெங்கே யென்று
பயிரவியைக் கேட்பாளைக் காண்மின் காண்மின். (௧௨)

---

(பி - ம்.)—1 'அழுதருகே' 2 'நிறைந்த' 3 'எங்கணவரெங்கணவரெங்கே' 4 'தேனுண்டு' 5 'பூமியெலாந்திரண்டாலும் புறங்'

வேறு.

472. ஆடற் றுரங்கம் பிடித்தானை யாளோ
டடித்துப் புடைத்துப்புணீ
ரோடித் தெறிக்கக் கருங்கொண்டல் செங்கொண்ட
லொக்கின்ற காண்மின்களோ. (கரு)

473. நெருங்காக வச்செங் களத்தே தயங்குந்
நிணப்போர்வை மூடிக்கொளக்
கருங்காகம் வெண்காக [1]மாகின்ற வாமுண்பு
காணாத காண்மின்களோ. (கச)

474. மிடையுற்ற தேர்மொட்டு மொட்டொக்க வெஞ்சோரி
நீரொக்க வீழ்தொங்கல்பா
சடையொக்க வஞ்செங் களம்பங்க யப்பொய்கை
யாமாறு காண்மின்களோ. (கரு)

475. வெயிற்றுரை வேல்சூழ வுந்தைக்க மண்மேல
விழாவீரர் வேழம்பர்தங்
கயிற்று [2]விழுப்புண்டு சாயாது நிற்குங்
கழாயொத்தல் காண்மின்களோ. (கசு)

476. இருப்புக் கவந்தத்தின் மீதேற லுஞ்[3]சூர
ரெஃகம்பு தைக்கப்பறை
பரப்பிச் சுழன்றிங்கொர் பாருட வீதோர்
பருந்தாடல் காண்மின்களோ. (கஎ)

477. வருஞ்சேனை தஞ்சேனை மேல்வந் துருமேயவ்
வாள்வீரர் வாணாளுகக்
கருஞ்சேவ கஞ்செய்து [4]செஞ்சோ றறச்செய்த
கைம்மாறு காண்மின்களோ. (கஅ)

478. யானைப் படைச்சூரர் நேரான போழ்தற்
றெழுந்தாடு கின்றார்தலை
மானச் சயப்பாவை விட்டாடு மம்மானை
வட்டொத்தல் காண்மின்களோ. (ககூ)

---

(பி - ம்.)— 1 'ஆய்கின்ற வாமுன்பு காண்மின்கள் காண்மின்களோ' 2 'இசிப்புண்டு' 3 'சேரவெஃகம்பு' 4 'செஞ்சோற்றறஞ்'

* இதுமுதல் ஏழுதாழிசைகள் சிலபிரதிகளி லில்லை.

வேறு.

479. எதிர்கொளுஞ் சுரர்விமா னங்களிற் சுரர்களா
யேறுமா னவர்கடா மெண்ணுதற் கருமையிற்
கதிர்விசும் பதனிலே யிதனிலும் பெரியதோர்
காளையம் விளையுமா காண்மினோ காண்மினோ. (உ0)

480. அவரிபஞ் சொரிமதங் கழியெனப் புகமடுத்
தவர்பரித் திரையலைத் தமர்செய்கா லிங்கர்தங்
கவரிவெண் ணுரைநிரைத் தவருடற் குருதியிற்
கடல்பரந் தோடுமா காண்மினோ காண்மினோ. (உக)

481. புலிபுரந் தருள்செயுஞ் சயதரன் றெருமுறைப்
புணரிமே லணைபடப் [1]பொருவில்விற் குனிதலிற்
கவிகுலங் கடலிடைச் சொரிபெருங் கிரியெனக்
கரிகளின் பிணமிதிற் காண்மினோ காண்மினோ. (உஉ)

482. உற்றவா யம்புதம் பரிசையுங் கருவியும்
முருவிமார் பகலமும் முருவிவீழ் செருநர்விற்
கற்றவா வொருவன்விற் கற்றவா வென்றுதங்
கைம்மறித் தவரையுங் காண்மினோ காண்மினோ. (உ௩)

483. விண்ணின்மொய்த் தெழுவிமா னங்களிற் சுரர்களாய்
மீதுபோ முயிர்களே யன்றியே யின்றுதங்
கண்ணிமைப் பொழியவே முகமலர்ந் துடல்களுங்
கடவுளோர் போலுமா காண்மினோ காண்மினோ. (உச)

வேறு.

484. பிறைப்பெ ரும்பணை வேழ முன்றொடு
பின்று ணிந்து தரைப்படுங்
குறைத்த லைத்துணி கொல்ல னெஃகெறி
கூட மொத்தமை காண்மினோ. (உ௫)

485. வாயி னிற்புகு வேல்கள் பற்று
வலக்கை யோடு நிலத்திடைச்
சாயு மற்றவர் காள மூதிக
டம்மை யொத்தமை காண்மினோ. (உ௬)

(பி - ம்.)—1 'புருவவிற்'

வேறு.

486. படவூன்று நெடுங்குந்த மார்பி னின்றும்
 பறித்ததனை நிலத்தூன்றித் தேர்மே னிற்பார்
படவூன்றி விடுந்தொழிலோ ரென்ன முன்னம்
 பசுங்குருதி நீர்த்தோன்றும் பரிசு காண்மின். (உஎ)

487. வாயகலம் பரத்தமொடு நிணங்கொண் டோட
 மற்றதனை வள்ளுகிர்வான் பருந்து கொண்டல்
வாயகலம் பரத்தினிடைக் கௌவி [1]வல்வாய்
 வகிர்பட்டு நிலம்பட்ட வண்ணங் காண்மின். (உஅ)

488. சாதுரங்கத் தலைவனைப்போர்க் களத்தில் வந்த
 தழைவயிற்றுப் பூதந்தா னருந்தி மிக்க
சாதுரங்கந் தலைசுமந்து கமஞ்சூற் [2]கொண்டு
 தனிப்படுங்கா ரெனவருமத் தன்மை காண்மின். (உகூ)

489. முதுகுவடுப் படியிருக்கு மென்ன நிற்கு
 முனைக்களிற்றோர் செருக்களத்து [3]முந்து தங்கண்
முதுகுவடுப் படுமென்ற வடுவை யஞ்சி
 முன்னம்வடுப் பட்டவரை யின்னங் காண்மின். (௩0)

கஉ.—களங்காட்டியது முற்றிற்று.

---

பதின்மூன்றாவது

## கூழடுதல்.



490. களமடையக் காட்டுதற்கு முடிவ தன்று
 கவிழுமதக் கரிசொரியக் குமிழி விட்டுக்
குளமடைவிட் டதுபோலுங் குருதி யாடிக்
 கூழடுமென் றணங்கருளக் கும்பிட் டாங்கே. (க)

வேறு.

491. குறுமோ டீநெடு நிணமா லாய்குடை கலதீ கூரெயி றீநீலி
 மறிமா டீகுதிர் வயிறீ கூழட வாரீர் கூழட வாரீரே. (உ)

---

(பி - ம்.)—1 'அவ்வாய் வகிர்ப்பட்டு' 2 'கொண்ட தனிமகரமெனவரு'
3 'வந்தாளுங்கண், முதுகுவடுப்பட்டறியோ மென்னத்தங்கண் முன்னம்'

வேறு.

492. முறிந்த மருப்பின் வெண்கோலாற் பல்லை விராக்கிக் கொள்வீரே
மறிந்தகளிற்றின்பழுவெலும்பை வாங்கிநாக்கை கழியீரே. ()

493. வாயம் புகளா முகிர்கொள்ளி வாங்கி யுகிரை வாங்கீரே
பாயுங் களிற்றின் மதகயிலம் பாயப் பாய வாரீரே. (ச)

494. எண்ணெய் போக வெண்மூளை யென்று களியான் மயிர்குழப்பிய
பண்ணை யாகக் குருதிமடுப் பாய்ந்து நீந்தி யாடீரே. (ரு)

495. குருதிக் குட்ட மத்தனையுங் கோலும் [1]வேலுங் குந்தமுமே
[2] கருதிக் கட்டு மாட்டாதீர் கரைக்கே யிருந்து குளியீரே.()

496. ஆழ்ந்த குருதி மடுநீந்தி [3]யங்கே திளையா திங்கேறி
வீழ்ந்த கலிங்கர் நிணக்கலிங்கம் விரித்து விரித்துப் புனைவீரே.()

497. மதங்கொள்கரியின்[4]கோளகையை மணிச்சூடகமாகச்செறிமீரே
புதங்கொள் புரவிப் படிதரளப் பொற்பா டகமாப் புனையீரே.

498. ஈண்டு செருவிற் பொருவீர ரெறியும் பாரா வளையெடுத்து
வேண்டு மளவும் வாய்நெகிழ்த்து விடுகம் பிகளாக் கொள்ளீரே.

499. பணைத்த பனைவெங் கரிக்கரத்தாற் பரிய கருநாண் கட்டீரே
யிணைத்த முரசம் [5]வாட்காம்பிட் டிரட்டை வாளி யேற்றீரே.

500. பட்ட புரவிக் கவிகுரத்தாற் பாகு வலயஞ் சாத்தீரே
யிட்ட புரிசங் கெடுத்துக்கோத் தேகா வலியுஞ் சாத்தீரே.()

501. பொருசின வீரர் கண்மணியும் புனை[6]போதகமத் தகமுத்தும்
வரிசை யறிந்து மயிர்க் கோத்து வன்ன சரங்க ளணியீரே.

502. கொள்ளு மெனைப்பல கோலமென்மேற்
கொண்டிட வேளையு மீதூர
வுள்ளும் வெதும்பும் புறம்பேணு
துண்பத னுக்கொருப் படுவீரே. (கஙு)

வேறு.

503. மாகாய மதமலையின் பிணமலைமேல்
வன்கழுகின் சிறகாற் செய்த
வாகாய மேற்கட்டி யதனி [7]கீழே
யடுக்களைகொண் டடுமி னம்மா. (கச)

---

(பி - ம்.)—1 'வாளுங்' 2 'கருவிக்கட்டு', 'கருதிக்கட்ட' 3 'அணங்கே யினையாதிளைப்பாற்றி' 4 'கிம்புரியை' 5 'வாள்செலவிட்' 6'போதகக்கோட் டின முத்தும்' 7 'கீழி னிழற்கொண் டிங்கடுமின்'

504. பொழிமதத்தா னில [1]மெழுகிப் பொடிந்துதிர்ந்த
பொடித்தூளப் பிண்டி தீட்டி
யழிமதத்த மத்தகங்க ளடுப்பாகக்
கடுப்பாக்கொண் டடுமி னம்மா. (கரு)

வே று.

505. கொற்றவாள் வீர ரோச்சக் குடரொடு தலையுங் காலு
மற்றுவீ ழானைப் பானை யடுப்பினி லேற்று மம்மா. (கசா)

வே று.

506. வெண்டயிருஞ் செந்தயிரும் விராய்க்கிடந்த
கிழான்போல வீரர் மூளைத்
[2] தண்டயிரி னுடனீரற் புளிதமுமாத்
தாழிதொறுந் தம்மி னம்மா. (கஎ)

வே று.

507. கொலையினிற் படுகரிக் குழிசியுட் கூழினுக்
குலையெனக் குதிரையின் னுதிரமே சொரிமினோ. (கஅ)

508. துள்ளிவெங் களனில்வீழ் துரகவெண் பல்லெனு
முள்ளியுங் கிள்ளியிட் டுகிரினுப் பிடுமினோ. (ககூ)

509. தனிவிசும் படையினும் படைஞர்கண் டவிர்கிலா
முனிவெனுங் கனலைநீர் மூளைவைத் திடுமினோ. (உ0)

510. குந்தமும் பகழியுங் கோல்களும் வேலுமா
மிந்தனம் பலவெடுத் திடைமடுத் தெரிமினோ. (உக)

வே று.

511. கல்லைக் கறித்துப் பன்முறிந்து
கவிழ்ந்து விழுந்த கலிங்கர்தம்
பல்லைத் தகர்த்துப் [3]பழவரிசி
யாகப் பண்ணிக் கொள்ளீரே. (உஉ)

512. சுவைக்கு முடிவில் கூழினுக்குச்
சொரியு மரிசி [4]வரியறவே
யவைக்கு முரல்க ளெனக்குரல்க
ளவிந்த முரசங் கொள்ளீரே. (உங)

(ரீ - ம்.)—1 'மெழுகிச் சிந்தியுக்க பொடிமுத்தாற்கோலமிட்டே' 2'தண்டயிரு மிடைவித்த புளிதமுமாத்', 'தண்டயிரினுடனீரற் புளிபிசைந்து' 3 'பருவரிசி' 4 'வரியெயிறு'

513. இந்த வுரற்க ணிவ்வரிசி
யெல்லாம் பெய்து கொல்யானைத்
தந்த வுலக்கை [1]தனையோச்சிச்
சலுக்கு மொலுக்கெனக் குத்தீரே. (உச)

[வள்ளைப் பாட்டு.]

வே று.

514. மணந்தரு தார்ச்சய துங்கனெங்கோன்
வாள்வலி யானம் மெலிவகலப்
பிணந்தரு நாச்சியைப் பாடீரே
பெருந்திரு வாட்டியைப் பாடீரே. (உரு)

515. கவன நெடும்பரி வீரதரன் காவிரி நாடுடை யானிருதோ
ளவனி சுமந்தமை பாடீரே யரவு தவிர்ந்தமை பாடீரே. ()

516. மன்னர் புரந்தரன் வாளபயன் வாரண மிங்கு [2]மதம்படவே
தென்ன ருடைந்தமை பாடீரே சேர ரிரிந்தமை பாடீரே. ()

517. வணங்கிய [3]சேரர் மணிமுடியும் வழுதியர் தங்க டிருமுடியும்
பிணங்கிய சேவடி பாடீரே பெருமான் றிருவடி பாடீரே. ()

518. ஒளிறு நெடும்படை வாளபயற் குத்தர பூமிய ரிட்டதிறைக்
களிறு [4]வரும்படி பாடீரே கடன்மத நாறுவ பாடீரே. (உகூ)

519. பௌவ மடங்க [5]வளைந்தகுடைப்
பண்டித சோழன் [6]மலர்க்கழலிற்
றெவ்வ ரடைந்தமை பாடீரே
சிலைவலி வாள்வலி பாடீரே. (௩0)

520. எற்றைப் பகலினும் வெள்ளணிகா
ணிருநிலப் பாவை தனைநிழற்றுங்
கொற்றக் குடையினைப் பாடீரே
[7] கோக்குலோத் துங்கனைப் பாடீரே. (௩க)

521. வண்டை வளம்பதி பாடீரே
மல்லையுங் கச்சியும் பாடீரே
பண்டை மயிலையும் பாடீரே
பல்லவர் தோன்றலைப் பாடீரே. (௩உ)

---

(பி - ம்.)—1 'எடுத்தோச்சி' 2 'மதம்பொழியத்' 3 'சேரன்மணிமுடியும் வழுதி மகுடமும் வண்டினமும்' 4 'வருங்கடல்' 5 'அடைந்தபுகழ்' 6 'மதன் கழலிற்' 7 'குலோத்துங்கச்சோழனைப்'

522. காட்டிய வேழ வணிவாரிக்
    கலிங்கப் பரணிநங் காவலனைச்
சூட்டிய தோன்றலைப் பாடீரே
    தொண்டையர் வேந்தனைப் பாடீரே. (கக)

வேறு.

523. இடைபார்த்துத் திறைகாட்டி யிறைவிதிருப் புருவத்தின்
கடைபார்த்துத் தலைவணங்குங் கதிர்முடிநூ றாயிரமே. ()

524. முடிசூடு முடியொன்றே முகலபய னெங்கோமா
னடிசூடு முடியெண்ணி லாயிரநூ றாயிரமே. (கரு)

525. முடியினால் வழிபட்டு மொழிந்ததிறை யிடாவேந்த
ரடியினான் மிதிபட்ட வருவரைநூ றாயிரமே (கசா)

526. தார்வேய்ந்த புயத்தபயன் றன்னமைச்சர் கடைத்தலைபிற
பார்வேந்தர் படுகின்ற பரிபவநூ றாயிரமே. (கள)

527. தாங்காரப் புயத்தபயன் றன்னளியாற் புயல்வளர்க்கு மோ
மோங்கார மந்திரமு முலப்பிலநூ றாயிரமே. (கஅ)

528. போர்தாங்குங் களிற்றபயன் புயமிரண்டும் பார்தாங்கப்
பார்தாங்கும் பரந்தவிர்ந்த பணிப்பணங்க ளாயிரமே. (கசூ)

529. நாற்கடலைக் கவித்தகுடை நர[1]துங்க னமுதமெழப்
பாற்கடலைக் கடைந்தருளும் பணைநெடுந்தோ ளாயிரமே. ()

530. தாளிரண்டா னிலவேந்தர் தலை[2]தாங்குஞ் சயதுங்கன்
றோளிரண்டால் வாணனைமுன் றுணித்தனதோளாயிரமே.()

531. சூழிமுகக் களிற்றபயன் றாதுநடந் தருளியநா
ளாழிமுதற் படையெடுத்த வணிநெடுந்தோ ளாயிரமே. ()

[இவ்வளவும் வள்ளைப் பாட்டு.]

532. பல்லரிசி யானவெலாம் பழவரிசி யானவினிச்
சல்லவட்ட மெனுஞ்சுளகாற் றவிடுவிடப் புடையீரே.(சக)

533. [3] பாணிகளா னிலந்திருத்திப் படைக்கலிங்க ரணிபகழித்
தூணிகளே நாழிகளாத் தூணிமா வளவீரே. (சச)

534. விரற்புட்டி லிவைசிறிய [4]விற்கூடை பெரியனகொண்
டிரற்பட்ட வரிசிமுகந் தலைதோறுஞ் சொரியீரே. (சரு)

---

(பி - ம்.)—1 'துங்கன்றனிதமெழப்' 2 'தாக்குஞ்' 3 'பாணியினா னிலந் தீற்றிப்' 4 'விரற்கூடை', 'விலாக்கூடை'

535. களப்பரணிக் கூழ்பொங்கி வழியாமற் கைதுடுப்பா
வளப்பரிய குளப்புக்கா லகப்பைகளாக் கொள்ளீரே. (சரு)

ே வ று.

536. வைப்புக் காணு நமக்கின்று
[1] வாரீர் கூழை யெல்லீரு
[2] முப்புக் காண வொருதுள்ளி
யுள்ளங் கையிற் கொள்ளீரே. (சஎ)

537. அழலங் கையிற் கொள்ளாமே
யடுப்பை யவித்துக் கைத்துடுப்பாற்
சுழலச் சுழலப் புடையெங்குந்
துழாவித் துழாவிக் கொள்ளீரே. (சஅ)

538. பற்றிப் பாரீ ரிக்கூழின்
பதமுஞ் சுவையும் பண்டுண்ட
மற்றைக் கூழின் மிகநன்று
வாரீ ரிழிச்ச வாரீரே. (சகூ)

539. எடுத்துக் கையிற் கவிழாமே
யிவுளித் துணியிட் டிருமருங்கு
மடுத்துப் பிடித்து மெத்தெனவே
யடுப்பி னின்று மிழிச்சீரே. (ருo)

540. ஒருவாய் கொண்டே [3]யிதுதொலைய
வுண்ண வொண்ணா தென்றென்றே
வெருவா நின்றீ ராயிரம்வாய்
வேண்டு மோவிக் கூழுணவே. (ருக)

541. வெந்த விரும்பிற் புகுபுனல்போல்
வெந்தீப் பசியால் [4]வெந்தெரியு
மிந்த விடம்பை நாத்தோய்க்கி
[5] னெல்லாக் கூழுஞ் சுவறாதோ. (ருஉ)

542. பண்டு மிகுமோர் பரணிக்கூழ்
[6] பார கத்தி லறியேமோ
உண்டு மிகுமோ நீர்சொன்ன
வுபாய [7]மெதுவுஞ் செயனன்றே. (ருங)

---

(பி - ம்.)—1 'வாருங்' 2 'உப்புப்பார்க்க வொருதுளியை' 3 'இதுதேய' 4 'வெந்துலரும்' 5 'இக்கூழெல்லாஞ்' 6 பாரதத்தில்' 7 'இதுவுஞ் செய்குநமே'

543. வெம்புங் குருதிப் பேராற்றில்
　　வேண்டுந் தண்ணீர் வேழத்தின்
　கும்பங் களிலே [1]முகந்தெடுத்துக்
　　குளிர வைத்துக் கொள்ளீரே.　　(ருச)

544. சோருங் களிற்றின் வாலதியாற்
　　சூழ வலகிட் டலைகுருதி
　நீருந் தெளித்துக் கலம்வைக்க
　　நிலமுஞ் சமைத்துக் கொள்ளீரே.　　(ருரு)

545. போர்மண் டலிகர் கேடகத்தின்
　　புளகச் சின்னம் பரப்பீரே
　பார்மண் டலிகர் தலைமண்டை
　　பலமண் டைகளாக் கொள்ளீரே.　　(ருசு)

546. அழிந்த கலிங்கர் பொற்பரிசை
　　யவைபொற் கலமாக் கொள்ளீரே
　விழுந்த தவளக் [2]குடைமின்னும்
　　வெள்ளிக் கலமாக் கொள்ளீரே.　　(ருஎ)

547. நிலத்தைச் சமைத்துக் கொண்டீரே
　　னெடுங்கைக் களிற்றின் பணைக்காலாங்
　கலத்திற் குறையக் கொள்ளாத
　　கலங்கள் [3]பெருக்கிக் கொள்ளீரே.　　(ருஅ)

548. கதம்பெற் றூர்க்குஞ் செருநர்விழிக்
　　கனலு நிணமு மணங்கின்பாற்
　பதம்பெற் றூர்க்குப் பகல்விளக்கும்
　　பாவா டையுமாக் கொள்ளீரே.　　(ருகூ)

549. பரிசு படவே கலம்பரப்பிப்
　　பந்தி பந்தி படவுங்கள்
　வரிசை யுடனே யிருந்துண்ண
　　வாரீர் கூழை வாரீரே.　　(சூ0)

550. கங்கா புரியின் மதிற்புறத்துக்
　　கருதார் சிரம்போய் மாய்போரி
　லிங்கே தலையின் வேல்பாய்ந்த
　　விளைவழு ழைகளாக் கொள்ளீரே.　　(சூக)

---

(பி - ம்.)—1 'முகந்தருகே', 'முகந்திங்கே' 2 'குடையென்னும் வெள்ளிக்கலமுங்' 3 'பெருங்கைக்'

551. கிடைத்த பொழுது மணலூரிற்
கீழ்நா ளட்ட பரணிக்கூழ்
படைத்துப் பயின்ற மடைப்பேய்கள்
பந்தி தோறும் [1]வாரீரே. (சுஉ)

552. அவதி யில்லாச் சுவைக்கூழ்கண்
[2] டங்காந் தங்காந் தடிக்கடியும்
பவதி பிட்சாந் தேகியெனும்
பனவப் பேய்க்கு வாரீரே. (சுங)

553. உயிரைக் கொல்லாச் சமண்பேய்க
ளொருபோ தண்ணு மவையுண்ண
மயிரைப் பார்த்து நிணத்துகிலால்
வடித்துப் போத வாரீரே. (சுச)

554. முழுத்[3]தோள் போர்க்கும் புத்தப்பேய்
முளைக் கூழை நாக்குழறக்
கழுத்தே கிட்ட மணந்திரியாக்
கஞ்சி யாக வாரீரே. (சுரு)

555. கொய்த விறைச்சி யுறுப்பனைத்துங்
கொள்ளுங் கூழை வெள்ளாட்டின்
பைத விறைச்சி தின்றுலர்ந்த
பாரப் பேய்க்கு வாரீரே. (சுசு)

556. ஊணு தரிக்குங் கள்ளப்பே
யொளித்துக் கொண்ட கலந்தடவிக்
காணு தரற்றுங் குருட்டுப்பேய்
கைக்கே கூழை வாரீரே. (சுஎ)

557. பையாப் போடு பசிகாட்டிப்
பதலை நிறைந்த கூழ்காட்டிக்
கையாற் பேசு மூமைப்பேய்
கலத்தை நிறைக்க வாரீரே. (சுஅ)

558. அடைத்த செவிக டிறந்தனவா
லடியேற் கென்று [4]கடைவாயைத்
துடைத்து நக்கிச் [5]சுழல்கின்ற
சூற்பேய்க் கின்னஞ் சொரியீரே. (சுகூ)

---

(பி - ம்.)—1 'நில்லீரே' 2 'அட்சாந்தங்கொண்டடிக்' 3 'தோல்போர்க்கும்புத்தர்கு முன்னைக்கூழை நாடறமாக்...மனம்பிரியாக் கஞ்சியாகக்கவிழீரே' 4 'கைவாயில்' 5 'சுவைகாணுரு'

559. பொல்லா வோட்டைக் கலத்துக்கூழ்
புறத்தே யொழுக மறித்துப்பார்த்
தெல்லாங் கவிழ்த்துத் திகைத்திருக்கு
மிழுதைப் பேய்க்கு வாரீரே. (எ0)

560. துதிக்கைத் துணியைப் பல்லின்மேற்
செவ்வே நிறுத்தித் துதிக்கையி
னுதிக்கே கூழை வாரென்னு
நோக்கப் பேய்க்கு வாரீரே. (எக)

561. தடியான் மடுத்துக் கூழெல்லாந்
தானே பருகித் தன்கணவன்
குடியா னென்னக் குலுங்கடிக்குங்
[1] கூத்திப் பேய்க்கு வாரீரே. (எஉ)

562. வருகூழ்ப் பரணிக் களங்கண்டு
வந்த பேயை முன்னூட்டி
யொருகூழ்ப் பரணி நாமிருக்கு
மூர்க்கட் பேய்க்கு வாரீரே. (எங)

563. இரவு கனவு கண்டபேய்க்
கிற்றைக் கன்றி நாளைக்கும்
புரவி யுரித்தோற் பட்டைக்கே
பொதிகூழ் பொதிந்து வையீரே. (எச)

564. இணக்க மில்லா நமையெல்லா
மெண்ணிக் கண்டே மென்றுரைக்குங்
கணக்கப் பேய்க்கு மகங்களிக்கக்
கையா லெடுத்து வாரீரே. (எரு)

வேறு.

565. *மென்குடர் [2]வெள்ளை குதட்டீரே
மெல்விர லிஞ்சி யதுக்கீரே
முன்கை யெலும்பினை மெல்லீரே
மூளையை வாரி விழுங்கீரே. (எசு)

566. *அள்ளி யருகிருந் துண்ணீரே
யரிந்திடு தாமரை மொட்டென்னு
முள்ளி கறித்துக்கொண் டுண்ணீரே
யூதி வரன்றிக்கொண் டுண்ணீரே. (எஎ)

---

(பி - ம்.)—[1] 'குகுதப்பேய்', 'குநதடபேய்' [2] 'வள்ளை'

* இவ்விரண்டு தாழிசைகளும் சிலபிரதிகளிற் காணப்படவில்லை. ஒருபிரதியில், எசு-ஆவதின் முதலடி 'மென்குரல் வள்ளையைச் சூட்டீரே மெல் விரல்வீசை யொதுக்கீரே' எனக் காணப்படுகிறது.

567. ஓடி யுடல்வியர்த் துண்ணீரே
யுந்தி பறந்திளைத் துண்ணீரே
யாடி யசைந்தசைந் துண்ணீரே
[1] யற்ற மறிந்திருந் துண்ணீரே. (எஅ)

568. தமக்கொரு வாயொடு வாய்மூன்றுந்
தாமினி தாட்படைத் துக்கொண்டு
நமக்கொரு வாய்தந்த நான்முகனார்
நாணும் படிகளித் துண்ணீரே. (எகூ)

வே று.

569. கொதித்த கரியின் கும்பத்துக்
குளிர்ந்த தண்ணீர் தனைமொண்டு
பொதுத்த தொளையாற் புகமடுத்துப்
புசித்த வாயைப் பூசீரே. (அ0)

570. பண்ணு மிவுளிச் செவிச்சுருளும்
பரட்டின் பிளவும் படுகலிங்கர்
கண்ணின் மணியிற் சுண்ணும்புங்
கலந்து மடித்துத் தின்னீரே. (அக)

571. பெருக்கத் தின்றீர் தாம்பூலம்
பிழைக்கச் செய்தீர் பிழைப்பீரே
செருக்கப் பேய்காள் பூதத்தின்
[2] சிரத்தின் மயிரை மோவீரே. (அஉ)

வே று.

572. என்று களித்துக் கூமண்டையிட்டே
யேப்ப மிட்டுப் பருத்துநின்ற
குன்று குனிப்பன போற்களத்துக்
கும்பிட் டோட மிட்டனவே. (அங)

573. வாசி கிடக்கக் கலிங்கரோட
மானத னேவிய சேனைவீரர்
தூசி யெடுத்தமை பாடிநின்று
தூசியு மிட்டுநின் றாடினவே. (அச)

---

(பி - ம்.)—1 'அற்றதறவறிந்' 2 'சிரத்தைமோந்துகொள்ளீரே'

574. பொருகை தவிர்ந்து கலிங்கரோடப்
போக புரந்தரன் விட்டதண்டி
னிருகையும் வென்றதொர் வென்றிபாடி
யிருகையும் வீசிநின் றாடினவே. (அரு)

வேறு.

575. வழுதியர் வரைமுழை நுழைவடி விதுவென
மதகரி வயிறுகள் புகநுழை வனசில
வெழுதிய சிலையவ ரெறிகடல் விழுமவை
யிவையென வழிகுரு தியின்விழு வனசில. (அசு)

576. உருவிய சுரிகையொ டுயர்கணை விடுபடை
யுருள்வடி விதுவென வுருள்வன சிலசில
வெருவிய வடுநர்த முடைவடி விதுவென
விரிதலை யதனொடு [1]மறிவன சிலசில. (அஎ)

வேறு.

577. முரசு குடைகவரி தொங்கனெ டுங்கொடி
முரலும் வரிவளைசு மந்துநி ரந்தர
மரச ரிடுதிறைசு மந்தப யன்கழ
லடைய வடிகளருள் கென்பன வுஞ்சில. (அஅ)

578. இனைய வினையநட கங்கண்மு டிந்தபி
னிரவி திருமரபின் வந்தபு ரந்தர
னனைய வபயனக ளங்கன ரிந்தம
னளவில் புகழ்புகழ்து மென்றுதொ டங்கியே. (அகூ)

வேறு.

579. உபய மெனும்பிறப் பாளருள்ளிட்
டுரைத்த வுயிர்க ளத்தனையு
மபய மெனப்புகுந் தஞ்சலென்ற
வபயன் றாளிணை வாழ்த்தினவே. (கூ0)

580. திசையிற் பலநர பாலர்முன்னே
[2] தெழித்துரப் புஞ்சிசு பாலன்வைத
[3] வசையைப் பொறுத்தானை வாழ்த்தினவே
மனுகுல தீபனை வாழ்த்தினவே. (கூக)

(பி - ம்.)— 1 'வருவன' 2 'தெரிந்துரைக்குஞ்' 3 'வசையில் வயப்புகழ்'

581. பொன்னித் துறைவனை வாழ்த்தினவே
பொருநைக் [1]கரையனை வாழ்த்தினவே
கன்னிக் கொழுநனை வாழ்த்தினவே
கங்கை மணாளனை வாழ்த்தினவே. (கூஉ)

582. ஆழிக ளேழுமொ ராழியின்கீ
ழடிப்பட வந்த வகலிடத்தை
யூழிதொ றாழியுங் [2]காத்தளிக்கு
முலகுய்ய வந்தானை வாழ்த்தினவே. (கூக)

583. பூப்பது மத்தன் படைத்தமைத்த
புவியை யிரண்டா வதும்படைத்துக்
காப்பது மெங்கட னென்றுகாத்த
[3] கரிகால் வளவனை வாழ்த்தினவே. (கூச)

கா.—கூழடுதல் முற்றிற்று.

---

[வாழ்த்து.]

584. யாவ ருங்களி [4]சிறக்க வேதரும
மெங்கு மென்றுமுள தாகவே
தேவ ரின்னரு டழைக்க வேமுனிவர்
செய்த வப்பயன் விளைக்கவே. (க)

585. வேத நன்னெறி பரக்க வேயபயன்
வென்ற வெங்கலி கரக்கவே
போத ரும்புகழ் பரக்க வேபுவி
நிலைக்க வேபுயல் சுரக்கவே. (உ)

கலிங்கத்துப்பரணி முற்றிற்று.



---

(பி - ம்.)—1 'கணவனை' 2 'காக்கவல்ல' 3 'கரிகாலச்சோழனை' 4 'சிறக்க மெய்த்தரும மென்று மெங்குமுள தாகவே, தேவருங்களி சிறக்கவேயுயிர்கள்'

## கலிங்கத்துப்பரணி

# அரும்பொருள் விளக்கம்.



கலிங்கத்துப்பரணி யென்பதற்கு, கலிங்கதேசத்து நிகழ்ந்த போரினைச் சிறப்பித்துப்பாடிய பரணியென்னும் தேவபாணி என்பது பொருள். * பரணி யாவது, காளிக்குப் பரணிநட்சத்திரத்திற் கூழுந் துணங்கையுங் கொடுத்து வழி படுமுகத்தானே, அதனுட் பாட்டுடைத்தலைவனைப்பெய்து சிறப்பித்துக் கொச்சக வொருபோகாற் பாடப்படுவது. இதனுள், படையெழுச்சி, போர் முதலிய புறத் திணைபலவும் விரவிவரினும், அவையாவும் பேய்கள் கூழ்சமைத்துத் துணங்கை யிட்டுவழிபடுதலின்கண்ணே, தலைவன்சிறப்பைக் காளி கூளிக்கும், கூளி காளிக் கும் எடுத்துச்சொல்லுமுறையில் வைத்துப் பாடப்படுதலின் இதுவும் தேவ பாணியெனப் பெயர்பெறும். இவற்றின்விவரமெல்லாம் "தாவின்றுகித் தாழிசை பெற்றும்" (தொல்காப்பியம், செய்யுளியல் : கசசு.) என்னுஞ் சூத்திரத் தாலும் அதன் உரைகளாலும் அறியலாகும்.

இக்கலிங்கத்துப்பரணி கடவுள்வாழ்த்துமுதலிய பதின்மூன்று பிரிவுகளை யுடையது. அவற்றுள்,—

## க.—கடவுள்வாழ்த்து.

அஃதாவது, கவி, எடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி யினிதுமுடிதற் பொருட்டுக் கடவுளை வாழ்த்துதல்.

1. புயல்வண்ணன் - திருமால். புனல்வார்க்க - தாரைவார்க்க. பூமிசை யோன் - பிரமன். தொழில்காட்ட - சடங்கு செய்விக்க. புவனவாழ்க்கைச் செயல்வண்ணம் நிலைநிறுத்த - பூமியில் இல்லறம்நடத்தும் முறைமையை (நடத்திக்காட்டி) நிலைபெறச்செய்தற்பொருட்டு. மலைமகள் - உமாதேவியார்.

2. அரு மறையின் நெறி காட்ட -வேதமார்க்கம் இத்தகையதென்று உல கத்தார்க்குத் தெரிவித்தற்பொருட்டு. அண்டம்காக்கும் உரிமையினில் - உலகங்

* "ஆனையாயிரமமரிடைவென்றமாவனவுக்குவகுப்பதுபரணி." "கடவுள் வாழ்த்துக் கடைதிறப்புரைத்தல்,கடும்பாலைகூறல் கொடுங்காளி கோட்டங், கடி கணமுரைத்தல் காளிக்கிதிசொலல், அடுபேய்க் கவள்சொல லதனூற்றலைவன், வண்புகழுரைத்த லெண்புறத்திணையுற, வீட்டலடுகளம் வேட்டலிவைமே, லளவடி முதலா வடியிரண்டாக, உளமகிழ்பரணி யுரைக்கப்படுமே." என்பர் இலக் கணவிளக்கநூலார்.

களையெல்லாம் காக்கும்உரிமை தனக்கு(விசயதரனுக்கு) உண்டாதலால்; இவன் திருமாலினதமிசமாதலின் (தாழிசை. 219) இங்ஙனங்கூறினர். உபயகுலஉத் தமன் - தாயின்குலம் தந்தையின்குலம் ஆகிய இரண்டினுக்கும் உரியவனுகியமே லோன் = * விசயதரன்; 'உபயகுலமும் விடாவொழுங்குடை யொருவன்' (தா. 440) என்பர்பின்னும். அபயன் - சோழன். உபயகுலோத்தமனாகிய அபயன்.

1 - 2. அபயன்வாழ்கவென்று, மலைமகளைப்புணர்ந்தவனைச் சிந்தைசெய் வாம் எனமுடிக்க.

மேலும் இவ்வாறே, இக்கடவுள்வாழ்த்து முற்றும் இவ்விரண்டுதாழிசை களைச் சேர்த்து முடித்துக்கொள்க.

3. பிறவாது பிறத்தல் - அவதரித்தல். உலகு ஒடுக்கும் திருவயிற்றது ஒரு குழவி - கண்ணன்.

4. அபயன் கவிகை, மாலுதரம்போல் பொதிந்து வாழ்க எனக்கூட்டுக.

5. பொருள் நான்கு - அறம்,பொருள், இன்பம், வீடு என்பன. உபநிட தம் - வேதத்தினுட்பொருள்; ஈண்டு ஆகுபெயராய் வேதத்தையுணர்த்திற்று.

6. குலம் நான்கு - நால்வகை வருணம்.

7. பேராழி - கடல். ஓராழி - ஒற்றைச்சக்கரத்தேர்: ஆகுபெயர். பிறங்க வும் இருள் நீங்கவும் ஆழியை நடத்தும் சுடர் என்க.

8. பனியாழி - கடல். கலியிருள் - சீர்கேடாகிய இருட்டு ; தா. 245 - 9 பார்க்க. தனியாழி - ஒப்பற்ற ஆஞ்ஞாசக்கரம்.

9. காரணகாரியங்களின்கட்டு அறுப்போர் - யோகியர். ஆரணம் ஆம்நால் கூடம் - நான்கு வேதங்களாகியகூடம். ஐங்கரம்:கைகநான்கு, துதிக்கைஒன்று. களிறு - விநாயகர். கூடத்து அணைந்து தறியிற் கட்டுண்டு நிற்குங் களிறுஎன்க. அன்புசெய்தல் - தியானித்தல்.

10. அருட்கவிகை - அருளாகியகவிகை. கலிப்பகைஞன்: தா. 8 பார்க்க.

11. நிறம் - மார்பு. படைத்துடையான் - பெற்றிருப்பவன்; படைத்த உடையான் எனினும் ஆம் ; ஈண்டு, உடையான் - தலைவன்.

13. சென்னி - சோழன் = விசயதரன். சென்னிநாவகத்துள் இருப்பாள் நாமாதை என இயைக்க. இருப்பவளாகிய நாமாது என்க.

14. எண் மடங்கு புகழ் - நினைத்து அளவிடற்கரிய புகழ். தன் - அவ னுடைய. மகிழ்ந்த - மகிழ்தற்குக்காரணமான. மண்மடந்தை சாத்தி மகிழ்ந்த பிரான் என்க.

---

* சிலாசாசனங்களிற் பெரும்பாலும் இவன் 'இராசேந்திரசோழன்' எனப்படுவான். இராசேந்திரன் என்பது இவனது பிள்ளைத்திருநாமம் போ லும்; (தா. 224.) அபயன் என்றும் இவனுக்கொரு பெயருண்டு. (தா. 194, 199.)இவனது தாயின்குலம், சோழகுலம் ; தந்தையின்குலம், சாளுக்கிய குலம்; இதனைச்சந்திரகுலம் என்பர். (தா. 225.) தந்தையின்பெயர் சாளுக்கிய ராசராசன். இவ்விசயதரன், தன்தந்தையின் நாடாகிய வேங்கியை ஆண்ட துடன் (சளுக்கியவிக்கிரமாதித்தன்சரித்திரம், பக்கம் 27 - 28 பார்க்க) சோழ ராசேந்திரனாகிய கங்கைகொண்ட சோழனுக்குத் தௌகித்திர பாத்தியத்தால் (தா. 221, 223.) சோழநாட்டையும் நெடுங்காலம் ஆண்டான்.

15. தெய்வ முதல் நாயகன் - தெய்வங்களுக்கு ஆதிநாயகனுகிய சிவ பிரான். கன்னி - என்றும் கன்னித்தன்மையுடையவள் = துர்க்கை.

16. ஏற - ஏறும்படி. அணிய - அணிதலால். நல்கும் - கிருபைசெய் யும். பூழியர்பிரான் - விசயதரன். செழியன்வரையேறக் கார்முகம் வளைத்து, உதியர்கோமகன் அணிய, நல்கும் பிரான் என்க. முடிக்கட்பொறுத்தமலர் பாதமலர் மீதணிதலாவது, வணங்குதல்.

17. கொடியேழுடைக் கொடிகளாவார், முறையே சாமுண்டி, பிராமி, வாராகி, கௌமாரி, மாகேசுவரி, வைணவி, இந்திராணி என்பார். துணைப் பதம் - நினைப்பார்க்குத் துணையாகவுள்ள பதம்.

18. கேழல் முதலியன அக்காலத்திருந்த பல அரசர்க்குரிய கொடிகள் ; தா. 88, 280 பார்க்க.

இவ்வளவுங் கடவுள்வாழ்த்து. பின்னுள்ள இரண்டு தாழிசையும் 'அறு வகை வாழ்த்து' எனப்படும் : அஃதாவது முனிவரையும், பசுவையும், பார்ப் பாரையும், அரசரையும், மழையையும், நாட்டையும் வாழ்த்துதல். இவற்றுட் சில குறைந்துவரினும் அப்பெயர் பெறும். (தொல். செய். சூ - கOக பேரா சிரியருரை.) இதனை 'அறுமுறைவாழ்த்து' என்பர் நச்சினார்க்கினியர்.

20. மனு - அரசநீதி. நிதிபொழிகவிகை - நிதியைப்பொழிகின்ற கவிந்த கை ; கொடுத்தற்குக் கவிந்த கை என்றபடி.

---

## உ.—கடைதிறப்பு.

அஃதாவது விசயதரனது பட்டினத்திலுள்ளபெண்கள், போர்க்குச்சென் றிருந்த தம் கணவர் திரும்பிவரத்தாழ்த்தமையாற் கவலையுற்றும் ஊடியும் கத வைத் தாழிட்டுக்கொண்டு வீட்டினுள்ளேயிருக்க, கவி (சயங்கொண்டார்) அப் பெண்களின் இயற்கையழகு, செயற்கையழகு, மென்மைத்தன்மை, முன்னுட் களில் அவர்கள் ஊடியுங் கூடியும் அனுபவித்த இன்பம் முதலியவற்றை யெடு துக்கூறி அவர்களை அழைத்துக் கதவுதிறக்கவும் கலிங்கப்போரின் வெற்றியைக் கேட்கவும் வேண்டுதல்.

21. சூது - சூதாடுகருவி.

22. இடைபடுவதுபட அருளுதல் - அலையச்செய்தல். இடுகதவு-தாழிட்ட கதவு. உயர்கடையிடுகதவு என மாற்றுக.

24. நரதுங்கன் - மனிதரிற்சிறந்தோன்; கொடையையுடைய நரதுங்கன்.

25. ஓடாதுநின்று அருள்செய்தலால் 'விடுமின் விடுமின்' என்பது 'பிடி மின் பிடிமின்' என்றபொருள்தந்தது. முனி வெகுளி, வினைத்தொகை.

26. அடங்க - முழுவதும். வளவதுங்கன் - வளவனுகியதுங்கன். இனி வளவதுங்கன் அருள் அடங்க எனது என இயைக்க. கனவை நனவாகக்கருதி மகிழ்ந்து தடவுகின்றனர்.

27. அருளு, வினைத்தொகை; 'அருளுபொழுதிலே' (தா. 324) என்பர் பின்னும். இச்சொல் நக்கீரதேவர்பாடிய பெருந்தேவபாணியில், "சீற்றத் தைத் தீர்த்தருளு தேவாதி தேவனே" என வியங்கோளாக வந்துளது.

28. கனிபவளம் - கனிந்த பவளம்போன்ற வாய். முத்துதிருங்கயல் நீர்த்துளி சிந்துங் கண்.

29. இது - அடியிற்கைத்தலம் வைத்தல். புலவிக்குமருந்து - புலவியைத் தீர்க்கும் மருந்து.

30. முருகிற் சிவந்தகழுநீர் - தேனையுடைய செங்கழுநீர்.

31. செவ்வாய்வைத்த - சிவந்த வாயையொத்த.

33. தங்குகண் - கொழுநர்மார்பிற் போய்த் தங்கிய கண்.

34. கண் கொடுபோம்வழி-கண்ணைத்திருப்பிக் கொண்டுபோகும்வழியை.

36. இப்பாட்டு, படைக்குங் கண்ணுக்குஞ் சிலேடை : மானதன்படை, மதுரையில் பாண்டியனது கொடியாகிய கயல் தோற்றுக் கெடும்படி பொருது சென்று முடிவில் அவன் சேனை சேற்றில் விழுந்தோடும்படி தாக்கியெறிதலால் எனவும், கண், கலவிக்காலத்துத் தனது பிறழ்ச்சிக்கு அஞ்சிக் கயல்மீன் தோற் றோடும்படி அதனோடுபொருதுநீண்டு, தன்அழகியகடைப்பார்வை செவியிலுள்ள குண்டலத்தின்மீதுவிழும்படிநெருக்கி ஒளிவீசுதலால் எனவும்உரைக்க. கூடல் - மதுரை, கலவி. குழை - சேறு, குண்டலம். வஞ்சிமானதன் - வஞ்சிமாலை சூடிய விசயதரன். படையினில் - வேற்படையைப்போல.

39. போகஅமளி - போகத்திற்குரிய அமளி. ஆகஅமளி - ஆகமாகிய அமளி.

41. மீனம்புகு கொடி மீனவர் - மீனக்கொடியையுடைய பாண்டியர். விழி அம்பு உக-கண்ணீர்சிந்த. கானம்புக - காட்டிற்புகுதலால். வேழம்புகும்- அப்பாண்டியரை எதிர்த்துச்சென்ற விசயதரனது யானை திரும்பிவருகின்றது. மீனவர் கானம்புகுதலால் வேழம் புகும் ; (அதனைக்காண) மடவீர் ! கடை திறமின் எனமுடிக்க.

42. திறையாம் மலை நாடியர் - திறைப்பொருளாகிய மலையைப்பார்க்கும் பொருட்டு. துளுநாடியர், விளி ; இவர்கள் துளுநாட்டினின்றும் சோழநாட் டிற்கு வந்து குடியேறிய வீரர்களின் மனைவியர். அடுத்ததாழிசையில் கருநாடி யர் என்பதற்கும் இவ்வாறே கொள்க.

43. கருநடம் (கன்னடம்) வடுகுந்தமிழுங் கலந்து வழங்குவதொரு மொழியாதலால் இங்ஙனங் கூறினர். வடுகு - தெலுங்கு.

47. அந்திக்கமலம் - தனங்கள்.

51. கூடல்வளைத்தல் - தலைவரோடுகடைவந்து கூடுமாயின் தம்மெண்ணங் கைகூடுமென்று, குறிபார்த்தற்கு மகளிர் கண்மூடி விரலாலே நிலத்தில் வலய மாகச் செய்தல். அறுதல் - தலைவரோடு கடை வந்து கூடாமற்போதல்.

52. விடமெனல் - விடம்போன்று வருத்துதல். அமுதெனல்-அமுதம் போன்று தளிர்ப்பித்தல். படையொடுகருதுவார் - படையைப்போலெண்ணு கின்ற கணவருடைய. நடுவுபோயுருவுதல் - ஊடுருவிச்செல்லுதல். படையொடு கருதுவா ருயிரையுமுணர்வையும் விடமென அமுதென உருவும் மதர்விழி என இயைக்க. ஒருகாலத்தே வருத்துதலும் ஒருகாலத்தே தளிர்ப்பித்தலு மாகிய இரண்டு தன்மையுமுடைய விழி என்றபடி.

54. சிறுநிலா - பிறைச்சந்திரன். அதின் மிகு நிலா - அப்பிறையினின்று மிகுந்துவருகின்ற நிலவு. முறை நிரனிறை.

57. கயல் - கயல் மீன், கண்; இருகரை - ஆற்றின் இருகரை, கட்கடை: சிலேடை.

58. கூடுமிளம்பிறை - இரண்டுநுனியும் கூடும்படி வளரும்பிறை = எட்டாம்பிறைச்சந்திரன்; இங்கே நெற்றியைக்குறித்துநின்றது.

60. காஞ்சி: முன்னது ஆபரணம்; பின்னது காஞ்சீபுரம். கலிங்கம்: முன்னது ஆடை; பின்னது கலிங்கதேசம். சென்னி - விசயதரன்.

61. இலங்கையெறிந்த கருணாகரன் - ஸ்ரீராமன். கலிங்கமெறிந்த கருணாகரன் - கருணாகரத்தொண்டைமான்; தா. 314 பார்க்க.

---

## ரு.—காடுபாடியது.

அஃதாவது, கடைதிறந்த மகளிர்முன்னிலையில் கவி போரைப் பாடத்தொடங்கி, அப்போருக்குரிய தெய்வமாகிய காளியுறையும் பாலைநிலத்தைப் பாடியது.

62. நிணக்கூழ் - நிணத்தாலாகியகூழை. உளப்பு ஓர் இரண்டும் நிறைவித்தாள் - வயிற்றின் இரண்டருகும் நிறையச்செய்தவள் = காளி. விலாப்புடைக்க உண்பித்தவள் என்பது கருத்து.

63 - 5. காரை முதல் புன்கு வரை பாலைநிலத்திற்குரிய மரஞ் செடி கொடிகளின் பெயர்கள். எறிந்தபாலை - வெட்டப்பட்ட பாலைமரம். ஈகை - இண்டங்கொடி. விண்டு - மூங்கில். நிரைந்த - வரிசையாக நின்றன.

67. பருந்தின் நிழல், எழுவாய்.

68. ஆதவம் பருகும்என்று - (வெளியேயிருப்பின் நம்மை) வெய்யில் பருகிவிடுமென்றெண்ணி. நின்ற - (மரத்தடியிற்போய்) நின்ற. நின்ற நிழல், வெருவி, குடிபோன என்க. போன, முற்று.

69. அதனிடைப்புரு, அங்கெருப்பினிற் புகைதிரண்டது ஒப்புஅல்லது (வேறு) ஒப்புஉரு என்க.

70. உலர்ந்து - உலர்தலால்.

74. வனத்தின் விம்மு கடுவிசை வெம்மை என மாற்றுக. அமுதவட்டம் - சந்திரன். ஆலவட்டம் - விசிறி. அமுதவட்டத்தை ஆலவட்டமாகஎடுப்பது என்க.

77. விழிசுழல- பார்த்தவர் கண்கள் சுழலும்படி.

78. மணி, பிணங்களுக்கணிந்திருந்த ஆபரணங்களினின்று சிந்தியவை.

79. மண் அறவறந்து ஓடித்திறந்து என்க. ஓடித்திறத்தல்- மிக ஆழ்ந்து வெடித்தல்.

80. போலும் போலும் என்னும் அடுக்கு இரண்டிடத்தும் இசைநிறை.

81. தூக்கும் அது அப்படர் வெம் கானில் எனப்பிரிக்க. செல்காற்று, வினைத்தொகை.

---

## ச.—கோயில்பாடியது.

அஃதாவது முற்கூறிய பாலைநிலத்தின்கணுள்ள காளிகோயிலின் சிறப்பைப் பாடியது.

84. இதுமுதல் பதினொருதாழிசை ஒருதொடர். சென்னி மானதன்-சென்னியாகிய மானதன் = விசயதரன். பட்டமங்கைமார் - பட்டத்துத்தேவியர். பணிமணிதிரு கரு இருத்தி - ஆபரணங்களிலே தொடுத்த அழகிய இரத்தினங்களினாலே (சுவருககு) அடியீடுசெய்து.

85. துவர்நிறக்களிறு - (பகைவரதுகுருதிதோய்தலால்) சிவப்புநிறமுற்ற யானை. சுரிகை உருவ - விசயதரனது வாள் தம்முடலிற்பட்டு உருவும்படி. ஏவலின்-ஏவுதலால; ஏவலின் எதிர்த்தவர் என்க. கருந்தலை- பசுந்தலை; (சிலப்பதிகாரம். ரு: அச; கஉ: "ஆனைத்தோல" - அடியார்க்குநல்லாருரை பார்க்க) பெரியதலை எனினும் ஆம்.

86. வாரணம், எழுவாய். கனையத்தால் தூணும் உத்திரமும் இயற்றி.

87. மிதிலையில் போர் கடிது அழிந்துபடும் கரி. படுதல் - இறத்தல். பழுவெலும்பு - விலாவெலும்பு.

88. விருதராசர் - விருதுகளையுடைய அரசர்; 'விருதராசபயங்கரன்' (தா 134, 243.) நிரைத்து - வரிசையாகப் பொறித்து.

87 - 8. தலாம், பா, நாசிகை என்பன உத்திரத்திற்கு மேலே அமைக்கப்படும் உறுப்புக்கள்.

89. களிற்றின் படம் - யானைமுகபடாம்.

91. இரும்பின் - இரும்பாலாகிய. கால்நாட்டி - காலாகநாட்டி.

92. இதன் பின்னடிக்குப் பொருள் நன்கு விளங்கவில்லை.

93. எரியைவிரியச்செய்யும் (பரப்பும்) ஈமமாகியவிளக்கு; ஈமம் - சிதை. இயல்பிற்று - இயல்பினையுடையது. ஆல், ஓ - அசை.

84 - 94. இருத்தி, குலமுத்து, அடுக்கி, இயற்றி, பரப்பி, அடுக்கி, இருத்தி, கவித்து, சமைத்து, நாட்டி, வளைத்து, தூக்கி, தூக்கி, நாட்டி, அலகிட்டு, தெளித்து, சிந்தி, ஏற்றியதோர் இயல்பிற்று எனமுடிக்க.

95. வரம்தருக எனமாற்றுக.

97 - 8. இவ்விரண்டுதாழிசைகளும், சிலப்பதிகாரவுரையில் (ரு : எசு-அஅ.)' அடியார்க்குநல்லாரால் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டன. அங்கே இவை சிறிது பாடபேதத்துடன் காணப்படும்.

100. பகடு இடந்து கொள் - எருமைக்கடாவைப் பிளந்து எடுத்துக்கொண்ட ; வீரர், எருமைக்கடாவின் இரத்தத்தைக் காளிக்குப் பலியாகக் கொடுத்து, உடுக்கடித்துத் துதித்தல் மரபு. தலைவீ, விளி.

101. அமரி - போரில்வல்லவள், அலங்கரித்தல் இல்லாதவள் = துர்க்கை. சாதகர் - மெய்காப்பாளர் ; இவர்களும், மேல்வரும் யோகினி, (தா. 102, 159.) இடாகினி (தா. 142, 468) என்பவர்களும் தேவியின் பரிவாரங்கள்.

103. வீங்குதலை - பருத்ததலையையுடைய. தூங்குதலை - தொங்குகின்ற தலைகள். உறங்குதலை - தூக்கத்தை.

104. கழை தூண்டிலென்னத் தோன்றும்.

105. ஓரி - கிழநரி. நல்வாய்ச்செய்யதசை - நல்ல வாய்க்கினிய செவ்வியதசை. பேய், ஓரி முழவாக, குழவிக்குத்தசைதேடி, நரிவாய்த்தசையைப் பறிக்கும் என்க. அன்னப்பிராசனத்திற்கு முழவு ஆர்த்தல் மரபு.

106. நெருப்பு - பிணஞ்சுடுநெருப்பு. பருத்தி - செம்பருத்தி; இது சுடுகாட்டருகே முளைப்பது. பிணங்குநெறி - குறுக்குநெடுக்காகப் போகும்வழி.

---

## ரு.—தேவியைப்பாடியது.

அஃதாவது மேற்கூறிய கோயிலின்கண் எழுந்தருளியிருக்கும் காளிதேவியைப்பாடியது. இதில்,தெய்வங்களுக்குரிய முறைப்படி பாதாதிகேச வருணனை கூறப்படுகின்றது.

108. கயிறு - வாசுகி. வடம் - சேடன். கயிற்றினும் வடத்தினும் ஆகிய இணைப்பரிபுரம் வைத்த பதயுகளத்தினள்.

109. அரவொடு திக்கயம் பரித்தவிடத்து அப்பொழுது அடியிட. பரித்த விடத்து - பூமியில். அப்பொழுது - அவைமட்டுந் தாங்கியபொழுது. (சயதரன் பூமியைத்தாங்குமுன்.) அடியிட - கால்பெயர்த்திடுதலால்.பரித்தெனதாங்கினாற்போல. இது தற்குறிப்பேற்றம். சயதரன் தரணிபரித்ததனால் பூமியின் சலனமும், (தா. 249) பரணிதரித்ததனால் தேவிகணங்களின் துன்பமும் (தா. 514) நீங்கின.

110. கரியிற்குடர் - யானையின்குடர். கட்செவியிட்டுப் புரியிட்டு - பாம்பைச்சேர்த்து முறுக்கி. உடுக்கை - இடை: ஆகுபெயர்.

111. கலைவளருத்தமன் - பிரமன். சிலை வளைவித்து - வில்லை வளையச் செய்து; வளைத்து என்றபடி. வளைவிட்டு என்றும் பாடம். செக விட்ட - அழியும்படி அம்புதொடுத்த. அயிற்றிறலவன் - முருகன். பிரமன்முதலிய நால்வரையும் தரும் திரு உதரத்தினள்.

113. எரிய - பிரகாசிக்கும்படி. உத்தரியத் தனி உரகம்-உத்தரியமாகிய ஒப்பற்ற பாம்பு.

114. (வீரர்) அரிகின்ற கழுத்தினின்றும் விழுந்து அலைவீசித் தளும்புகின்ற இரத்தம். எதிர்வைத்து மடுத்தல் - அள்ளிக்குடித்தல். தொளையிற் கலுழி - தொளையினின்றும் பாய்கின்ற மதநீர்; இது கருமையானது.

115. சுடும் அப்பொழுதத்து - (ஆலாலவிடம்) சுட்ட அப்பொழுதில். தகைதற்கு - அவ்வாபத்தினின்றுங் காத்தற்பொருட்டு. தரத்து - மேன்மையுடைய.

116. (தன்னைநோக்கி) உருகுகின்ற, தலைமாலையையணிந்த சிவபெருமானது நடனச்சுழற்சிக்குச் சமானமாகும்படி சுழன்று உலாவுகின்றகடைக்கட் பார்வைபடுதலால் (அப்பெருமானை)வருத்துகின்றபகை அற்றொழியும்படி (அத

னோடு) மாறுபட்ட சிறந்தஒலியையுடைய சிறிய குதலைச்சொற்கள் பொருந்திய பவளம்போன்றவாயினிடத்துப் புன்சிரிப்புப்பொருந்திய, முத்துப்போன்ற பற்களையுடைய அழகிய முகத்தையுடையவள்.

117. குலத்து உபயகுலத்து முதல் - சிறந்தனவாகிய தந்தையின் குலம் தாயின்குலம் என்னும் இரண்டு குலத்திற்கும் முதலாகிய.

118. ஒருவாது நடந்தான் - ஒருபொருளையும் விட்டு நீங்காமல் வியாபித்தவன்.

## சு.—பேய்களைப்பாடியது.

இதில் அத்தேவியைப் பிரியாது உடனுறைகின்ற பரிவாரங்களாகிய பேய்களின் வருணனை கூறப்படுகின்றது.

124. மேல் வேய்ந்திலா இறப்பு - மேற்புறம் மூடப்படாத வீட்டின் கூரை.

125. ஏழுகழியுள் புகு அக்குன்றி - அம்புக்கூட்டினுள்ளே புகுந்த அக்குன்றிமணி.

128. கோத்தஅன்ன - கோத்தாற்போன்ற.

130. துஞ்சலுக்கு அணித்தாம் என - (பசியினால்) சாவு கிட்டிவிட்டதென்று சொல்லும்படி.

122 - 30. ஒருதொடர். இவற்றிற் கூறப்பட்டவை தேவியின் அணுக்கப் பேய்கள். 131 முதல் 140-ல் 'இவ்வண்ணத்திருபுறமுந் தொழுதிருப்ப' என்பதுவரை ஒருதொடர். இவற்றிற்கூறப்படுபவை, முன்னே அணுக்கப்பேய்களாயிருந்து பணிசெய்து வலிகுறைந்தவையும் அங்கவீனமானவையும்.

134. விருதராச பயங்கரன் - விருதுகளையுடைய அரசர்க்கு அச்சத்தைச் செய்பவன். (தா. 88, 243.)

136. ஐம்படைப்பருவம் - ஐம்படைத்தாலி யணிந்திருந்தபருவம்; மிக்க இளமைப்பருவம் என்றபடி; மணிமேகலை. ௩: ௧௩௮; ஷை உரை பார்க்க.

## எ.—இந்திரசாலம்.

இதில் இமயமலைக்குப் போயிருந்து வித்தைகற்று வந்த ஒரு முதுபேய், திருவோலக்கங் கொண்டிருந்த தேவி சன்னிதியில் இந்திரசாலவித்தை காட்டுதல் கூறப்படுகின்றது.

140. இவ்வண்ணத்த - இவ்விதமான பேய்கள். எலும்பின் மிசை - எலும்புக் குவியலின்மேல். கச்சின் - கச்சினையுடைய. நீபக்காற்கட்டில் - ஒருவகைக் கட்டில். சிறுபூதமாகிய கட்டில் என்க.

(130) பேயெலாம் அருகாகவிருக்க, (140) இவ்வண்ணத்த இருபுறமும் இருப்ப, கட்டிலிட்டு, (141) மெத்தைஅடுக்கி, அணையிட்டு, நிணமெத்தை விரித்து, உயர்ந்தபஞ்சசயனத்தின்மேலே (142) இருந்தபோதில் எனக்கூட்டுக.

143. அடித்தடி - தொன்றுதொட்டு வந்த தடி: இது கட்டியக்காரருக் குரியது.

144. சுரகுரு - ஒரு சோழன். இவன் கலியுகமுதலில் மகாபலிபுரத்தை யிராசதானியாகக்கொண்டு அரசாண்டவன் என்பது, "தொல்லை வானவர் சூழ் கழுக் குன்றத்தின், எல்லை யாயதன் கீழ்த்திசை யெல்லையின், வில்லை வண் மிசை வீசுபொன் மாளிகை, மல்லை யென்றொரு மாநகருண்டரோ." "நாளு மந்நகருக்கொரு நாயகன், சோழ மன்னன் சுரகுரு வென்பவன், ஆளும் வை யங் கடையுகத் தாதியிற், றுளிரண்டுந்தொழத்தொழ வைகுவான்." (திருக்கழுக் குன்றப்புராணம். பசுவராகச்சருக்கம் : செய். க, ௩) என்பவற்றாலும், மிக்க கீர்த்திபெற்றவன் என்பது, "இரவி தன்குலத் தெய்தினவர்க்கெலாங் குரவன்" (ஷை ஷை செய். கஉ), "சுழியோடெறிபுனற் பொன்னிநன்னாடன் சுரகுருவின் வழியோன்" (வீரசோழியம். வேற்றுமைப்படலம்: காரிகை. ௬ - உரை; நன் னூல். சூ. உ௬௬-மயிலைநாதருரை - மேற்கோள்) என்பவற்றாலும் பெறப்படு கின்றன. இவன் பெயர், மேல் 163-ம் தாழிசையிலும் வந்திருக்கின்றது. இவ னைப்பற்றிய மற்றுஞ்சில விவரங்களை 179-ம் தாழிசையின் குறிப்பிற்காண்க. இவன் யமன்பாற் றூதுவிட்டதற்குக் காரண முதலியன புலப்படவில்லை. அத் தூதன் துணித்துவைத்த சிரத்தின் விருத்தாந்தத்தை 147-ம் தாழிசையினாலும் அதன் குறிப்பினாலும் ஒருவாறு அறியலாம்.

145. முதுபேய்: இது, சுரகுருவின் காலத்தில் அவன் முனிவுக்கும் காளியின் முனிவுக்கும் பயந்து ஒளித்துப்போய் இமகிரிபுக்கிருந்து இந்திரசால வித்தையும் (163) கரிகால்வளவன் எழுதிய சோழராசபாரம்பரியமும் (196) கற்று, இப்பரணித்தலைவனாகிய விசயதரன் காலத்துத் திரும்பிவந்ததாதலின் 'முதுபேய்' என்னப்பட்டது. சுரகுருவுக்கும் விசயதரனுக்கும் இடையில்ஆண்ட அரசர்களின் வரிசையையும், காலத்தையும் இராசபாரம்பரியம் 179 - 194 தாழிசைகளிலும் அவற்றின் குறிப்புக்களிலும் காண்க.

146. அழைக்க வந்து - கோயில்நாயக நெடும்பேய் அழைக்க முதுபேய் வந்து. ஆணையிற் பிழைக்கவந்தன - கட்டளையிற் றவறியவற்றை.

147. வன்தலை-வலிய தலையை. அவன் - அவ்வீரன். இவ்விருத்தாந்தம் "நிலைதப்பா, மீளி தலைகொண்ட தண்டத்தான் மீளிக்குக், கூளி தலையளவு கொண்டகோன்" (குலோத்துங்கசோழனுலா) என்பதனால் ஒருவாறு புலப் படுகின்றதாயினும் விவரமாக விளங்கவில்லை.

148. அருளா - நீ அருளுதலால். அருளா உய்ந்துபோயினம் எனக்கூட்டுக.

142 - 8. இருந்தபோதில், நெடும்பேய் கும்பிட்டு என்கொலோ திரு வுள்ளம் என்ன, (தேவி) அழைக்க என்றலும் (அப்பேய்) அழைக்க, (முது பேய்) வந்தணுகி வணங்க, (தேவி) 'பொறுத்தனம்; பொருதது இனியில்லை' என்ன, முதுபேய் இறைஞ்சி என்க.

149-54. முதுபேய் காட்டும் இந்திரசாலவித்தை.

155-9. அவ்வித்தையைப் பார்த்துக்கொண்டு தேவியுடனிருந்த பேய் களின் செயலும் யோகினிமாதர் செயலும்.

158. மேல்விழ - ஒன்றன்மேலொன்று விழுதலால்.

160. அக்கணம் - அந்தப்பேய்க்கூட்டம். இக்கணம் மாளும் - இந்த நிமி-த்தில் இறந்துபோம். விச்சை தவிர்-சாலவித்தையை நிறுத்தச்செய்வாயாக.

161. கற்றன - கற்றவற்றை யெல்லாம். அவன் - அவ்விசயதரன். கடை-யாக - முற்றும்.

162. மறுகூடு சுடுதல் - இரண்டாந்தரம் துன்பப்படுத்துதல்.

163. 'வேந்தன் சீறின் ஆந்துணையில்லை' யாதலால் சுரகுருவின் முனிவும் அஞ்சிற்று.

148 - 64. (முதுபேய்) இறைஞ்சி, 'திருக்சண்வைத்தருள் செய்; பார்' என்றபோதில், உடனிருந்தபேய் பதறி (சில) எழுந்துவிழும்; துழாவிடும்; (வேறு சில) வெறுங்கைய; எயிற்றின; (வேறு வண்ணமாக) கயிற்றுறியொப்ப நாருபேய் எயிற்றையதுக்க, நிரைத்திடுபேய்கள் முதுகுந்திறம்பி விலாவிற, யோகினிமாதர் சிரித்து விலாவிற, கணங்களெலாம் கைவிதிர்த்தலும், (முதுபேய்) கண்டருள்என்று வணங்குதலும், கணங்களெலாம் 'அணங்கரசினுணை' என, அணங்கும் 'தவிர்; எங்கிவைகற்றாய்' என்ன, (முதுபேய்) அஞ்சி இமகிரிக்கிருந்தேற்கு உருத்திரயோகினியென்பாள் விச்சைபலவுந் தந்து 'இங்கிருக்க' என்ன யான் சிலகாலம் இருந்தேன்; இருந்த நாளில் எனக் கூட்டி உரைக்க.

---

## அ.—இராசபாரம்பரியம்.

இதில் இந்திரசாலங்காட்டிய முதுபேய் இமயமலையிலிருந்தபொழுது, அங்கே வந்த நாரதமுனிவர் கூறியவண்ணம் திருமால் முதல் விசயதரன் வரை முறையாகவந்துள்ள சோழராசபரம்பரை வரலாற்றைக்கரிகால்வளவன் அம்மலையின்தென்புறத்தில் எழுத, அதனை அப்பேய் கற்றுவந்தபடி தேவிக்குக் கூறியதும் தேவிகேட்டு மகிழ்ந்து விசயதரனைப்புகழ்ந்துரைத்ததும் கூறப்படுகின்றன.

165. செண்டு: இது கச்சிநகர்க் காமக்கோட்டத்தின் கண்ணே காவல் பூண்டுள்ள சாத்தன் என்னும் தெய்வத்தின்கையிலிருந்து கரிகாலனுக்குக்கிடைத்தது; இதனை "கச்சி வளைக்கைச்சி காமக்கோட்டங்காவல், மெச்சி யினிதிருக்கு மெய்ச்சாத்தன் - கைச்செண்டு, கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான், செம்பொற் கிரிதிரித்தசெண்டு." (சிலப். ரு: கூரு - அ அடியார்க்கு நல்லாருரை மேற்கோள்) என்னும் பழஞ் செய்யுளா லறிக. கரிகாலன்: இவன் இளமைப்பருவத்தே நெருப்பிலகப்பட்டுக் கால் கரிந்துபோயினமையின் இப்பெயர்பெற்றான்; இதனை, "சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும்" (கoரு) என்னும் பழமொழிச் செய்யுளாலும் அதன் உரையாலும், "முச்சக்கரமுமளப்பதற்கு......கரிகாலன் கானெருப்புற்று" என்னும் பொருநராற்றுப்படைச் செய்யுளானு மறிக. ஒருகாலின் - ஒருகாலத்தில்; இவன் காலம் *இற்றைக்கு 1900 வருஷங்களுக்கு முற்பட்டதென்பர் சரித்திரகாரர். இவன் இமயவரையைத்திரித்துப் புலிக்குறிபொறித்ததன் காரணம் முதலியன

---

* இற்றைக்கு 1510 வருஷங்களுக்கு முன் ஒரு கரிகாலனிருந்ததாகத் 'தொண்டைமான்கதை' என்னுங் கையெழுத்துப் புத்தகத்திற் கூறப்பட்டிருக்கிறது. இவன் இரண்டாங்கரிகாலன் போலும்.

சிலப்பதிகாரம் ௫-ம் காதை கூ௫ - கூ௮ அடி அவற்றின் அடியார்க்கு நல்லாருரை முதலியவற்றாலறியலாம். அவ்விடத்து இத்தாழிசையை அடியார்க்குநல்லார் மேற்கோளாகக் காட்டியிருக்கின்றனர். இக்கரிகாலன்செய்த அருஞ்செயல்கள் மிகப்பல. அவற்றுட் சிலவற்றை, 183-6 தாழிசைகளிலும் அவற்றின்குறிப்புக்களிலும் காண்க.

166. நாரதர் கரிகாலனுக்கு முன்னிருந்த அரசர்களைக் கூறினதுமன்றி அவனுக்குப்பின் விசயதரன் வரையிலும் வரக்கூடியவர்களையும் அறிந்துகூறினமையின் 'காலமும்மையு முணர்ந்தருளுங் கடவுள்வேதமுனி' எனப்பெற்றார்.

167. பராசரன் மகன் - வியாச முனிவர். மகாபாரதத்தை வியாசர்கூற விநாயகர் மேருவில் எழுதிய கதை பிரசித்தமானது.

168. பாரதத்தினுளவாகிய......மறைகளே - பாரதத்திலுள்ளவை தூய கதையாகிய பரமனது (ஸ்ரீகிருஷ்ணனது) நல்ல சரித்திரமும் உண்மையான பழைய நான்கு வேதங்களுமேயாம். (பாரதம்ஐந்தாம்வேதமென்பர் பெரியோர்) அதற்கு நேர் இதனை - அப்பாரதத்திற்குச் சமானமாகிய இவ்விராசபாரம்பரியத்தை.

169 - 72. இந்நான்கும் ஒருதொடர்.

169. அதன் - அப்பாரதத்தின். முதற்கண்வரும் ஆதிமுதல் மாயவன் எனும் ஐயனும் பிரணவமாக அடைவே வேதமும் என்றது 'ஹரி: ஓம்' என்றுதொடங்குவதை; அவ்வாறுதொடங்குதல்மரபு. அதன் - அவ்வேதத்தின்.

169 - 70. இவ்விரண்டு தாழிசைகளிலும் உள்ளனவாகிய பதம், பாதம், அந்தம், இருக்கு, வருக்கம், அட்டகம், சங்கிதை என்பன வேதத்தின் உட்பிரிவுகள். இவ்வளவும் மந்திரபாகம். விதியென்பது வேறுபிரிவு; இது பிராம்மணம் எனப்படும். பல அந்தவகையும் எனவும், அந்தம் உட்படு அவ்இருக்கும்எனவும் பிரிக்க. பதம் சில வந்தனவும் பாதம்சிலவந்தனவும் என அந்தம் பலவாகலின் 'பல அந்தவகையும்' என்றார். சங்கிதை என்பது அட்டகத்தின்வேறான (இருக்குவேதத்திற்கு மாத்திரமுரிய) பிரிவாதலால் 'ஒட்டரிய' என்று விசேடிக்கப்பெற்றது.

171. கமலயோனி - பிரமா. இதுதானும் - இக்கதையும். ஆரணநிலத்து அமலனே இதில் அபயனாக அறிக - வேதத்திலுள்ள திருமாலே இக்கதையிலுள்ள விசயதரன் என்று அறிவாயாக. (தா. 219 பார்க்க).

172. அரணி-தீக்கடைகோல்; ஈண்டு அதனினின்றும்உண்டாகியதீயைக் குறித்துநின்றது. அகண்டவுரு - நிர்க்குணப்பிரமம். உருவாய்த் துயிலும் ஆதி என்க. ஆதி - திருமால்.

169 - 72. 'ஐயனும், வேதமும், அதன் பாதமதுவும், அந்தவகையும் இருக்கும், வருக்கமும், அட்டகமும், சங்கிதைகளும், விதியெனும்வகையும் உகளாமரபில் மன்னவர்களாகி வருகின்ற முறையால் இதுதானும் அமலவேதம்; அமலனே இதில் அபயனாக அறிக' என்றருளி அரவணைத்துயிலும் ஆதிமுதலாக அயன் காவலளவும் மொழிந்து முனிவன் எழுந்தருள என இயைக்க. 'மாமுனி மொழிந்தபடியே' என்பது 195-ம்தாழிசையில் 'எழுதினான்' என்பதனோடு முடியும்.

## (சோழவரசர் பரம்பரை.)

173. அருக்கன் - விவஸ்வான் என்னும் சூரியன்.

174. மனு - விவஸ்வான் புத்திரனாகிய வைவஸ்வத மனு. காதலனை ஆவின்கன்று நிகரென்று முறைசெய்த பரிசு, பெரியபுராணத்துள்ள மனுநீதி கண்ட புராணத்திற்காண்க.

175. இக்குவாகுவின் மகன் விகுக்ஷி; அவன்மகன் புரஞ்சயன் எனத் திருவாலங்காட்டுப் பட்டயமும், கன்னியாகுமரிக்கல்வெட்டுங் கூறும். இப்புரஞ்சயன் அசுரரோடு பொருதற்குத் துணைவேண்டித் தன்னிடத்துவந்து இரந்த இந்திரனை யிடபமாக்கி அதன்மீதேறிச்சென்று பொருது அசுரரை வென்று ககுத்ஸ்தன் எனப் பெயர்பெற்றான் என்பது *விஷ்ணுபுராண வரலாறு. ககுத்ஸ்தன் - இடபத்தின் பிடரியிலேறியிருந்தவன்.) இவ்வரலாறு பட்டயம், கல்வெட்டுக்களிலும் சுருக்கமாகக்கூறப்பட்டிருக்கிறது. "தான்றனக்கு வெலற் கரிய தானவரைத் தடிந்து துமித்தென், வான்றரக்கிற் றிகொலென்று குறையிரப்ப வரங்கொடுத்தாங், கேன்றெடுத்த சிலையினொ டிகல்புரிந்த விவர்குலத்தோர், தோன்றலைப்பண் டிந்திரன்காண் விடையேறாய்ச் சுமந்தானும் (கம்பராமாயணம். குலமுறைகிளத்து படலம்: ௩) என்னும் செய்யுள் இத்தாழிசையின் வியாக்கியானம் போல விளங்குகின்றது.

176. உண்ணவைத்த உரவோன் - மாந்தாதா. இவனைப்பற்றி 'அஞ்சா நெஞ்சன்; பொருள் கல்விகேள்விகளாற் பெரியவன்' எனத் திருவாலங்காட்டுப் பட்டயமும், 'அதர்மத்தை அழிக்க இவனாழி சக்கரவாளகிரி மட்டும் சென்றது; இவன்காலத்தில் ஒருவருக்கொருவர் உள்ளபகையை யாவரும் ஒழித்தனரே யும், தருமமானது அதருமத்தின்பாற் கொண்ட பகையை ஒழிக்கவில்லை' எனத் திருவாலங்காடு, நாகபட்டினம் என்னும் இரண்டிடத்துப்பட்டயங்களுங் கூறுகின்றன. "பழக்கத்தாற், போந்த புலியுடனேபுல்வா யொருதுறைநீர், மாந்த வுலகாண்ட மாந்தாதா" குலோத் - உலா.

177. இதன்முதலடியிற்கண்டவன்பெயர் 'ப்ருதுலாக்ஷன்' என்பது திருவாலங்காட்டுப்பட்டயத்தால் தெரியவருகின்றது. இவனைப்பற்றிக் கம்பராமாயணமும் "உரைகுறுக நிமிர்கீர்த்தி யிவர்குலத்தோ ரொருவன்காண், நரை திரைமூப் பிவைமாற்றி யிந்திரனு நாதாமற், குரைகடலை நெடுவரையாற் கடைந் தமுது கொடுத்தானும்" (குலமுறை: ௪) எனக்கூறுகின்றது. இரண்டாமடியிற் கூறப்பட்டவன் சிபி; இவன்வரலாறு மிகப் பிரசித்தமானது.

178. சுராதிராசன் முதலாகவரு சோழன் - சுராதிராசன் என்னும் முதற்சோழன். இவனுக்குச் †'சோழன்' என்பது இயற்பெயர்போலும். இவனமைத்தமண்டலம் சோழமண்டலம் எனப்பட்டது. இவனுக்குச் 'சோழவர்மன்' என்றபெயரும் உண்டு எனவும், துஷ்யந்தன் மகனாகிய பரதனுக்கு இவன் மகன் எனவும் திருவாலங்காட்டுப்பட்டயங் கூறுகின்றது. (பாரதத்

---

* விஷ்ணு புராணத்தில், மாந்தாதா முசுகுந்தன் முதலிய பல அரசரின் வரலாறுகளும் கூறப்பட்டிருக்கின்றன.

† இவனுக்குப்பின் இவன் மரபினர்க்குச் 'சோழர்' என்பது குடிப்பெயராய் வழங்கியிருக்கவேண்டும்.

தில் சந்திரவமிசத்துத் துஷ்யந்தனும் அவன் மகன் பரதனும் பிரசித்தராகக் காணப்படுகின்றனர்.) கன்னியாகுமரிக்கல்வெட்டில் இவனைக்குறித்து ஒருகதை காணப்படுகின்றது ; அது—முனிவர் உறைவிடமாம் வனமொன்றில் வேட்டையின் நிமித்தம் இவன் தங்கி, ஒருநாள் பரிவாரம் அதிகம் இல்லாது மான் வேட்டையாடித்திரிகையில் ரஜனிசரன் என்னும் பெயர்பூண்ட ஒருவன், புள்ளிமான் வேடங்கொண்டு இவன் கண்ணில் தென்பட, இவன் அதைத்துரத்திக்கொண்டு தென்றிசைச் சென்று மற்றொரு வனத்திற்புகுந்து அதைக்கொன்று, ஒற்றர்களுடன் காவேரிக்கரைவழியே சிறிதுதூரஞ்சென்று பிறகு காவேரியில் நீராடிக் கரையேறி, அந்தப்பிரதேசத்தில் அந்தணரொருவரும் இல்லாமைகண்டுஆரியாவர்த்தத்தினின்றும் பல உயர்ந்தபிராமணர்களை வரவழைத்து, காடழித்து நாடாக்கிப் பல்வளமும் செழிக்குமாறுசெய்து,அந்தப்பிராமணரையும் காவேரிக்கரையிலேயே குடியேற்றினன் என்பதாம்.

ஏழுலகையும் - ஏழுதீவுகளாகப் பகுக்கப்பட்ட பூமிமுழுவதையும். புலியாணை - புலியைக்கொடியிற்கொண்டு செலுத்தும் ஆணை. இராசகேசரி பரகேசரிகளாமிருவர் (தமது) ஆணை புலியாணை யென ஏழுலகையும் புரந்துநின்ற புகழும் என்க. எனவே,முற்கூறியசோழனுக்குப்பின்வந்தஇருவர்க்கு முறையே 'இராசகேசரி' 'பரகேசரி' என்பன இயற்பெயர் என்பதும், சோழரில் முதன்முதற் புலிக்கொடி யுயர்த்தவரிவரே யென்பதும் பெறப்படும். இவ்விருவர்க்குப் பின்னும் சிலதலைமுறை வரையில் 'இராசகேசரி' 'பரகேசரி' என்பன மாறிமாறி இயற்பெயராய் வழங்கிவந்து அப்பால் இயற்பெயரை விசேடித்து நிற்கும் பெயராயினவென்பர் சிலாசாசன ஆராய்ச்சி வல்லார்.

179. காலனுக்கு இது வழக்கு என உரைத்தவன்: இவன் பெயர் கிள்ளிவளவன் என்பது "கௌவை, யெழக்குரைக்கும் பேழ்வா யிருங்கூற்றுக் கேற, வழக்குரைத்த கிள்ளி வளவன்" (குலோத் - உலா) என்பதனாற் புலப்படுகின்றது. விக்கிரமசோழனுலாவிலும் இவன் "யாகத்துக், கூறவரிய மனுக்கொணர்ந்து கூற்றுக்குத், தேற வழக்குரைத்த செம்பியன்" எனக்கூறப்பட்டிருக்கின்றனன்.

காவிரிப்புனல் கொணர்ந்தவன்: இவன்பெயர் 'சித்திரதன்வன்' என்னும் திருவாலங்காட்டுப் பட்டயம். இவன், பகீரதன் பெருமுயற்சியாற் கங்கை கொணர்ந்ததைக்கேட்டுத் தானும் அக்கங்கையைவேண்ட,அவள் 'கவேரகந்யகா' என்னும் பெயருடன் வந்தாள்என்பது அப்பட்டயத்திற்கண்டவரலாறு. சோழவரசரில் ஒருவன், குடகமலையை ஊடறுத்துக் காவிரிப்புனல் கொணர்ந்ததாக மூவருலாக்கள் கூறும்: "மேக்குயரக், கொள்ளுங் குடகக் குவடு டறுத்திழியத் தள்ளுந் திரைப்பொன்னி தந்தோன்" (விக்) "கோல்கொள், தலையெறியுங் காவேரி யாற்றுப் படைக்கு, மலையெறியு மன்னர்க்கு மன்னன்" (குலோத்) "முடுகிக், கரையெறிந்த பொன்னி கடலேழுங் கோப்ப, வரையெறிந்த மன்னர்க்கு மன்னன்" (இராச) இங்கே 'பொன்னி கடல் கோப்ப வரையெறிந்த மன்னர்க்குமன்னன்' என்பதை நோக்குமிடத்து, ஒருகாலத்தில் காவேரியில் நீர்ப்பெருக்கு அதிக மின்மையால் அது கடலோடு கலவாமலிருக்க, பின்பு சோழனொருவன் குடகமலையைஎறிந்து நீர்ப்பெருக்கை மிகுதியாக்கிக் கடலோடு கலக்கச்செய்தான் என்னும் பொருள் பெறப்படுதலானும், காந்தன் என்னும் சோழன் தன்னூருக்கு நீர் வேண்டிக் காவேரியைப் பிரார்த்தித்துக் கொணர அஃது அவ்வாறே வந்து கடலொடு கலந்தது என மணிமேகலையில் (பதிகம்.

௰ - கச) கூறப்பெற்றிருத்தலாலும் உலாக்களிற்கூறப்பட்டவன் இக் காந்தன் ரனல் தரும். இவ்வரலாற்றைக் கவேரனுக்கேற்றுவாரு முளர்.

நமன்மேல் வென்றிகொண்டவன் - சூரதுரு; இவன் பிருகஸ்பதியை சேர்த்தவன்எனவும், 'இராசேந்திரன்' என்னும் மற்றொருபெயரும்உடைய வன்எனவும் நாகபட்டினத்துப்பட்டயமும், காலனைத்தன் னாட்டிலேயே புகாத படிசெய்து வென்றமைபற்றி இவனுக்கு 'மிருத்தியுஜித்'என்னும்பெயர் வந்தது எனத் திருவாலங்காட்டுப் பட்டயமுங் கூறுகின்றன. இவன் பெயர் 'இரா சேந்திர மிருத்தியுஜித்' என்பர் காலஞ்சென்ற ஸ்ரீமான் கோபிநாதராவ். (சோழ வமிசசரித்திரம், பக்கம்-5.) இவனுடைய கோபத்திற்குப் பேய்களும் அஞ்சின தா. 163.) என்பதும், இவனுடைய தூதன் துணித்துவைத்த சிரமொன்றைத் தின்ற (தா.144) பேயின் ரத்தைவாங்கிவைத்து (காளி,யமன் இவர்களருளால்) நீளியைஉயிர்ப்பித்தான் ( ர. 147 ; உரை) என்பதும் பிறவும்முன்னே பெறப் பட்டன.

180. புலியென......வைத்தவன்: இவனுக்குச் 'சித்திரன்' 'சித்திரா ந்தன்' என்பன இயற்பெயர் எனவும், பின்னர் இவனது வீரத்திற்கஞ்சி இவன் கொடியில் இந்திரனேபுலியாகி அமர்ந்ததனால் 'வியாக்கிரகேது' என்னும் பெ யர் பூண்டனன் எனவும் மேற்கண்ட இரண்டுபட்டயங்களுங் கூறுகின்றன.

புணரி.........புகவிட்டவன்: 'சமுத்திரஜித்'என்பான் கீழ்கடலையும் மேல்கடலையும் சேர்த்ததால் ஓரிராசகன்னிகையை மனையாளாகப் பெற்றான் என்கிறது கன்னியாகுமரிக்கல்வெட்டு. இவன்விருத்தாந்தம் மூவருலாக்களிலும் காணப்படுகிறது:—"மேல்கடலில், வீங்குநீர் கீழ்கடலில் விட்டோனும்" (விக்) "மேல்கடல் கீழ்கடற்கு விட்டோன்" (குலோத்) "வீங்கு, குடகடற்குச் சார்பு குணகடலே யாக்கும், வடகடற்குந் தென்கடற்கு மன்னன்" (இராச.)

வலியினில்...அளித்தவன்: செல்வமிக்கசோழனொருவனிடம் அதிதிகளா கச்சென்று இரந்த ஐந்துயக்ஷர்கள் குடித்துத் தாகந்தீருமாறு, அவன் தன்சரீ ரத்திலிருந்து ஐந்து இரத்தக்குழல்களைத்துண்டித்து அவற்றின் வழியாகத் தன் இரத்தத்தை அன்புடன் அளித்தனன் எனவும், அதனால் 'பஞ்சபன்' என் னும் பெயர் அவனுக்கு வழங்கலாயிற்று எனவும் கன்னியாகுமரிக் கல்வெட்டுக் கூறுகின்றது.

வாதராசனை......கொண்டவன்: இவன்பெயர் புலப்படவில்லை. ஆயினும் "நளியிரு முந்நீர் நாவாயோட்டி, வளிதொழிலாண்ட உரவோன்மருக" (புறநா னூறு, கசு) என்பதனாலும்'நீர்செறிந்த பெரியகடலின்கண்ணே மரக்கலத்தை யோட்டிப்போர்செய்தற்குக்காற்றின்றிநாவாயோடாதாக,ஆண்டுவெளிச்செல்வனை யழைத்து ஏவல்கொண்ட வலியோன் மரபிலுள்ளானே' என்னும் அதன் உரை யாலும் இவன்காற்றைப் பணிகொண்டதற்குக் காரணமின்னதென்பதும்,கப்பற் சண்டையிற்சிறந்தவனென்பதும், இவன்மரபிலுதித்தவன் கரிகால்வளவனென் பதும் புலப்படுகின்றன.

181. தூங்குமூன்றெயிலெறிந்தவன் - ஆகாயத்தில் இயங்கவல்ல அசுரர் களின் மூன்றுகோட்டைகளை வாளாலெறிந்து அழித்துச் சுவர்க்கத்தைக் காத்த வன்; இவனது இயற்பெயர் புலப்படவில்லை; எயிலெறிந்தமை அடியில் வரும் நூல்களிலுங் காணப்படுகின்றது:— புறநானூறு, கூக; சிறுபாணாற்றுப் படை, எகூ - அஉ; பழமொழி, சகூ; சிலப்பதிகாரம், உஎ: கஞ்ச -

௫ ; ஷெ. உக: "வீங்குநீர்வேலி"; மணிமேகலை, க:௪ ; விக்கிரமசோழ னுலா, கூ; குலோத்துங்கசோழனுலா, கஈ ; இராசராசசோழனுலா- கஈ.

திரண்மணிச்......உயர்த்தவன்: இவன் எத்திசையுஞ் செல்லவல்ல தொரு தேரை இந்திரனிடம் பெற்று ஆகாயத்திற்சென்று அசுரரை அழித்து 'உபரிசரன்' என்னும்பெயர் அடைந்தனன் எனத் திருவாலங்காட்டுப்பட்டயம் அறிவிக்கின்றது. சந்திரவமிசத்திலே உபரிசரவசு என்ற ஒருவன் ஸ்படிகத்தா லாகிய ரதமொன்று பெற்றிருந்தனன் என்று ஸ்ரீமகாபாரதம் (ஆதிபருவம், அத் -64) கூறுகின்றது.

தாங்குபாரத......செய்தவன்: இவன்பெயர் இன்னதென்று விளங்க வில்லை; பாண்டவர் பக்கத்திருந்துஉதவினமை, வில்லிபாரதம், படையெழுச் சிச்சருக்கம்: ௪-ம் பாட்டாலும், இரண்டாம்போர்ச்சருக்கம்: ௫-ம் பாட்டா லும் அறியக்கிடக்கின்றது. இனி, சோழனொருவன் உணவுதந்தசெய்தி சிலப் பதிகாரம், கட்டுரைகாதை ௫௫ - ம் அடியாலும், அதன் அரும்பதவுரையா லும் வெளியாகின்றதனால், (சிலப். முதற்பதிப்பைப் பார்க்க.) உணவு தந்தவ னும்' என்றபாடமும் கொள்ளத்தக்கதெனத் தோற்றுகின்றது. இதற்கு முன் கூறப்பட்ட விமானமுயர்த்த வரலாற்றுக்கு இருவர் உரியராயினமை போல, இதற்கும் இருவர் உரியராகின்றனர். அவர்களுள் ஒருவன் இச் சோழன் ; மற்றொருவன் சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதன். அவன்வரலாறு பிரசித்தமானது: (அகம். உ௩௩ ; புறம். உ; சிலப். உக: ஊசல்வரி.) பாண்டியனொருவனும் பாண்டவர்க்கு உதவிபுரிந்ததாகப் பாரதம் கூறுகின்றது.

182. தளவழிக்கு......கொண்டவன்: தளவு அழிக்கும் நகையாள் முல்லையரும்பின் அழகைக்கெடுக்கத்தக்க பற்களையுடையாளாகிய நாககன்னிகை. இழி - இறங்கிச்சென்ற. உரகர்தங்கண்மணி - நாககன்னிகை. இவ்வர லாறு, பெரும்பாணாற்றுப்படை உகூ - ௩௭ அடிகளின் விசேடவுரையில் "நாக பட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாக கன்னிகையைப் புணர்ந்த காலத்து......" என நச்சினார்க்கினியர் கூறியிருத்த லால் ஒருவாறு விளங்கும். திருநாகைக்காரோணப்புராணம், நாகநாதப் படலத்தில் இவ்வரசன் கதை விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. அங்கே இவன் பெயர் 'சாலிசுகன்' என்றுகாணப்படுகிறது. இனி தாலவனமாகாத்மியம், (திருப்பனந்தாட்புராணம்)நாககன்னிகைவரப்பிரதான அத்தியாயத்தில் வாசுகி யின்மகளாகிய 'சுமதி' யென்பவளை 'அரித்துவசன்' என்னும் தமிழரசன்கண்டு, அவளுடன் பிலத்தின்வழியே நடந்து மூன்றுநாழிகையில் நாகலோகஞ்சென்று வாசுகியைக்கண்டு அவளை மணந்து ஏழுநாள் அங்கிருந்து எட்டாநாள் அவ ளுடன் திரும்பிவந்தான் என்பதொரு வரலாறுங் காணப்படுகின்றது.

களவழிக்......அரசிட்டவன்: களவழிக்கவிதை - களவழிநாற்பது. பொய் கை - பொய்கையாரென்னும் சேரநாட்டுப்புலவர். உதியன்- சேரமான்கணைக்கா லிரும்பொறை. அவனுக்கிட்டிருந்த கால்விலங்கை வெட்டிவிட்டு அரசு கொடுத்த வன் சோழன் செங்கணான். இவனைக் கோச்செங்கட்சோழனென்றுங்கூறு வர்;(பெரியபுராணத்துக் கோச்செங்கட்சோழநாயனார்புராணம் பார்க்க.) இவன் தன்னொடு பொருதுதோற்ற கணைக்காலிரும் பொறையைப்பிடித்து விலங்கிட்டுச் சிறைசெய்ய அவனவைக்களத்துப்புலவராயிருந்த பொய்கையார், இவனிடம்

வந்து இவன் வெற்றியைச் சிறப்பித்துக் களவழிநாற்பது பாடி இவனைமகிழ் வித்துத் தம்மரசனை மீட்டுக்கொண்டனர் என்ப.

183. இவ்வளவும் கரிகால்வளவனுக்கு முன்னிருந்தவர்களின் சரிதமாத லின் 'எழுதி' எனப் பிரித்துக் கூறிற்று. இனிவருவன கரிகால்வளவனையும் அவன் பின்னோரையும் பற்றிய சரிதங்கள்.

வழுதிசேர......அணைந்த பரிசும்: இதனால் கரிகாலனுடைய வெற்றி களில் முதலாவது பாண்டியனையும் சேரனையும் வென்றமை என்பது பெறப்படு கின்றது. இப்போர்நடந்த விடம் சோழநாட்டிலுள்ளதாகிய வெண்ணி. சேரன்-சேரமான் பெருஞ்சேரலாதன். பாண்டியன் பெயர் விளங்கவில்லை. பொரு ந. கசரு - அ; அகநா. ௫௫; ௧௨௫; புறநா. ௬௫, ௬௬ - பார்க்க.

184. கரிகாலன் காவிரிக்குக் கரைகட்டுவித்தமை, "தெள்ளருவிச், சென் னிப்புலியேறிருத்திக் கிரிதிரித்துப், பொன்னிக் கரைகண்ட பூபதி" என விக் கிரமசோழனுலாவும், 'கரிகாலன் தன் பாதகமலங்களிற்பொருந்திய கண்களை யுடையவரான திரிலோசனன் முதலிய அரசரைக்கொண்டு காவேரிக்குக் கரை கட்டுவித்தவன்' எனக் கரிகாலனது மரபினனென்று சொல்லிக்கொள்ளும் தெலுங்கசோட அரசர்களில் ஒருவன் கி-பி. 1224-ல் வெட்டுவித்த கல்வெட் டொன்றும் கூறுதலாலும் வலியுறும். அவ்வாறு கட்டுவித்த பொழுது தன்னு ணைக் கடங்கிக் கரைகட்ட வாராத ஓரரசனைக்கரிகாலன் கண்கொண்டானென்று "தலையேறு, மண்கொண்ட பொன்னிக் கரைகட்ட வாராதாற், கண்கொண்ட சென்னி கரிகாலன்" (குலோத்துங்கசோழனுலா.) "கண்கொண்டான்பொன் னிக் கரைகட்ட வாரானை, யெண்கொண்ட சோழனிரங்கேசா" (இரங்கேச வெண்பா. செய். ௫௫.) என்பவற்றாலறியப்படுதலின் அவ்வரசனே இங்குக் கூறிய முகரியாதல் வேண்டும். இவன் இன்னவிடத்திலிருந்து அரசாண்டவ னெனத்துணிந்து சொல்லக்கூடவில்லை. ஆயினும், கணக்கதிகாரம் என்னும் நூலின்பாயிரத்தால் தமிழ்நாட்டிலேயே முகரியென்னும் பெரியவூரொன்று இருந்ததாகத் தெரியவருதலின் இவ்வரசன் தன்பெயரால் அவ்வூரை நிருமித்து அதிலிருந்தாண்டனன் என ஊகிக்க இடமுண்டு. அன்றி, வடநாட்டில் 'முகரி கள்' என்ற ஒரு வகுப்பினர் அரசாண்டு வந்தனராதலின் அவர்களில் ஒருவ னாகவுமிருக்கலாம். 'இங்கழிக்கவே அங்கழிந்ததும்' என்பது கரிகாலனுடைய ஆஞ்ஞாபலத்தை அல்லது தெய்வசக்தியைப் புலப்படுத்துகின்றது. இனி, 'இது மிகைக்கண்' எனப்பாடங்கொண்டு அதற்கேற்ப வரலாறு கற்பித்துக் கூறுவாரு முளர்; இரங்கேசவெண்பா. ௫௫ - உரை பார்க்க.

185. குறுமி - இதுகடப்பைஜில்லாவிலுள்ள தோரூர். கரிகாலன் இதனை வென்றதன் விவரம் விளங்கவில்லை. பரிசில்வாணர் - கடியலூர் உருத்திரங் கண்ணனார். பத்தொடுஆறுநூறாயிரம் - பதினாறுலட்சம். இவன் இப் பட்டினப் பாலையேயன்றி, முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படையும் பெற்றிருக்கின்றான்.

186. முன்னொருநாள் ஒருவரும் பின்னொருநாள் ஒருவருமாக. உதகை மன்னர் - சேரர். (உதகை - சேரநாட்டிலுள்ளதோரூர்) தோற்றஅரசரைக் கொணர்ந்து கிழிசூற்றுவித்து (அவர்தலையில்) எரிவிளக்குவைத்தல் அக்காலத்து வழக்கம்போலும். 183-ம்தாழிசையால் கரிகாலன்ஒருமுறை சேரபாண்டியர் களைஒருகளத்தேபொருது மடிவித்தமை கூறப்பட்டது. பின்னர்ப்பட்டந்தரித்த

சேரபாண்டியர்களும் பழம்பகை கருதி யிவனை விரோதிக்க, இவன் அவர்களைத் தனித்தனியே யெதிர்த்து வென்று அடக்கினமை ஈண்டுக் கூறப்பட்டதெனத் தோற்றுகின்றது. "குடவாகூம்பத், தென்னவன் திறல்கெடச் சீறி" பட்டினப் பாலை, உஎஅ - எ.

187. வேழமொன்......வென்றதும்: இவ்விருத்தாந்தம் விளங்கவில்லை.

ஈழமும்......இசைபரந்ததும்: இவ்விசைக்குரியவன் 'பராந்தகன்' என்பவன். இவன் மேற்கூறிய கரிகாலனுக்குப் பின் சிலதலைமுறை சென்றபிறகு பட்டத்துக்கு வந்த விஜயாலயன் மகனுகிய ஆதித்தியனுக்கு மகன். இவ்வரசனுக்கு 'வீரநாராயணன்' என்றொரு மறுபெயருண்டு. இவன் பாண்டியனையும் அவன் படைகளையும் அழித்துப் பாண்டியன்பொருள்களைக் கைப்பற்றி மதுரையை நீறாக்கி 'மதுராந்தகன்' எனப் பெயர் புனைந்தும், அதுவரை வெற்றி நீங்காத அரட்ட அரசனுகிய கிருஷ்ணனைவென்று 'வீரசோழன்' எனப் பட்டம் பெற்றும், தனதுசேனைகளுடன் கடல்கடந்து சென்று சிங்களத்து அரசரைக் கொன்று 'ஸிம்ஹளாந்தகன்' 'சங்கிராமராகவன்' எனக் கீர்த்தியடைந்தும் வாழ்ந்து பெரும்புண்ணியங்களைச் செய்தவன் எனச் சிலா சாசனங்களாலும், பட்டயங்களாலும் தெரியவருகின்றது. மேற்கண்டவைகளில், கிருஷ்ணராசனைக் கொன்றதுமட்டும் இவன்மகனுகிய 'இராசாதித்தியன்' என்னும் திருவாலங்காட்டுப் பட்டயம். பராந்தகனுடைய ஆட்சிக்காலம் சற்றேறக்குறைய கி. பி. 906முதல் 952 வரை என்பர் நவீன சரித்திர ஆராய்ச்சி வல்லார். 907 முதல 40 வருஷம் என்பர் காலஞ்சென்ற ஸ்ரீ. து. அ. கோபிநாதராயர். (சோழவம்சு. அதிகாரம். 3.)

188. விழாவைத்தவனுகிய உதகைவென்றகோன், கவர்ந்ததும் ஒன்க. இவன் பெயர் 'இராசகேசரி - இராசராசன்' என்பது. தஞ்சாவூரில், கண்டோர் வியக்கும்படியான 'இராஜராஜேசுவரம்' என்னும் பிரகதீசுவரர்கோவிலைக் கட்டினவன் இவனே. இவன் பாண்டியனையும் சேரனையும்வென்று அவ்விருவர் நாடுகளையும் தன்வசப்படுத்திக்கொண்டு ஆண்டமையால் 'மும்முடிச் சோழன்' எனப் பட்டான். இவன் பிறந்த நாள் ஐப்பசிமாதத்துச் சதயநட்சத்திரம். இவன் சேரநாட்டுத் திருநந்திக்கரை என்னும் தலத்திலுள்ள சிவாலயத்திற்குத் தன் பிறந்த நாளாகிய ஐப்பசிமாதத்துச் சதய நட்சத்திரத்தில் திருவிழா நடத்தத் திட்டஞ்செய்து, 'முட்டம்' என்னும் கிராமத்தை (அதற்கு அப்பெயரைமாற்றி மும்முடிச சோழ நல்லூர் என்று பெயரிட்டு) அளித்தனன் என அக்கோயிலிலுள்ள கலவெட்டொன்று கூறுகின்றது. இவன் கி பி. 985முதல் 1013 வரை அரசாண்டான். இவனே முதல் இராசராசன். முற்கூறிய பராந்தகன் காலத்திற்குப்பின் இவன்காலம் வரையிற் சோழநாடு இருந்த நிலைமையையும், இவன்பெருமையையும், சோழவம்ச. 4, 5, 6-ஆம் அதிகாரங்களிற் காண்க.

189. இதிற்கூறப்பட்டவன் டிை இராசகேசரி - முதல் இராசராசன்மகனுகிய பாரகேசரி-இராசேந்திரசோழன். இவன்வடநாடுகளையெல்லாம்வென்று கங்காதீரத்தையும் கைக்கொண்டு, தன்னுடைய யானைகளைச்செலுத்திக் கங்கை நீரை யுண்ணப்பண்ணியதுமன்றி, கங்காதீர்த்தத்தைக் குடங்களிலடைத்து வட தேசத்து மன்னர்தலையிலேற்றித் தன்தேசத்திற்குக் கொணர்ந்து இங்கே புதியதோர் குளம் வெட்டி அத்தீர்த்தத்தை அக்குளத்திலூற்றி, அதற்குச் 'சோழகங்

கம்' எனப் பெயரிட்டுத் தானும் 'கங்கைகொண்டசோழன்' என்னும் பட்டப் பெயரைப் பெற்றான் என்பது திருவாலங்காட்டுப்பட்டய முதலியவற்றால் வெளியாகின்றது. இவன் தன்களிறுகளைக் கங்கைநீருண்ணச் செய்யவேண்டுமென்றெண்ணிச் சென்றபொழுது 'மண்ணை' என்னும் அரண்பொருந்தியதோரூரையாண்ட அரசன் இவனையெதிர்க்க, உடனே கோபித்துப் போர்செய்து அவனை வென்றான் என்பது 'களிறு கங்கைநீர்..............கலவுசெம்பியன்' என்றதனாலும், பின்னர் இவன் *கங்கைக்கப்பாலுஞ்சென்று பர்மாதேசத்தைவென்று அதிலுள்ள 'கடாரம்' என்னும் அரண்பொருந்தியதோரூரையுங் கைப்பற்றினன் என்பது 'குளிறுதெண்.........கடாரமுங்கொண்டு' என்றதனாலும் பெறப்படுகின்றன. இவன் இப்பூமண்டலமுழுவதையும் ஒருகுடையில் வைத்தாண்டமை 'மண்டலங் குடையுள் வைத்ததும்' என்றதனாற் பெறப்படுகின்றது. இவன்செய்த திக்குவிசயத்தைஇவனது மெய்க்கீர்த்தியாலும், (சோழவமிச. பக்கம் 81 - 83) இவனுக்கு மற்றுமுள்ளபெயர் முதலியவற்றைச் சோழவமிச. 7-ம் அதிகாரத்தாலும் அறியலாம். இவன் கி. பி. 1013 முதல் 1032 வரை ஆட்சிபுரிந்து அப்பால் தன்மகன் இராசகேசரி - இராசாதித்தனிடம் ஒப்பித்துவிட்டு 1045 வரை இளைப்பாறியிருந்தான் என்பர்.

190. கிம்புரிப்பணைக்கிரி - யானை. கிரியுகைத்தவன், சயத்தம்பம் நட்டதும் புலிபொறித்ததும் என்க. இவைகளைச் செய்தவன் மேற்கூறிய இராசகேசரி-இராசாதித்தன். இவனுக்குஇராசாதிராசன்என்னும்பெயரும்உண்டு. இவன் கி. பி. 1018-ல் இளவரசுப்பட்டம் பெற்று, முற்கூறியபடி 1032-ல் இராச்சியத்தை ஒப்புக்கொண்டு 1053 வரை ஆட்சி புரிந்தான். இவன் அரசாண்டகாலத்தில் இளவரசாயிருந்தவன், இவன் தம்பியாகிய பரகேசரி - இராசேந்திரதேவன். இராசாதித்தன் தனியே சண்டைசெய்து கம்பிலிச் சயத்தம்பம் நாட்டிப் புலி பொறித்துவிட்டுத் தம்பி இராசேந்திரதேவனுடன் அந்தியகாலத்தில் கலியாணபுரத்தின்மேற் சென்றான்.

191. இதிற்கூறப்பட்டவன் மேற்கூறிய பரகேசரி - இராசேந்திரதேவன். இராசாதித்தனுக்குப் பிள்ளையின்மையால் தம்பியாகிய இவன் பட்டத்துக்குவந்தான். (கி. பி. 1053.) இவனுக்கு 'விசயராசேந்திரதேவன்' என்ற பெயரும் உண்டு. முற்கூறியபடி தமையனும் இவனுமாகக் கலியாணபுரத்தின்மேற் சென்று அதனைக் கைப்பற்றினவுடனே அதனையாண்டுகொண்டி

---

* கங்கையில் இவன் யானைகளை வரிசையாக இறக்கி, ஒன்றை யொன்று பற்றிக்கொண்டு அசையாமல் அக்கரைவரை அணைபோல நிற்கச்செய்து, அவ்வணையின் வழியாகச் சேனைகளைச் செலுத்தினன் என்பது திருவாலங்காட்டுப்பட்டயத்தாலும், இவனுக்குச்சுமார் 1150 வருஷங்களின்முன்னே கலிங்கதேசத்தையாண்ட 'காரவேலன்' என்னும் பேரரசனும் (அவன் மகதநாட்டின் மீது படையெடுத்துச் சென்றபொழுது) பாடலீபுரத்தின் வடபாரிசத்தில் இவ்வாறே கங்கைக்கு யானையணைகட்டிச் சேனைகளைச் செலுத்தியிருக்கின்றான் என்பது பழையதொரு கல்வெட்டு, ஸோமதேவர் என்னும் ஸம்ஸ்கிருத கவி செய்த ஒரு சுலோகம் முதலியவற்றாலும் வெளியாகின்றன என்பர்—கீழ்ப்பாக்கம் ஸ்ரீமான் T. G. ஆராவமுதையங்கார் M. A., L. T., B. L. இவ்விஷயமும், மற்றுஞ்சில அரியவிஷயங்களும் ஷையார் எழுதிவரும் வியாசம் ஒன்றில் வித்தாரமாக வெளிவந்து தமிழுலகை மகிழ்விக்கும்.

ருந்த ஆகவமல்லன் என்பவன் இவர்களைக் கொப்பை (கொப்பம்) என்னுமிடத்திற் சண்டைக்கழைத்து உக்கிரமாகப்பொருது இராசாதித்தனைக்கொன்றுவிட, அப்பொருகளத்திலேயே இவன்முடிசூடி நாயகனாகி அவ்வாகவமல்லனை யெதிர்த்து வென்று திரும்பிவந்து அரசாண்டான் என்பது விருத்தாந்தம். இவன் ஆண்டகாலம் இவ்வளவென்று துணிந்து சொல்ல வியலவில்லை.

192. இதிற்கூறப்பட்டவன் இராசேந்திரதேவன்மகனாகிய 'இராசகேசரி-இராசமகேந்திரன்' என்பவன். இவன், தகப்பன்காலத்தில் இளவரசனாயிருந்து அவன்காலத்திற்குப் பிறகு பட்டந்தரித்து கி. பி. 1063 வரை அரசாண்டான். இவன் ஆண்டகாலம் மிகசசொற்பமாயினும், மிகவும் நீதியுடன் ஆண்டதனால் 'பழையதங்கள் மனுவினுக்கு மும்மடிநான்மடியாந்சோழன்' எனப்பெற்றான் போலும்.

190 - 92. இம்மூன்றிலுங் கூறப்பட்ட மூவர் விருத்தாந்தங்களின் விரிவை, சோழவமிசசரித்திரம் 8, 9 - ம் அதிகாரங்களிலும், ஸ்ரீமான் அ. வா. வேங்கடராம ஐயர் M. A., L. T. எழுதிய சளுக்கிய விக்கிரமாதித்தன் சரித்திரம் 12-21 பக்கங்களிலும் காணலாம்.

193 - 4. குந்தளரை......வென்றகோன் அபயன்' என்னப்பட்டவன் மேற்கூறிய (தா. 191) விசய ராசேந்திரதேவன் தம்பியும் முதல் இராசேந்திரனுக்கு மூன்றாங்குமாரனுமாகிய *இராசகேசரி-வீரராசேந்திர தேவன். இவன், கூடற்சங்கமத்துப் போரிலே குந்தளரைவென்றமையும் பிறவும், சளுக்கியவிக்கிரமாதித்தன் சரித்திரம் 21 - 24பக்கங்களாலும், சோழவமிசசரித்திரம் 10 - ம் அதிகாரம், மெய்க்கீர்த்தி-2 இவற்றாலும் அறியக்கிடக்கின்றன. இவனது ஆட்சிக்காலம், கி. பி. 1063 - 1070.

வீரராசேந்திரன் 'குவலயங்காத்து அளித்தபின்னை' அதனைப்பெற்றுக்கொண்டவன், அவன் சகோதரி குமாரனும், தமையன் (விசயராசேந்திரன்)மாப்பிள்ளையும் (சளுக்கிய விக் - பக். 25 பார்க்க) இப்பரணித்தலைவனும் ஆகிய சளுக்கிய இராசேந்திரன். இவனுக்கு விசயதரன் முதலிய பலபெயருண்டு. இவன்பிறப்புவளர்ப்பை அவதாரம், க - கஎ தாழிசைகளாலறியலாம். முதுபேய் வந்து காளிக்குக்கூறியது இவன்காலத்தேயாதலின், 'அபயன்காத்து அளிக்குமாறும் என நிகழ்காலத்தாற் கூறிற்று. வீரராசேந்திரனுக்குப்பின் இவன் பட்டத்திற்குவந்ததற்குக் காரணம், தா. 236 - ன் குறிப்பிற் காண்க.

195. எழுதியொப்புற - எழுதினாற்போல.

(164) இருந்தநாளில் (165) ஒருகாலின் கரிகாலன் மறித்தபொழுது (166) முனிவந்து ஆசிபுகலா (172) மொழிந்து எழுந்தருள, முனிமொழிந்தபடியே (195) எழுதினான் என முடிக்க.

---

* இப்பட்டம் மாறிமாறி வருமுறையில், பரகேசரி-விசயராசேந்திர தேவனுக்குப்பின் அவன்மகனாகிய ராசமகேந்திரனும், தம்பியாகிய இவனும் 'இராசகேசரி' என்னும் ஒரேபட்டம் (சோழவமிச. மெய்க்கீர்த்தி - பக். 88 - 92) தரித்திருத்தலையும், வீரராசேந்திரதேவன் மெய்க்கீர்த்தியில் 'தன்னுடன் பிறந்த முன்னவர் விரதமுடித்து' (பக்-92) என்றிருத்தலையும் உற்றுநோக்குமிடத்து, இராசமகேந்திரன் தன்தந்தைக்குப்பின் அதிகநாளிருந்திலன் என்பது புலனாம்.

196. அது - அவ்விராசபாரம்பரியத்தை. உரைசெய்பவர்கள்-கற்றறிந்து சொல்லுபவர்கள். 'அது உரைசெய்பவர்கள் செய்பிழையெலாம் எமர்பொறுக்க' என்று கரிகாலன் எழுதினதனால், அதனைக்கற்று உரைசெய்யின் முதுபேய் செய்த பிழையும் (உடந்தைக்குற்றம் - தா. 144) அரசனாற் பொறுக்கப்படும் என்றெண்ணிக் கற்றுவந்தது.

197. வையக......அபயன் - பூமிதேவிக்கு நாயகனாகிய விசயதரன். ஐயனை......இருந்ததில்லை : காளி லோகமாதாவாதலின் இங்ஙனங்கூறினாள்; "ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச் சான்றோனெனக்கேட்ட தாய்" (திருக்குறள், ௬௯) என்பது ஈண்டு நோக்கற்பாலது.

198. பூதம் - உயிர். என்ன - என்றுசொல்ல.

196 - 8. சொல்லுமளவில் (தேவி) இது சொன்னபரிசு என்ன அழகு! மரபுகேட்டேற்குப் பெற்றெடுத்த அப்பொழுதும் இப்பொழுதொத்து இருந்ததில்லை ; அவனே அகிலபூதங் காப்பான் ; அலகையெலாம் மரபின் கீர்த்தி கற்றும்மின் ; என்ன எனஇயைக்க.

---

## ௯.—பேய்முறைப்பாடு.

இதில் விசயதரனது புகழைக் கேட்ட பேய்கள் 'நாங்கள் அவ்விசயதரனாற் காக்கப்படும் உயிர்களாகிப் பிறவாமல் பேய்களாய்ப்பிறந்து பசியினால் வாடுகின்றோம்' என்று தங்கள் குறைகளைக்கூறித் தேவியிடத்து முறையிடுதல் முதலியனவும், தேவி 'இனி விரைவிற் கலிங்கப்போர் நிகழும் ; அதில் நும்பசி தீரக் கூழுண்ணலாம்' என்று அவற்றைத் தேற்றினமையுங் கூறப்படும்.

200. அடைய - முற்றிலும். பாழ்த்த ஊரும் மதிலும் முறையே உயிருக்கும் உடம்பிற்கும் உவமை.

201. செற்றாலும் - (நீ) கோபித்தாலும்.

202. வேகைக்கு விறகானோம் - பசித்தீப்பற்றி யெரிதற்கு விறகு போன்றிருக்கின்றோம். ஆசை - உணவின்மீதுள்ள ஆசை.

203. கீழ் நாங்கள் - கீழாகிய நாங்கள். மேல்நாள் - முற்பிறப்பில்.

204. பசிக்கு அலந்து - பசியால்வருந்தி.

205. இரங்கான் - முற்றெச்சம்.

206. வழுநாறுதலும் முடைநாறுதலும் பேய்களுக்கு நற்சகுனம். வழுநாறுதல் - வேர்வைநீர் போன்று ஒருவகைநீர் தோன்றுதல்; 'கழுதுக்கு மூக்கிலே வேர்க்கிறாற்போலே' என்னும் பழமொழி ஈண்டு நோக்கற்பாலது.

207. அப்பேய் - அம்முதுபேய்.

208. நிமித்தம் - சகுனம்; இவை மேல் 209-211-ல் கூறப்படும்.

211. பூவியலும் - பூவினாலாகிய.

212. உரைமுடித்தது - சொல்லிற்று. அனை = அன்னை; விளி. வினவுரைதனக்கு - (பேய்கள்)வினவியதற்கு.

213. உங்கள்குறி : தா. 206-ல் கூறியவை.

214. நிணம் - பகைவரைக்குத்தி யெடுத்த நிணம். நிற்பன - நிற்கின்றன வாயின; இதுகனவு. அதற்கு - அக்கனவிற்கு உரியபயன்.

(198) என்ன (207) பலபடிகள் (199 - 206) தேவி ! கெட்டேம்...சாதும் (207) என்று இரைத்து உரைசெய் போதத்து, அப்பேய் (208) கைதொழுது இறைஞ்சி, கேண்மோ (209 - 11) மதம் புல நம்......நாறவரும் (212) எனு உரைமுமத்தது. வினுவுரைதனக்கு அணங்கு (213) உமக்கழகே; சொல்லுவாம்; (214) உரைத்தது; அவ்வுரைப்படிகிடைக்கும் பா (212) எதிர்விளம்பினள் எனமுடிக்க.

215. வலியுற்றன - வலியுற்றனவாகி.

216. இளைத்தன இளைத்தன - இளைத்த இளைப்புக்களை. விலாஅலக்கு - விலாவெலும்பு. பசிஅயர்த்தன - பசியைமறந்தன.

217. இரைத்து - இரைந்து. கணங்கள் - பேய்கள். கூழ் - வயிறு. போதுங்கொல் என் பதன் பின் 'என' என்று ஒருசொல் வருவிக்க.

218. புடைப் படலமிடல் - பக்கத்திற் கூடுதல். ஒட்டிரட்டி - ஒன்றுக் கிரண்டு பங்கு கொண்டது.

---

## ௧0.—அவதாரம்.

இதில், பேய்களை அங்ஙனந்தேற்றிய தேவி, அவற்றைப்பார்த்து, அப்போரை நிகழ்த்துவிப்பவனாகிய விசயதரனது பிறப்பு வளர்ப்பு முதலியவற்றைச் சொல்லுதலும், அதனிடையே போர்க்களத்தினின்றும் ஓடிவந்த ஒரு பேய் உவகைச்செய்தி கூறுதல் முதலியனவும் சொல்லப்படுகின்றன.

219. வென்று - பகைவர்களைவென்று. விளம்ப - யான் சொல்ல.

(215 - 6) (தேவி விளம்பக்கேட்ட பேய்கள்) நடித்தன............பசி அயர்த்தன. (217) (அங்ஙனமாக) ஆடியிரைத்தெழுகணங்கள், 'அணங்கே ! போதுங்கொல்' என (218) (தேவி) நீர் படலமிடவேண்டா ; கலிங்கப்போர் ஒட்டிரட்டி ; (எதனுலென்றால்) (219) அவனே விசயதரன் எனவுதித்தான் ; (அவ்வவதாரத்தை) விளம்பக் கேண்மின் எனமுடிக்க. மேலும் தேவிகூற்று.

221. இருள் - கலியிருள் ; (தா. 248 பார்க்க.) இராசராசன் - கங்கைகொண்டசோழன் என்னும் முதல் இராசேந்திரன். அருள் திரு - அவன் மகளாகிய அம்மங்காதேவி. இவளுக்கு நாயகன் சளுக்கியராசராசன் என்பவன். சளுக்கியவமிசத்தைச் சந்திரகுலம் என்று சொல்லுவதற்கேற்ப, (இத்தாழிசையிற் காணப்படும் பாடபேதம் பலவற்றுள்) "இருள்முழுதுமகற்றும்விது குலத்தோன்றேவி யிகல்விளங்கு தபனகுலத் திராசராசன், அருள்திருவின் றிருவயிற்றில் வந்துதோன்றி ஆலிலையின வதரித்தானவனே மீள." என்னுமொருபாடமும், காணப்படுகின்றது. இப்பாடத்தில் 'விதுகுலத்தோன்றேவி' என் றிருத்தலைக் கொண்டு விசயதரனுக்குத் தகப்பன் ஒருபாண்டியன் என்பாருமுளர். அது பொருந்தாது. இவ்விருத்தாந்தங்களைச் சளுக்கிய விக்கிரமாதித்தன் சரித்திரம் 25 - ம் பக்கத்திலும், சோழவமிசசரித்திரம் 11 - ம் அதிகாரத்திலும் பரக்கக் காணலாம்.

224. அவனிபர்க்குப் புரந்தரன் - இராசேந்திரன். அடைவேநோக்கி - வரிசையாக இருத்தலைப்பார்த்து. 'என்று' என்பதை 'என்ன' எனமாற்றி யுரைக்க. என்ன - என்றுசொல்ல. அவனிபர்க்குப்புரந்தரனும் அடையாளங் களைக் கண்டதனாலே, பாட்டியாகிய கங்கைகொண்ட சோழன்றேவி இவனுக்கு 'இராசேந்திரன்' என்று பெயரிட்டனள் போலும். இவன் பட்டத்திற்கு வந்தகாலத்திலுங்கூட இப்பெயரால் அழைக்கப்பெற்றிருக்கிறான். அப்பால் இவனுக்குக் 'குலோத்துங்கன்' 'விசயதரன்' முதலிய பெயர்கள் வழங்க லாயின. கங்கைகொண்ட சோழனுக்கு மூன்று குமாரர்கள் (தா. 190, 191, 193.) இருந்தும் அவர்களுக்குப்பின் சந்ததியின்மையால் மூன்றாங்குமாரனாகிய * வீரராசேந்திரன் தன் காலத்திலேயே இவனை இளவரசில் வைத்தனன்; (தா. 236.) அதன்மேல் இவன் (பாட்டியாருத்தேசித்தபடியே) இரவிகுலம் பாரிக்கத்தக்கவனானான். இவன், பிதாவுக்குரிய சந்திரகுலத்தையும் தாய்க்குரிய சூரியகுலத்தையும் பாரித்ததனால்' 'உபயகுலோத்தமன்' (தா. 2) 'உபயகுலமும் விடாவொழுங்குடை யொருவன் (தா. 440) எனப் பிரசித்திபெற்றான். இவற் றையெல்லாங்கொண்டு ஆராய்ந்தால், சில பிரதிகளில் இத்தாழிசையின் பின்னே காணப்படும் † 'தான் வேண்டிக் கோடலுமே' என்னுந்தாழிசையும், அதற்கேற்ப இத்தாழிசையின் ஈற்றிற்காணப்படும் 'பாரிக்கத் தருகவென்றே' என்னும் பாடமும் கிருத்திரிமமென்பது புலனாம்.

225 - 35. விசயதரனது வளர்ச்சியும் வித்தியாப்பியாசமும்.

226. தெளிவெய்த - பார்த்தவர் தெளியும் வண்ணம்.

231. விந்தத்துறைவாள் - துர்க்கை: வீரத்திற்கு அதிதேவதை.

233. தரைவளாகம் - பூமியாகிய இடம். இருள் - கலியிருள்.

234. தன்னுடைய- விசயதரனுடையவை. நமக்கு-கைகளுக்கு. தனக்கு - விசயதரன் பொருட்டு.

235. இவன் கல்வியின் பெருமை முன்னே 161 - ம் தாழிசையிலுங் கூறப்பெற்றிருக்கிறது. இவனுக்குப் 'பண்டிதசோழன்' என்னும் பெயரும் உண்டு. (தா. 519.)

236. அபயன் - வீரராசேந்திரசோழன். அவனிக்கு - சோழராச்சியத் திற்கு. வீரராசேந்திரன் இவனை இளவரசில் வைத்தான் என்றதனால், தா.

---

* வீரராசேந்திரனுக்கு 'அதிராசேந்திரதேவன்' என்றொருமகன் இருந்தா னென்பர். இவன் நேரானமகனாயிருந்திருப்பின், குலோத்துங்கன் இளவரசனாக வும் வீரராசேந்திரன் காலத்திலேயே திக்குவிசயம் செய்யப்புறப்படவும் (தா. 236) கூடாவாம். வீரராசேந்திரனுக்குப்பின் (குலோத்துங்கன் சோழநாட்டில் இன்மையால்) கலகம் விளைந்தமையும், குலோத்துங்கன் சக்கரக்கோட்டத்தி லிருந்து திரும்பிவந்து சோழராச்சியத்தை ஒப்புக்கொண்டவுடன் அக்கலகம் அடங்கினமையும் (தா. 244 - 9.) பின்னர் அறியக்கிடக்கின்றன. இவற்றைக் கொண்டு ஊகிக்குமிடத்து அதிராசேந்திரன் பட்டத்திற்குரிய மகன் அல்லன் என்பது புலனாம்.

† 'தான்வேண்டிக் கோடலுமே தன்னுடைய தேவியரிற் றலைமைத் தேவி, தேன்வேண்டு மொழிச்செல்வி திருமட்குத் திருமகனைக் கொடுத்தபின்னே.'

224-ன் கீழ்க்குறிப்பிற்கண்ட அதிராசேந்திரதேவன் பட்டத்திற்குரியனல்லன் என்பது பெறப்படுகின்றது. விசயதரன் இளவரசுப்பட்டந் தரித்தது, கி - பி. 1063 - ல் என்பர்.

237- 43. இளவரசாயிருந்தகாலத்து விசயதரன்செய்த போரும் வெற்றியும். (இப்போர் கி. பி. 1068 - 9-ல் நடந்திருக்க வேண்டும்.)

237. விசயதரனுக்கு இளஞ்சிங்கம் உபமானம்.

238. எறித்த இருள்போல் - முன்பு பரந்திருந்த இருள்சிதைதல்போல.

239. புரம் எரிமடுத்தபொழுது அதுஇது என - சிவபிரான் திரிபுரத்தை யெரித்தகாலத்தே உண்டான அந்நெருப்பைப்போன்றது இந்நெருப்பு என்று கண்டவர் கூறும்படி. திகிரி - ஆஞ்ஞாசக்கரம். வயிராகரம் - ஓரூர். இது இப்பொழுது 'வயிராகர்' என்னும்பெயருடன் மத்தியமாகாணத்திலிருக்கிறது. முற்காலத்தே இவ்வூரில் வயிரச்சுரங்கங்கள் இருந்தனவென்பர். கடவரை - யானை.

240. மெத்துதல்-மோதுதல். குளம் சிதையும்படி வந்து மோதிய கடல். குதிரைத்தளம் - குதிரைப்படை.

241. சக்கரக்கோட்டம் நமன் கோட்டம் பட்டது - சக்கரக்கோட்டத்துள்ளோர் யமபுரத்தை யடைந்தனர்.

(239) வயிராகரம் எரிமடுத்து, கடலி, (240) வெட்டி, குவித்து (241) புருவத்தனுக்கோட்ட, சக்கரக்கோட்டம் நமன்கோட்டம்பட்டது என்க.

242. பாரி பெர்கம் - வேட்டகத்துச் சீர்.

243. விருதராசபயங்கரன்: தா. 134.

244. அபயன் - விசயதரன். மன்னர் வீரன் - வீரராசேந்திரசோழன். விசும்பின் மேற்செல - சுவர்க்கம் புக. தென்றிசைக்கு - சோழநாட்டுக்கு. செப்புவாம் என்றது காளிதேவிகூற்று. பேய்களைப்பார்த்துப் பின்னுஞ் சொல்லுகிறாள்.

245 - 9. தென்றிசைக்கு நேர்ந்த *சீர்கேடும் அதனையறிந்த விசயதரன் வடதிசையினின்று வந்து சீர் செய்தமையும்.

250. செய்து - செய்ய எனத் திரிக்க. திருவபிடேகஞ்செய்ய - மகுடாபிஷேகஞ் செய்துகொள்ள.

251 - 64. விசயதரனது ஆட்சியின் நேர்மை.

251. அறுகெடுத்திடல் ?

252. நிருபமசரிதன் - ஒழுக்கமுடையாருட சிறந்தவன்.

---

* இராசகேசரி - வீரராசேந்திரன் காலஞ்சென்ற சேதிகேட்டு வடக்கே சென்றிருந்த விசயதரன் திரும்பிவருமுன்னே வீரராசேந்திரனுக்கு மகன் என்று சொல்லப்படுகின்ற பரகேசரி - அதிராசேந்திரதேவன் பட்டத்திற்கு வந்து ஆளத்தொடங்க அச்சமயம் இக்குழப்பமுண்டாகி அவன் கொல்லப்பட்டான்; (சாஸநக்கியவிக். பக். 32.) உடனே (கி.பி. 1070-ல்) விசயதரன் 'இராசகேசரி - இராசேந்திரசோழன்' என்னும் பெயருடன் முடிசூடிக்கொண்டு குழப்பத்தை அடக்கினன்.

253. விழவெடுக்கக் கொடியெடுத்தன - திருவிழாநடத்தத் துவசாரோகணஞ் செய்யப்பட்டன.

258. அரணிய மந்திர அனல் - தீக்கடைகோலினின்றும் உண்டாகிய யாகாக்கினி.

260. கரிகால்வளவன் பெருமை இவனுக்கேற்றிக் கூறப்பட்டது.

261. தளை - செய்யுளுறுப்பு, விலங்கு. ஒருபதங்கள்-ஒருமையிற் பன்மை மயக்கம்.

265. காலால் - வாய்க்கால்களினாலே. பரிவேட்டை - குதிரைமேலேறிச் செய்யும் வேட்டை.

266 - 87. விசயதரன் கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து ஆடம்பரத்துடன் புறப்பட்டுப் பாலாற்றங்கரையிற் பரிவேட்டையாடுவதற்காகச் சிதம்பரம் திருவதிகை இவற்றின்வழியே சென்று காஞ்சீபுரம் அடைதல்.

267. அழகினை - விசயதரனது அழகினைலே.

268. அனகதானம் - பாபமில்லாத தானம். கரட தான மத வாரணம் - மதம்பாய்சவடுகளாகிய இடங்களினின்றும் உண்டாகியமதநீரையுடையயானை. கவிவாணர்,வாரணமும் பெற என இயைக்க.

269. மிசைகொண்டு - ஏறி. களிற்றின்மிசைகொண்டு என்க. இவ்வெச்சத்தை (280) முகம் வைத்தருளி என்பதனோடு முடிக்க.

270. வந்து - வந்ததனால். பலவிதங்களொடு - பலவகையாக.

271. சீர்செய மிருந்து - விசயதரனுக்குச் சிறப்புச் செய்யும் பொருட்டு வந்து கூடுதலால் உண்டாகி. இன்ன - இத்தன்மையுடையவை. இடைவிடாதவொலியும், வழாதவொலியுமாகிய இன்ன, எங்கும் மிக என இயைக்க.

272. சோழகுலசேகரன் - விசயதரன். இசையின்.........இசைமாது - இசையினது மதுரவெள்ளமென்னும்படி பாடவல்ல ஏழிசைவல்லபி ; இவள் இளையாள். அரிது எனு-விசயதரனைப் பிரிந்திருத்தல் அரிதென்று. ஏழு பாருலகு- சத்தத்துவீபங்கள். உரியான் - உரியவனாகியவிசயதரனது. இங்கே 'சோழகுல சேகரன்வகுத்தஇசை' 'ஏழிசைவளர்க்கவுரியான்' என்றதனாலும், மேல் 311-ம் தாழிசையில் 'தான் வகுத்தன தன்னெதிர் பாடி' என்பதனாலும் இவன் இசை நூல்வல்லவன் என்பதும், தானே இசைநூல்செய்தனன் என்பதும் பெறப்படுகின்றன.

273. புடை சூழ்வர என மாற்றுக. தியாகவல்லி நிறை செலவி - தியாக வல்லியாகிய நிறைந்த செல்வமுடையவள். இவள் *பட்டத்துத்தேவியாதலின் மற்றைத் தேசத்தரசரின் தேவியர் தன்னைச் சூழ்ந்துவரத் தான் ஒருபிடியின் மீதேறி அரசனுடன் சென்றனள்.

276. தொடங்கி - கட்டுண்டு.

277. அடைய - ஆகாயவெளிமுழுதும்.

278. இம்முறை - இவ்வவதாரத்தில்; (தா. 219.)

---

* இவளுக்குமுன், அம்மான் இராசேந்திரதேவன் மகளாகிய 'மதுராந்தகி' என்பவள் பட்டத்துத்தேவியாயிருந்தாள். (சளுக்கியவ்க். பக். 25 பார்க்க.)

279. கால் - வாய்க்கால்களும் பாதங்களும். சிவிகைக்கூட்டம் யமுனை வெள்ளத்தையும் கவிகைக்கூட்டம் கங்கைவெள்ளத்தையும் ஒத்துத் தோன்ற என்பது கருத்து.

280. கொடிகள் : தா. 18, 88 பார்க்க.

281. நகைமணிக் கொடித்தொகை - மகளிர்கூட்டம்.

282 - 3. கதலிமுதலியன மகளிர்உறுப்புக்களையும் நடையையும் இன் சொல்லையுங் குறித்து நின்றன. என - என்று கண்டோர் கூறும்படி.

284. மிடைகின்ற - நெருங்குகின்றவை : வினையாலணையும் பெயர்.

286. வடதிக்கில் முகம்வைத்தருளி-வடதிசை நோக்கிப் புறப்பட்டு. மன் றில் நடமாடி-சிதம்பர நடராசமூர்த்தி; இம்மூர்த்தி சோழர்க்குக் குலதெய்வம்; இதனைப் "பார்த்திபர்தந், தொல்லைத் திருமரபுக் கெல்லாந் தொழுகுலமாந், தில் லைத் திருநடனஞ் சிந்தித்து" (இராச - உலா.) என்பதனாலறிக. விட்டருளி- தங்கி.

(287) அபயன் (269) களிற்றின்மிசைகொண்டு(286) முகம்வைத்தருளி அருள்கொண்டு விடைகொண்டு, விட்டருளி (287) விளையாடி, நண்ணினன் என முடிக்க.

தா. 219முதல் 287வரை தேவிகூற்று.

288. இதமென்மொழி - இதத்தைத்தருகின்ற மெல்லிய மொழிகளா லாகிய விருத்தாந்தம். இறைவி சொல்லுவதன் முன்னம் - தேவிசொல்லிமுடி க்கு முன்னே. இகல் - கலிங்கப்போர். ஓடிவர - ஓடிவந்து ; இதனை, (294) இ சைத்தலும் என்பதனோடு இயைக்க. இங்கே தேவி சொல்லிக்கொண்டிருக்கையில் அங்கே கலிங்கப்போர் நடந்துவிட்டதென்பது ஓடிவந்த பேய் சொல்லுதலால் (289-93) விளங்கும். ஈண்டுத் தேவிவிட்ட வார்த்தையைப் பின்னே (301- ம் தாழிசையிலிருந்து) இகல்கண்டு வந்த பேய் எடுத்துக்கூறும்.

294. என்ற - என்று (இகல்கண்டபேய்) சொல்லிய. தம்செவிக்கு-தேவி வார்த்தையைக் கேட்டுக்கொண்டிருந்த பேய்களின் காதில். மெய்பருத்துச் சிரித்து என்க. மேலே மூன்றுதாழிசைகள் பேய்களின் மகிழ்ச்சியை விளக்கும்.

298. அலந்தலை - மயக்கம். அடுபறந்தலை - அட்ட (கொலைமிகுந்த)போர்க் களம். உரைத்தனள் - (தேவி) சொன்னாள்.

---

## ககூ.—காளிக்குக் கூளி கூறியது.

இதில் கலிங்கப்போரைச் சொல்லத்தொடங்கிய பேய் விசயதரன் வர லாற்றிற் காளி விட்டவிடமுதலாக எடுத்துக்கொண்டு, காஞ்சியில் அவன் வீற்றி ருந்த திருவோலக்கச் சிறப்பையும்,போர்க்குக் காரணத்தையும், படையெழுச்சி யையும், போரையும் விரிவாகக்கூறுதல் சொல்லப்படுகின்றது.

299. "ஆனையாயிரம் அமரிடைவென்ற, மானவனுக்கு வகுப்பதுபரணி" (இலக்கணவிளக்கம்.சூ. அஈஅ.) என்பதனுக்கு இஃதிலக்கியமாதல் காண்க.

302 - 23. விசயதரனது திருவோலக்கச் சிறப்பு.

306. உறைந்தவன் - உறையப்பெற்றவன். மணிப்பணிப்புயத்து - இரத்தினுபரணங்களையணிந்த தோள்களில். நாயகனும் உறைந்தவனு மாகிய விசயதரனுடைய புயத்தே என்க.

307. தேவியர் - தியாகவல்லியும் ஏழிசைவல்லபியும்.

308. நிருத்தாதி நாடகம் எனமாற்றி, நிருத்தம், தாண்டவம், நாட்டியம் என்னும் மூவகை ஆடல் என்க. நால்வகைப் பெரும்பண்: பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன.

310. கண்டனம் - நாங்கள் கற்றறிந்திருக்கிறோம்.

311. கண்டனன் கேட்க - கண்டு அவர்களை வினவ.

312. வெந்நிடுமுன் இடு - புறங்கொடுக்கு முன்னே யிட்ட.

313. மன்னராதிபன் - விசயதரன். என்ன - என்று கண்டோர் சொல்லும்படி.

(313) மன்னராதிபன் (302) மண்டபந்தன்னிலே (313) இருக்க எனக் கூட்டுக.

314. வண்டைமன்னுகிய கருணுகரத் தொண்டைமான். இவனே விசயதரனுக்கு முதல் மந்திரி: (தா. 447.) மந்திர பாரகர் - மந்திராலோசனையில் தேர்ந்தவர்.

315. தரு - வெளியிலுள்ளவர்களை யழைத்து வருகின்ற. ஓலை - வெளியிலுள்ளவர் அரசனுக் கனுப்புவதும், அரசன் வெளியிலுள்ளவர்க்கு அனுப்புவதுமாகிய ஓலை. செய்த நோக்கில் - அவர்கள் வரலாம் என்றபொருள் படும்படி பார்த்த பார்வையால.

316 - 9. வந்தெய்திய அரசர்கள்.

320. கரம் - கப்பம் ; இடச்சொன்ன கப்பங்கள்.

321 - 3. அரசர் திறையிடும் விவரம்.

(313) மன்னராதிபன் இருக்க, (314) சூழியிருக்க, (315) என்றலும், செய்த நோக்கில் (316 - 19) தென்னவர் முதலிய அரசர்கள் (315) வந்தெய்தி நெருக்க, (அவர்களுள்) (323) மான அரசர் பலர் (320) அடிசூடுகரங்களொடு (323) தனித்தனி உரைப்பர் என்க.

324. உரைசெயும் - இடச்சொன்ன. ஒழிய - இடாமல். ஒழிய நின்ற அரசரும் எனக் கூட்டுக.

325. கடவ - இடக்கடவனவாகிய. எனலும் - என்று பக்கத்திலிருந்தவர் சொன்னமாத்திரத்தில.

326. முறுவல் - கோபச்சிரிப்பு.

327. கலிங்கம் மலையானுடைய தென்பதை 364, 453-ம் தாழிசைகளாலும் அறியலாம்.

328. எழுகலிங்கம் - ஏழுபிரிவினையுடைய கலிங்கதேசம்: (தா. 382, 434,436, 440, 441, 457.) 'அணைமின்' 'கொணர்மின்' எனப் பன்மையிற் கூறக் கேட்டானுதலின், தொண்டைமான் (இதற்குப் பலர் வேண்டாம்) சக்கரவர்த்தி கட்டளையின் பலத்தைக்கொண்டு நான் ஒருவன் அழித்து விடுவேன் என்றனன்.

(323) பலவரசர் தனித்தனி உரைப்பர்; (அவற்றைக்கேட்டு)(324) வைத்தருளி,என்றருளுபொழுதில், (325) திறை கொடு வருகிலன் எனலும், (327) கொணர்மின் எனலும், (328) வண்டைநகரரசன், எறிவென் என்று தொழுதனன்; (தொழுது) (329)எனக்கு விடைஎன,புலியுயர்த்தவன் விடைகொடுக்க எனக் கூட்டுக. 'அப்பொழுதிலே' என்பது (345) 'எழுந்ததுசேனை' என்பதனோடியையும்.

330 - 36. பொதுவாகப் படை திரளுதல்.

337 - 40. முறையே யானை, குதிரை, தேர், காலாள் என்னும் சதுரங்க சைனியங்களின் வருணனை.

341 - 4. இவையும் சதுரங்க சைனிய வருணனை; இவற்றில் காலாள், குதிரை, யானை, தேர் என்னும் முறையிற் கூறப்படுகின்றன.

345 - 9. படைகளின் புறப்பாடு.

350. அடையக் கண்ணுகிய சோழன் - முற்றிலுங் கண்போன்ற *விக்கிரம சோழன். இவன் விசயதரன் மகன்; சோணாட்டுப் படைத்தலைவன். நிசக் கரமாங் கருணாகரன் - அப்படைக்கும் படைத்தலைவனுக்கும் உண்மையான கைபோலுதவத்தக்க கருணாகரத்தொண்டைமான். அவ்விருவரும் வாரணமேற்கொள என்க.

351. இது கருணாகரனது சிறப்புக்களை யெடுத்துக் கூறுகின்றது. சுரபிதுங்க வெள்விடை-காமதேனுவின் வழியில் வந்த பரிசுத்தமான வெள்ளிய இடபம். விடைக்கொடி பல்லவர்க்குரியது. தொண்டையர்க்கரசும், விடையுயர்த்தகோனும், வண்டையர்க்கரசும்,பல்லவர்க்கரசும் ஆகிய கருணாகரன் என்க.

352. இது விக்கிரமனது சிறப்புக் கூறுகின்றது. வாணர்கோ...சூடிகொண்டு ? முடிகொண்டசோழன்: இது விக்கிரமனுக்குள்ள பெயர்களுள் ஒன்று போலும்.

353. கருணாகரன், விக்கிரமனுடன் போர்க்குச் செல்லுதல்.

354 - 6. இவற்றில், படைகள் வடக்கே செல்லும்பொழுது கடந்து சென்ற நதிகளின் பெயர் முறையே கூறப்படுகின்றன. அந்நதிகளுள் ஒன்றாக, இப்போது காஞ்சிக்குத் தெற்கே ஓடும் பாலாறும் சேர்க்கப்பட்டிருத்தலின், அக்காலத்து இது காஞ்சிக்கு †வடக்கே ஓடிற்றெனக் கொள்ள வேண்டியிருக்கின்றது.

357. எரிகொளுவுதலும் சூறைகொள்ளுதலும் பகைவரைப்போருக்கிழுத்தற்குரிய உபாயங்கள்.

358. ஒருபுறமாக-வடக்குப்பக்கத்திலிருக்க; எனவே,கோதமைக்கு வடக்கேயும் கங்கைக்குத் தெற்கேயும் உள்ளது கலிங்கதேசம் என்பது பெறப்படுகின்றது.

---

* இவன் கலிங்கப்போர்க்குச் சென்றதும் பிறவும் சோழவமிசசரித்திரத்திற் காண்க.

† வடஆற்காடுஜில்லா, குடியாத்தம்தாலூகா, உதயேந்திரம் செப்புப்பட்டயத்தைப் பிரசுரித்த 'லெபானு' (Lefanu) என்னும் பிரஞ்சுக்காரரும் ஷை பட்டயத்தின் வாசகத்தைக்கொண்டு பாலாறு நிலைபெயர்ந்திருக்க வேண்டுமென்று அபிப்பிராயப்படுகிறார். (S. I. I. Vol. II: pp. 361 - 374.)

359-61. ஊர்கள் அழிவதைக்கண்ட குடிகள் போய்த் தம் அரசன்காலில் விழுந்து முறையிடுதல்.

362. அந்தரம் - துணையாவாரின்மை; பலக்கேடு. ஒன்று - ஒருசிறிதும். அனந்தபன்மன் - அரசன்பெயர்; சிலாசாசனங்களில் இவன்பெயர் 'அனந்த வர்ம சோழகங்கன்' எனக் காணப்படுகின்றது.

363 - 4. அனந்தபன்மனது வீரவார்த்தை.

365. மானவன் - மானமுடையவனாகிய அனந்தபன்மன்.

366 - 76. கலிங்கமந்திரி தன்னரசனுக்கு விசயதரனது படையின்வெற்றித்திறங்களை யெடுத்துக் கூறுதல்.

368. மீனவர் ஐவர் என்பதனை "ஆர்புனை தெரியல் ஒன்பதுமன்னர்" (சிலப். உஅ: கககூ) என்பது போலக் கொள்க.

372. தளத்தொடும் பொரு தண்டு - அணிவகுப்புக்களோடுகூடிப் பொருகின்ற சேனை.

377 - 80. அனந்தபன்மன், தனக்குப் புத்திகூறிய மந்திரியைக் கோபித்துச் சதுரங்கசைனியங்களைப் போர்க்கனுப்பக் கட்டளையிடுதல்.

381 - 2. கலிங்கதேசத்துப் போர்வீரர்களின் உற்சாகம்.

383 - 7. போர்க்குப் புறப்படும் கலிங்கப்படைகளின் வருணனை.

388 - 90. கலிங்கப்படை கருணாகரன்படைக்கு எதிரிற்சென்று சேர்தல்.

391 - 429. இருதிறப்படையும் நெருங்கிப் பொருதல். இவ்விடம் சற்றுக் கடின பாகமாயினும் விரிவஞ்சி விளக்காது விடப்பட்டது.

430 - 33. இருதிறப்படையும் சமமாகப் பொருதல் கண்ட கருணாகரன் தன்யானையைச் செலுத்திச் சேனைக்கு முன்னின்று உக்கிரமாகப் பொருது அழித்தல்.

434 - 5. அனந்தபன்மன் ஓடியொளித்தல். அவன் உரை செய்த ஆண்மை, 377 - 80 தாழிசைகளிற் காண்க.

436 - 9. சாகாது எஞ்சிய கலிங்கவீரரும் ஓடியொளித்தல்.

436. அலதிகுலதி - மிகவும் பதறுதல்?

437. வழிதல் - மிகவும் துக்கத்துடன் சோர்ந்து நிற்றல்; 'அழுதுவழிகிறான்' என்னும் வழக்கச்சொல்லுங் காண்க.

438. ஓடப் பயந்தவர் சிலர், தங்களுடலின் நிழலையே மாயாரூபத்தோடு வந்த சோழவீரரென் றெண்ணி வணங்கினார்கள்.

439. உபகாரம் செய்யும் - உதவிசெய்தது; முதுகுகொடுத் தோடினதனால் உயிர்பிழைத்தோம் என்பது கருத்து.

440. உபயகுலமும்......ஒருவன் - விசயதரன்; கருணாகரனது வெற்றி அவன் தலைவன்மேலேற்றிக் கூறப்பட்டது.

441. ஒருகலிங்கம் - ஒருஆடை. இடையிலிருந்த ஆடை விழுந்தது தெரியாமல் ஓடியொளித்தபின்னர், அங்கங்கிருந்த சிலர் துணிகளைப் பலர் கிழித்துக் கட்டிக்கொண்டனர் என்பது கருத்து.

442 - 5. விசயதரன், 'மதமலைகள் கொண்டணைமின்' (தா. 327) என்ற தற்கேற்ப அவன்வீரர் முதலில் யானைகளைக் கைப்பற்றினார்கள்.

447. 'அவனையுங்கொணர்மின்' (தா. 327) என்றது ஈண்டு நோக்கத்தக்கது.

448. ஒற்றர்க ளொலிகடற்படை - ஒற்றர்களாகிய பெரும்படை. புடை தடவுதல் - சுற்றித் தேடுதல். இலைப்புரை தடவுதல் - சிறிதிடமும் விடாது தேடுதல்; "ஈட்டமும் வேறுமாகி யிலைப்புரை கிளைத்திட்டேமே" சீவகசிந்தாமணி. 1741.

449. அவ்வாறு தேடிய படைவீரர் தம்முட் கூடிப்பேசிக்கொண்டமை. சுவடு பெற்றிலம் அவனை - அவனைக்குறித்த அடையாளம் புலப்படவில்லை. அது குணிப்பரிது - அப்படையினளவு கணக்கிட்டுச் சொல்லுதலியலாது. எனலும் - எனச் சிலர் சொன்னமாத்திரத்தில்.

450. காணவரிது - தமக்கு அரணாகச் செய்துகொள்ள முடியாது. நாளும் - பகல்முழுதும். சுட்டுக்கள் கலிங்கர் பற்றக்கூடிய இடங்களைக்குறித்து நின்றன. வளைந்து - சுற்றித்தேடி. சென்று-குறிப்பிட்ட மலைக்குச்சென்று.

452. படைத்தது யாதோ - படைத்ததற்குக் காரணமென்னவோ. என்றும் - எந்நாளும். செய்து - செய்தலால். என்னும் - என்று சொல்லப்படுகின்ற. என்ன - என்று கண்டோர் சொல்லும்படி.

453. வரைக் கலிங்கந்தமைச் சேர - மலைகளையுடைய ஏழுகலிங்கத்தையும் சேரும்படி. அரைக்கலிங்கம் - இடுப்புவத்திரம்.

(448) கடற்படைபோய், புடை தடவி, இலைப்புரை தடவி, (449) எனலும், (450) காணவரி தென்று, வளைந்து, சென்று, (451) வேலிகோலி, காத்துநின்று, (452) அறுக்கும் போழ்தில் (453) பிழைத்தாரும் அநேகர்என்க.

454. அவிதாவிடல் - அபயமிடுதல்; "எந்தாயென் றவிதாவிடு நம்மவரவரே" திருவாசகம். திருச்சதகம்: ச.

455. சாக்கியர் - பௌத்தரில் ஒருசாரார்; செவ்வாடையை உடம்புமுழுதும் போர்த்துக்கொள்ளுதலும், தலையை முண்டனம்பண்ணிக்கொள்ளுதலும் இவர்க்கு வழக்கம்; இதனை ஸ்ரீசம்பந்த சுவாமிகள் கீழைத் திருக்காட்டுப்பள்ளித் தேவாரத்திலே "துவராடை மெய்போர்த் துச்சி கொளாமையுண்டேயுரைக்குங், குண்டர்கள்" என் றருளிச்செய்ததனாலும் அறியலாம். (தா. 554 பார்க்க.) அப்பிரமண்ணிய மிடுதல் - அபயமிடுதல்.

கூளி (300) 'சிறிது கேட்டருள்' என்று தொடங்கி (458) தொண்டைமான் அபயனடி சூடினான் என்பதுகாறுங் கூறி மேலுங் கூறுகின்றது.

459. தேவாசுர......ஓவாவுரை: பதினெட்டாண்டில் நடந்த தேவாசுரயுத்தமும், பதினெட்டு மாதத்தில் நடந்த இராமராவணயுத்தமும் பதினெட்டு நாளில் நடந்த பாண்டவதுரியோதன யுத்தமும் உள்ளன என்று உலகத்தார் இதுவரை ஓயாமற் சொல்லும் சொல். உரை ஓயும்படி உளது என்பதற்கு, அப்போர் மூன்றினும் சிறந்தது இது என்பது கருத்து. சிலப்பதிகாரம், நீர்ப்படைக்காதை: கூ - கங. அடிகளும், அவற்றின் அரும்பதவுரையும், மகாமகோபாத்தியாய வே. சாமிநாதையரவர்கள் எழுதிய அடிக்குறிப்பும் ஈண்டு நோக்கி இன்புறற்பாலன.

## கஉ.—களங்காட்டியது.

இதில் கலிங்கப்போரை விரித்துக் கூளி கூறக்கேட்ட காளி, பேய்க்கணங்களுடன் புறப்பட்டுப் போர்க்களத்திற்குச் சென்று அதனைக்கண்டு அதிசயத்து அவ்வதிசயத்தைக் கணங்களுக்குக் காட்டியது கூறப்படுகின்றது.

460. காலக்களம் - யமகளம்; "செயிர்த்தொழின் முதியோன் செய்தொழில் பெருக,......ஒருபக லெல்லை யுயிர்த்தொகை யுண்ட, செங்குட்டுவன்" (சிலப். உ௭: ௭ - கரு) என்றார் இளங்கோவடிகளும். என - என்று கூளி கூறி முடிக்க. ஆலக்களமுடையான்மகிழ் அமுது - விடம்பொருந்திய கழுத்தையுடைய சிவபெருமான் மகிழும்படியான அமுதம்போன்றவள். அமுதாகிய (461) அந்நேரிழை என்க.

(461) நேரிழை (460) அக்களமணுகி, (461) அதிசயமுற்று மொழியும் எனக் கூட்டியுரைக்க.

462 - 89. இவ்விருபத்தெட்டுத் தாழிசைகளும் தேவிகூற்று. இவற்றில், இறந்த வீரர்களின் பராக்கிரம சாகசச் செயல்களும் பிறவும் வெகு அழகாக வருணிக்கப்படுகின்றன. இவற்றுள் ஆங்காங்குக் காணப்படும் உபமான உபமேயங்கள் அறிஞர் ஆராய்ந்தின்புறத்தக்கவை. அவையனைத்தும் விரிவஞ்சி எடுத்துக் காட்டாமல் விடப்பட்டன.

---

## கரு.—கூழடுதல்.

இதில், அவ்வாறு களங்காட்டிய தேவி கணங்களைப்பார்த்து (490) 'களமடையக்காட்டுதற்கு முடிவதன்று; கூழடும்' என்றுகூற அதனைக்கேட்ட கணங்கள் தேவியைக் கும்பிட்டு ஒன்றையொன்று கூவியழைத்துத் தம்முட் பலபடியாகப் பேசிக்கொண்டு காரியங்களைச்செய்து கூழ்அட்டுப் படைத்து உண்டு களித்துப் பாடியாடி விசயதரனை வாழ்த்தினமை கூறப்படும்.

491. மோடி, நிணமாலை, கலதி, கூரெயிறி, நீலி, மாடி, குதிர்வயிறி என்பன பேய்களின் பெயர்கள்.

495. கருது இக்கட்டு மாட்டாதீர் - நினைத்து வருந்தத்தக்க துன்பத்தில் அகப்பட்டுக்கொள்ளாமல்.

497 - 501. சூடகம், பாடகம், விடுகம்பி, கருநாண், இரட்டைவாளி, பாகுவலயம், ஏகாவலி, வன்னசரம் என்பன ஆபரணங்கள்.

502. கொள்ளும் எனைப்பல கோலம் - கொள்ளத்தக்க ஏனைப் பல கோலங்களையும். கொண்டிட - கொள்வோமாயின். வேலையும் மீதூர - நேரமும் அதிகரிக்க. உள்ளும் வெதும்பும் - பசியும் அதிகமாகும். (ஆதலால்) புறம்பேணுது- வெளிக்கோலம் செய்துகொண்டிராமல்.

504. பிண்டிதீட்டி - கோலமிட்டு. கடுப்பா - விரைவாக.

506. மாத்தாழி - (அடுப்பிலேற்றிய) பெரியதாழி. தம்மின் -நிரப்புங்கள்.

508. உகிரின் உப்பு - உகிராகிய உப்பு.

514 - 31. பேய்கள் அரிசி குத்தும் பொழுது பாடும் உலக்கைப்பாட்டு. இதனுள், முதலிலே தேவியைப் பாடிப் பின்னர் விசயதரனைப் பலபடியாகப் புகழ்ந்துபாடுதலும், இடையே கருணாகரத் தொண்டைமானைச் சேர்த்திருத்தலும் காண்க.

535. களப்பரணிக்கூழ் - கலிங்கப்போர்க்களத்தே பரணிநாளில் அட்ட கூழ். கலிங்கத்துப்பரணி என்னும் பெயர்க்காரணமும் ஈண்டு நோக்கத்தக்கது. கை - வீரர்கை: (தா. 537 பார்க்க.) "தொடித்தோட்கை துடுப்பாக, ஆடுற்ற வூன்சோறு" (மதுரைக்காஞ்சி. ௩௪-௫); "தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு" (சிலப். உசு : உசா.) குளம்பு - குதிரைக்குளம்பு.

536. வைப்பு - புதையல். காணும், முன்னிலையசை.

541. விடம்பைநா - கமர்பட்ட நாக்கு.

542. பண்டும் இகும் ஓர் எனப் பிரிக்க. இகுதல் - அழிதல்.

547. பெருக்கிக்கொள்ளீர் - பலவாகச் செய்துகொள்ளுங்கள். இக்கலங்கள் கூழெடுத்துப் பரிமாறுதற்கு.

548. பதம்பெற்றார்க்கு - சாமீப்பிய சாருப்பிய பதவி பெற்றவர்களுக்கு. விழிக்கனலும் நிணமும், முறையே பகல்விளக்கும் பாவாடையுமாக.

549. கூழைவாரீர் - கூழையூற்றுங்கள்.

551. மணலூர்ப்போர்: பாண்டியரைவருடன் விசயதரன் செய்தபோர்; தா. 368 ; சோழவமிச. பக். 95 பார்க்க.

554. முழுத்தோள் போர்த்தல்-கழுத்தளவும் ஆடைபோர்த்துக் கொள்ளுதல். "பிரியாது வண்டுகிலாடை போர்த்தவர்" என்றார் ஸ்ரீதிருஞானசம்பந்தமூர்த்தியும்; (சீகாழி: பண் - சீகாமரம்: க0. ஆடைபோர்த்துக்கொள்ளுதலும், கஞ்சியுண்ணுதலும் பௌத்தர்க்கு வழக்கமென்பதனை ஸ்ரீசம்பந்தர் தேவாரத்திற் பலவிடங்களிலுங் காணலாம். மேலும் அவர் திருவெழுகூற்றிருக்கையில் "அறுவகைத்தேரரும்" என்றருளினதனாற்பௌத்தர் அறுவகையினர் என்பதும், திருவையாற்றுப் பதிகத்தில் "துவராடையர் தோலுடையார்கள்" எனஅருளினதனால் அவருள் ஒருசாரார் தோல்போர்ப்பர் என்பதும் பெறப்படுதலால் 'முழுத்*தோல் போர்க்கும்புத்தற்கு' என்னும் பாடமும் கொள்ளத்தக்கதேயாம். புத்தப்பேய் நாக்குழற (அதற்கு) மூளைக்கூழை வாரீர் எனக் கூட்டுக.

555. பைதுஅல்-பசியதல்லாத=உலர்ந்த. பெருர்பேயாதலால் ஆட்டின் உலர்ந்த இறைச்சி வயிற்றுக்குப் பற்றாது உலர்ந்துநின்றது.

558. இன்னஞ்சொரியீர் என்றதனால் முன்னே ஊற்றினது கொண்டு பசியினாலுண்டாகிய காதடைப்பு நீங்கிற்றென்பது பெறப்படும்.

560. நோக்கப்பேய் - தாழ்ந்தசாதிப்பேய்.

562. பரணி நட்சத்திரம் போர்க்குச் சிறந்ததாதலால் 'பரணிக்களம்' என்னப்பட்டது. 'பரணிக்கூழ்க் களம்' என மாற்றியுரைப்பினும் அமையும். பரணி - ஒருபாத்திரம். (இரண்டாம் அடி.)

---

* இத் தோல்போர்த்தலையும் (455) குஞ்சிமுண்டித்தலையும் பற்றி, பௌத்தமதஆராய்ச்சியுள்ள ஸ்ரீமான் எப். உட்வர்டு [F. Woodward Esq., M. A., (Cantab) Adyar.] துரையவர்கள் தெரிவித்ததாவது:—"பாலிபாஷையிலுள்ள தீகநிகாய (தீர்க்கநிகாயம்) என்னும் பௌத்த கிரந்தத்தால்,பௌத்தரில் ஒருசாரார் தோல் போர்த்துக்கொண்டதனாலே 'சம்மவாஸின்' (சர்மவாஸி) எனப் பெயர்பெற்றிருந்தனரென்பதும், அங்குத்தரநிகாய (அங்கோத்தரநிகாயம்) என்னும் கிரந்தத்தால், மற்றொருசாரார் முண்டனம் பண்ணிக்கொண்டதனாலே 'முண்டசாவகா' எனப் பெயர் பெற்றிருந்தனர் என்பதும் தெரியவருகின்றன."

563. உரித்தோல் - உரியாகியதோல். தோற்பட்டைக்கு - தோலாலாகிய இறைகூடையில்.

567. உந்திபறத்தல் - குழூங்கூடிய மகளிரின் விளையாட்டில் ஒன்று.

568. நான்முகனுர்க்கு நான்குவாயிருந்தும் அவர் இக்கூழுண்ணும் பேறு பெற்றிலர் என்பது கருத்து.

571. பெருக்க - மிகுதியாக. தாம்பூலம் பிழைக்கச்செய்தல் - வெற்றிலை பாக்குப் புரையேறச்செய்தல். தலைமயிரை மோந்துபார்த்தால் புரையேறின துன்பம் நீங்கும் என்பர்.

491 - 571. பேய்களின்கூற்று.

572. என்று - எனச்சொல்லிக்கொண்டு (கூழ் அட்டு உண்டு.)

(490) அணங்கு (462 - 89) களங் காட்டி (490) 'கூழ்அடும்' என்று அருள (பேய்கள்) கும்பிட்டு (491) ஒன்றையொன்று கூவியழைத்து (492 - 571) 'பல்லை விளக்கிக்கொள்ளீர்............சிரத்தின்மயிரை மோவீர்' (572) என்று, களித்து......நடமிட்டன என்க.

573. வாசி - அம்பு அல்லது தாங்கள் ஏறிவந்தகுதிரை. தூசி ?

574. போகபுரந்தரன்-எல்லாச்செல்வங்களையும் அனுபவிக்கின்ற இந்திரன்போன்ற விசயதரன். தண்டின் இருகையும் - சைனியத்தின் இரண்டுபக்கமும்.

575 - 7. பேய்கள் நடிக்கும் நாடகங்கள்.

578. இனைய இனைய நாடகங்கள் - இவைபோன்ற பிறநாடகங்கள். நாடகம்-குறுக்கல்விகாரம். புரந்தரனனைய - இந்திரனைப்போன்ற. புகழ்தும் என்று-புகழ்வோமெனப் பேய்கள் ஒன்றோடொன்று சொல்லிக்கொண்டு. 'தொடங்கி' என்பது (579) 'வாழ்த்தின' என்பதனோடு முடியும்.

579. உபயமெனும் பிறப்பாளர் - இருபிறப்பாளர்=அந்தணர் ; முதல் மூன்றுவருணத்தார் எனினும்ஆம். அபயம் என - அபயம் என்று முறையிட்டுக் கொள்ள. புகுந்து - தான்போய். புகுந்து அஞ்சல் என்றது, தா. 248 - 9-ல் காண்க.

580. வசையைப்பொறுத்தான் - கண்ணபிரான் ; ஈண்டு விசயதரனைக் குறித்து நின்றது.

581. கன்னி - குமரியாறு. இதனால், தெற்கே கன்னியாகுமரி முதல் வடக்கே கங்காநதிவரை விசயதரனது ஆட்சிக்குட்பட்டிருந்ததென்பது பெறப்படுகின்றது.

582. ஆழிகளேழும் - ஏழுசமுத்திரங்களும். ஓர் ஆழி - ஒப்பற்ற ஆஞ்ஞாசக்கரம். உலகுய்யவந்தான் - விசயதரன்.

583. கரிகால்வளவன், சோழராசபாரம்பரியத்தை இமயமலையில் எழுதிச்சிறப்புற்றவனுதலால் அவனை வாழ்த்தின. ஈண்டுக் கரிகாலன் என்பது விசயதரனையே குறித்து நின்றது எனினும் அமையும் ; தா. 260 பார்க்க.

584 - 5. இவற்றிலுள்ளவை சயங்கொண்டார் கூறிய வாழ்த்து.

**அரும்பொருள்விளக்கம் முற்றும்.**

---

உ

கலிங்கத்துப்பரணியிற்கண்ட

# சோழவமிசாவளி.

திருமால்
பிரமன்
மரீசி
காசிபன்
விவஸ்வான்
[1]மனு
இக்குவாகு
[2]ககுத்ஸ்தன்
[3]மாந்தாதா
[4]முசுகுந்தன்
[5]பிருதுலாக்ஷன்
[6]சிபி
சுராதிராசன்
(முதற்சோழன்)
இராசகேசரி
பரகேசரி
கிள்ளிவளவன்
காந்தன்
சுரகுரு
சித்திரன்
சமுத்திரஜித்
பஞ்சபன்
வாதராசனைப் பணிகொண்டவன்
தூங்கெயிலெறிந்தவன்
உபரிசரன்
பாண்டவர்படைக்கு உதவி செய்தவன்
சாலீசுகன்
செங்கணான்
கரிகாலன்
விண்ணில் வேழமுகைத்தவன்
பராந்தகன்
இராசராசன்
கங்கைகொண்டசோழன்
இராசாதித்தன்
இராசேந்திரதேவன்
(இராசாதித்தன் தம்பி)
இராசமகேந்திரன்
(இராசேந்திரதேவன் மகன்)
வீரராசேந்திரன்
(இராசேந்திரதேவன் தம்பி)
விசயதரன்

---

1 ஆன்கன்றினுயிர்க்கு மகனுயிரைச் சமமாகநினைத்து முறைசெய்தவன். 2 இந்திரனையிடபமாக்கி யேறினவன். 3 புலியும்மானும் ஒருதுறையில் நீருண்ணவைத்தவன். 4 அசுரரைவென்று அமராவதியைக்காத்தவன். 5 தேவர் அமுதுண்ணச்செய்தவன். 6 சரணடைந்த புறவைக் காக்கத் தன்னுடலின்தசையை அரிந்துவைத்தும் பற்றாமையால் துலையேறினவன்.

* இவன்முதலாக வந்த சோழர்களின் அருஞ்செயல்களை அடுத்தபக்கத்திற் காண்க.

உ

### சோழவரசர் செய்த

# அருஞ்செயல்கள்,

[எண்—தாழிசையெண்.]

178. சோழமண்டல மமைத்தது...............சுராதிராசன்.

179. காலனுக்கு வழக்குரைத்தது...............கிள்ளிவளவன்.

179. காவிரிப்புனல் கொணர்ந்தது...............காந்தன்.

<table>
<tr><td>145. யமன்பால் தூதுவிட்டது</td><td rowspan="3">...............சுரகுரு.</td></tr>
<tr><td>163. தன் முனிவுக்குப் பேயும் அஞ்சச் செய்தது</td></tr>
<tr><td>179. யமனைவென்றிகொண்டது</td></tr>
</table>

180. இந்திரனைக் கொடியிற் புலியாகவைத்தது..சித்திரன்.

180. கடலோடு கடல் கலக்கவிட்டது............சமுத்திரஜித்.

180. குருதியுண்ண வளித்தது ................ பஞ்சபன்.

180. காற்றை யேவல்கொண்டது ...........................

181. தூங்கு மூன்றெயிலெறிந்தது...............................

181. ஆகாயத்தில் விமானமுயர்த்தது..........உபரிசரன்.

182. நாககன்னிகையை மணந்தது .............சாலீசுகன்.

<table>
<tr><td>165. செண்டுகொண்டு இமயத்தைத்திரித்தது</td><td rowspan="5">கரிகாலன்.</td></tr>
<tr><td>184. காவிரிக்குக் கரை கட்டுவித்தது</td></tr>
<tr><td>184. முகரியைக் கண்கொண்டது</td></tr>
<tr><td>185. பட்டினப்பாலை கொண்டு 16 - லட்சம் பொன் பரிசளித்தது</td></tr>
<tr><td>195. இமயமலையில்சோழராசபாரம்பரியத்தை எழுதியது</td></tr>
</table>

187. யானையை ஆகாயத்திற் செலுத்தியது....................

189. கங்கையுங் கடாரமுங் கொண்டது......இராசேந்திரன்.

## கலிங்கத்துப்பரணித்

# தாழிசை முதற்குறிப்பகராதி.

[எண்—தாழிசையெண்.]



# அரும்பத முதலியவற்றின் அகராதி.

[எண்—தாழிசையெண்.]

(கலிங்கத்துப்பரணி)

# SELECT OPINIONS.

## RAO SAHEB DR. S. KRISHNASWAMI AIYANGAR,

## M.A., PH. D., M. R. A. S., F. R. H. S., F. M. U.

*Professor of Indian History and Archaeology, Madras University.*

*26th Aug. 23.*

I have read the new edition of the Kalingathu Parani brought out by Pandit A. Gopala Aiyar of the National High School, Adyar. The new edition is a great improvement upon the old based, as it is, upon a far larger number of manuscripts, some of these not hitherto used. The readings adopted are judiciously selected, the variants being given. There are new features in these of which two points deserve mention. The Kalinga ruler attacked is stated to be Anantavarman in the new edition; and Vikrama Chola's part is explicitly stated. The usefulness of the edition is enhanced by the addition of notes which are of value. It is a welcome addition to critical editions of Tamil classics, which are not as many as they should be. It is to be hoped, that the demand for good editions will be adequate to stimulate enterprise similar to this.

---

## M. R. RY. DIWAN BAHADUR

## S. BAVANANDAM PILLAI AVL., I.S.O., F.R.H.S., M.R.A.S.,

*Madras, 26—8—'23.*

Mr. A. Gopala Aiyar, Tamil Pandit of the National High School, Adyar, very kindly sent me a copy of Kalingathu Parani, which was recently edited and published by him. A perusal of the book impressed me with his deep and laborious researches for years past.

Many years ago, Kalingathu Parani was composed in verse by a great Tamil Poet Jayan-Kondan at the request of his namesake and Patron. Although there were three printed editions of this book, an accurate edition of it was a long-felt want. Pandit Gopala Aiyar has placed the Tamil world under a deep debt of gratitude by bringing out the present edition with comparative accuracy together with able and useful annotations. He deserves every encouragement.

---

M. R. RY.

S ANAVARATAVINAYAKAM PILLAI AVL., M.A., L.T.

*Chairman, Tamil Lexicon Committee, Madras University.*

12—8—'23.

The *Kalingathu Parani* is much valued not only as a poem but as a work containing useful historical information. But a really good edition of it has long been a desideratum, and Mr. A. Gopala Aiyar deserves to be congratulated on having brought out a good edition of the work with critical apparatus.

---

M. R. RY.

A. CHAKRAVARTHI, M.A., I.E.S.

*Professor of Philosophy, The Presidency College, Madras.*

27—8—23.

I read with great pleasure your book " Kalingathuparani" a Tamil classic. I congratulate you for this excellent edition which you have brought out. The Introduction, foot-notes and the appendix explaining important terms and events testify to the great care and the amount of scholarship that are bestowed upon the editing of this work. I hope the work will be useful to the students of South Indian History in general and to those engaged in research work relating to the Cholas in special. Thanks of the Tamil Students are due to you for your service to the Tamil Literature.

---

NEW INDIA.

14*th July* 1923.

Kalingathuparani of Jayankondan with Annotations by Pandit A. Gopala Aiyar.

The annotator in bringing out this new edition has taken much pains in examining several manuscript editions, and, in removing several errors, which had crept in the earlier printed publications. The annotation is exhaustive and modern, and is of such a nature, that even people with but an elementary knowledge of literary Tamil will understand the Text with its help.

## செந்தமிழ் : தொகுதி உக, பகுதி எ.

**கலிங்கத்துப்பரணி.**—இது வீரச்சுவையை முதன்மையாகக் கொண்டு அதற்கங்கமாகப் பிறசுவைகளும் விரவிவரச் சொன்னயம் பொருணயங்கள் பொருந்தப் பாடப்பட்டதொரு சிறந்த பிரபந்தமாயிருந்தமையால் இதற்கு முன்னும் இரண்டு மூன்று முறை தக்க பண்டிதர்களாற் பதிப்பிக்கப்பட்டுள்ளது. அதை இப்போது ஸ்ரீமத் பண்டித அ. கோபாலையரவர்கள் பின்னும் பல ஏட்டுப் பிரதிகளோடு ஒப்பு நோக்கி வேண்டிய திருத்தங்கள் செய்து நன்கு பதிப்பித்திருக்கிறார்கள். இதற்குச் சிலாசாசனலிகிதங்களிலிருந்தும் பல நூல்களிலிருந்தும் கிடைத்த விஷயங்களைக் கொண்டு, காலம், சரித்திரம் முதலியவற்றோடு பொருள் விளங்கும்படி அரும்பொருள் விளக்கம் என்னும் ஒருரையும் அரும்பத அகராதி முதலியனவும் முகவுரையும் நன்றாய் எழுதிச் சேர்க்கப் பட்டிருக்கின்றன. * * * * *

## ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் : தொகுதி 3, பகுதி 7.

* * * * பெருமை வாய்ந்த இந்நூலை, பண்டித ஸ்ரீ கோபாலையரவர்கள் தெளிவுற அச்சிற் பதிப்பித்துத் தந்தாராதலினால், அதன்கண் அமைந்த 585 பாடல்களையும் ஒரு நாளெல்லையினுள்ளே படித்து இனிமையுறுவதும் ஆயிற்று. * * * * தமிழ்மேல் ஆர்வமுள்ளாரனைவரும் விரும்பிக் கற்க வேண்டிய இந்நூல் யாவர்க்கும் பயன்படும்படி பதிப்பாசிரியரவர்கள் சிறந்ததோர் அரும்பதவுரை யெழுதியிருக்கிறார்கள். சயங்கொண்டார்வரலாறு, விசயதரன் வரலாறு முதலியன மிகவும் தெளிவாக எழுதப் பட்டிருக்கின்றன. * * * * *

## நவசக்தி : 6—7—23.

* * * * இப்பதிப்பில் அரும்பொருள் விளக்கமும் குறிப்புரைகளும் நன்கு விளங்க வைக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலைப் பதிப்பித்துள்ள முறை சாலவும் போற்றத் தக்கதாயிருக்கிறது. இந்நூல் தமிழறிஞர் ஒவ்வொருவருடைய புத்தகசாலையிலும் இருக்க வேண்டுவது மிகவும் அவசியம்.

## தனவைசிய ஊழியன் : 10—8—23

* * * * * இது இதற்குமுன் தக்க பண்டிதர்களால் மும்முறை பதிப்பிக்கப் பட்டிருப்பினும். இதனது அருமை தோன்ற இப்பதிப்பில் பதிப்பாசிரியர், காலம், சரித்திரம், அரும் பொருள் விளக்கம் அரும்பத வகராதி, முதலியனவும், இந்நூலைப் பற்றிய சகல விவரங்களடங்கிய முகவுரை, முன்னுரைகளுங் கூட்டி நல்லவெண்மையான உயர்ந்த தாளில் பதிப்பித்திருக்கிறார். இது தமிழர் வீரத்தை நன்குபோற்றும் ஒவ்வொரு அபிமானியின் வீட்டிலும் இருத்தல் அவசியம். இது தமிழ் நாட்டுச் சங்கப் புத்தக சாலைகடோறும் இருக்கவேண்டியது அவசியத்தினும் அவசியமாகும்.

## லோகோபகாரி : 19—7—23.

* * * * * இந்நூலின் பதிப்பு இரண்டு மூன்று இதற்கு முன் வெளிவந்திருப்பினும் அவற்றில் பலபிழைகளும் சரித்திரமாறுபாடுகளும் பொதிந்து கிடந்தன. இப்பொழுது இதனைப பல பிரதி ரூபங்களைக் கொண்டு பரிசோதித்து அவற்றை யெல்லாம் நன்கு திருத்திச் சுத்த பாடங்

கண்டுபிடித்து 'அரும்பொருள் விளக்கம்' என்னும் ஓர் உரையும் அரும்பத அகராதி முதலியனவும் எழுதிச் சேர்த்துச் சென்னை அடையாறு நாஷனல் ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் அ. கோபாலையர் மிகஅழகாகப் பதிப்பித்திருப்பது கண்டு மகிழ்கின்றோம். இவ்வுரையில் சோழராச பாரம்பரியத்தைப் பற்றி நன்குவிளக்கியிருப்பதுடன் முடிபுகளும் ஆங்காங்குக் காட்டப்பட்டிருக்கின்றன. சுருங்கச் சொல்லின் இந்நூலை ஐயந்திரிபறக் கற்றற்கு இவ்வுரை யேற்றதாயிருக்கும் என்னலாம். பதிப்பு முறையும் பைண்டும் மிகச் சிறப்பாக அமைந்திருக்கின்றன. தமிழ்மக்களனைவரும் இதனைப் பெற்றுப் படித்து, இது போன்ற பழைய நூல்களை மேன்மேலும் வெளியிடும்படி பதிப்பாசிரியருக்கு ஊக்கமூட்டுவார்களென்று நம்புகின்றோம்.

---

குறிப்பு:—மேற்கண்ட கலிங்கத்துப்பரணியும் அடியிற் காட்டப்படும் திருத்தமான பதிப்புப் புத்தகங்களும் என்னிடம் பெற்றுக் கொள்ளலாம்.

## (புத்தகங்கள்)

| | ரூ | அ. |
|---|---|---|
| கலிங்கத்துப் பரணி (அழகான கிலிட்டுப் பைண்டு) | 1 | 12 |
| சளுக்கிய விக்கிரமாதித்தன் சரித்திரம்: கலிங்கத்துப் பரணியிலுள்ள சரித்திர பாகம் படித்தற்கு அனுகூலமான வசனநூல்; ஆசிரியர் ஸ்ரீமான் அ. வா. வேங்கடராமஐயர், M.A., L.T. | 1 | 0 |
| தூத கடோத்கசம்: பாஸமகாகவி யியற்றிய வடமொழி நாடகத்தின் அழகான மொழிபெயர்ப்பு. | 0 | 5 |
| மேருமந்தர புராணம்: சீவகசிந்தாமணி போன்ற சிறந்த இலக்கியம்; புதிய உரை, நூலாசிரியர் வரலாறு, சமயதரிசனம், கதைச்சுருக்கம் முதலியவற்றுடன் கூடியது. பதிப்பாசிரியர் ஸ்ரீமான் அ. சக்கரவர்த்தி, M.A., I.E.S. | 6 | 0 |
| நன்னூற் காண்டிகையுரை (சே. கிருஷ்ணமாசாரியார் பதிப்பு) | 1 | 8 |
| [சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு] | | |
| தொல்காப்பியச் சொல்லதிகாரம், சேனாவரையம் | 3 | 8 |
| சோமேசர் முதுமொழி வெண்பா: விரிவுரை, கதைக குறிப்பு முதலிய வற்றுடன் | 1 | 12 |
| நளவெண்பா: அரும்பொருள் விளக்கவுரை முதலியவற்றுடன் | 1 | 0 |
| ௸ ௸ மாணவர் பதிப்பு | 0 | 12 |

இங்ஙனம்

**அ. கோபாலையன்.**

விலாசம்:—

பண்டித அ. கோபாலையர்,
'செந்தமிழ் மந்திரம்'
இராபர்ட்ஸன் பேட்டை,
மயிலாப்பூர், சென்னை.